மலர் 16 இதழ் 18

# கல்கி

துன்முகி ஹு கார்த்திகை 17

டிசம்பர் 2 — 1956

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 16 } தமிழ்த்திரு நாடு தன்னைப் – பெற்ற { துன்முகி ஆண்டு
இதழ் 18 } தாயென்று கும்பிடடி பாப்பா – பாரதியார் { கார்த்திகை 17

# அரியலூர் பயங்கரம்!

வார்த்தைகளால் வர்ணிக்க இயலாததும், மனத்தினால் நினைக்க முடியாததுமான கொடிய பயங்கரம்!

சென்ற 22–11–56 வெள்ளிக்கிழமை விடியற்காலை அரியலூருக்கருகில் உள்ள மருதையாற்றுப் பாலத்தில் நடைபெற்ற மாபெரும் ரயில் விபத்தும் அந்த விபத்தில் உயிர் இழந்த 147–க்கு மேற்பட்ட பிரயாணிகளின் துர்ப்பாக்கிய முடிவும் கற்பனையில்கூடக் காண முடியாத பயங்கரம்!

குழந்தையை விட்டுப் பிரிந்த தாய், தாயை விட்டுப் பிரிந்த சேய், கணவனை விட்டுப் பிரிந்த மனைவி, மனைவியை விட்டுப் பிரிந்த புருஷன், பச்சிளம் பாலகர்கள், சின்னஞ்சிறு குழந்தைகள், வாலிப வயதினர், கை கால் இழந்தவர்கள், குற்றுயிராய்க் கிடப்பவர்கள், அப்பப்பா, காதால் கேட்க முடியாத என்னென்ன பயங்கரம்!

இந்த மாபெரும் அரியலூர் விபத்தையும் அதில் மரணமடைந்தவர்கள், அபாயமடைந்தவர்கள், காணப்படாதவர்கள், கண்டெடுக்கப்படாதவர்கள், அடையாளம் தெரியாதவர்கள், ஆஸ்பத்திரியில் இருப்பவர்கள் முதலிய துர்ப்பாக்கியசாலிகளின் விவரங்களையும் பரிதாபமான கோர சம்பவங்களையும் தினப் பத்திரிகைகளில் படிக்கும்போது உள்ளம் திடுக்கிட்டோம். நெஞ்சம் பதறினோம்; கண்ணீர் பெருக்கினோம். பாவம்! யார் யார் என்னென்ன காரியமாகச் சென்றார்களோ? என்னவெல்லாம் மனத்திலே எண்ணிக் கொண்டு போனார்களோ? அவ்வளவு பேர்களுடைய எண்ணங்களும் ஆசாபாசங்களும் அவர்களுடனேயே அழிந்து ஒழிந்து போய் விட்டனவே!

அகால மரணமுற்றவர்களின் பரிதாப முடிவை எண்ணி ஆறாத் துயரமடைகிறோம்; அவர்களுடைய ஆத்ம சாந்திக்காக ஆண்டவனைப் பிரார்த்திக்கிறோம். இந்த விபத்தில் பலத்த காயமுற்று ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வருகிறவர்கள் சீக்கிரமே குணமடைய வேண்டுமென்று இறைவனை வேண்டுகின்றோம்!

விபத்துக்குள்ளானவர்களின் பட்டியலைப் பத்திரிகைகளில் படிக்கும்போது நாம் அடையும் வேதனை கொஞ்ச நஞ்சமல்ல. சமீபகாலத்தில் ஏற்பட்ட புயல், வெள்ளம் போன்ற இயற்கையின் உற்பாதங்களினால்கூட இத்தனை உயிர்ச் சேதங்கள் ஏற்படவில்லை என்று தோன்றுகிறது.

ரயில் விபத்துக்குள்ளானவர்களின் உறவினர்களுக்கும் சிநேகிதர்களுக்கும் நமது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம். விபத்து நடைபெற்ற இடத்துக்குச் சர்க்கார் அதிகாரிகள் வந்து உதவி செய்யும்வரை காத்திராமல் சுற்றுப்புறத்திலுள்ள கிராமத்து மக்கள் விரைந்தோடி வந்து பேராபத்தில் சிக்கித் தவித்த பலரைக் கரை சேர்த்துக் காப்பாற்றி யிருக்கிறார்கள். இன்னும் பல உதவிகளையும் செய்திருக்கிறார்கள். இந்தப் பரோபகாரிகளின் சமய சஞ்சீவியான உதவிகள் என்றென்றும் மறக்க முடியாதவை. பொன்னெழுத்தில் பொறிக்க வேண்டியவை. ஆபத்தில் உதவிய அவர்கள் எல்லாருக்கும் நமது மனப்பூர்வமான நன்றியையும் பாராட்டுதலையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

** ** ** **

சென்ற ஆண்டு இறுதியில் ஹைதராபாத் ராஜ்யத்தில் மகபூப் நகருக்கு அருகில் இத்தகைய பெரும் ரயில் விபத்து ஒன்று ஏற்பட்டதையும் விபத்தில் நூற்றுக் கணக்கான பிரயாணிகள் இறந்து போனதையும் நேயர்கள் அறிவார்கள்.

மேற்படி மகபூப் நகர் ரயில் விபத்தும் ஒரு பழைய பாலத்திலேயே நிகழ்ந்தது. காட்டாற்றின் பிரவாகத்தினால் பாலம் சேதப்பட்டதே விபத்துக்குக் காரணமாயிற்று.

அரியலூர் விபத்துக்கும் வெள்ளப்பெருக்கே காரணம் என்று அறிகிறோம். பாலத்துக்கு மூன்று மைலுக் கருகாமையில் உள்ள ஒரு சிறு ஏரி உடைப்பெடுத்ததால் மருதையாற்று வெள்ளத்தோடு அந்த ஏரி வெள்ளமும் சேர்ந்து கொண்டது. இதனால் மருதையாற்றுப் பாலத்தின் தென்முகப்புக்கரை எழுபத்தைந்து அடி அரிக்கப்பட்டு அதன் விளைவாகவே விபத்து நேர்ந்துள்ளது.

வெள்ளத்துக்குக் காரணம் எதுவாயிருந்த போதிலும் பாலங்களையும் பாலத்தின் கரைகளையும் காப்பாற்ற வேண்டியது சர்க்காரின் கடமையாகிறது.

மழைக் காலத்தில் ஏரிகள் உடைப்பெடுத்துக் கொள்வதும், ஆறுகளில் வெள்ளப் பெருக்கெடுத்து ஓடுவதும் அதனால் பாலக் கரைகள் சேதப்படுவதும் யாரும் சாதாரணமாக எதிர்பார்க்கக்கூடிய நிகழ்ச்சிகள் தானே? அதிலும் ரயில்வேக்காரர்கள் நிச்சயம் எதிர்பார்க்க வேண்டியதுதானே ?

மழையினால் ஏற்படும் வெள்ளங்கள் மோதி அழிந்து விடும்படியாக எந்த இன்ஜினீயர்களும் பாலங்களை அமைக்க மாட்டார்கள்.

தவிர, சரியான நிலையில் உள்ள எந்தப் பாலங்களும் வெள்ளத்தின் சக்தியினால் அசைந்து விடாது. பாலங்களின் சீர்கெட்டுப் போன நிலைமையும், அவற்றை இன்ஸ்பெக்டர்கள் சரியானபடி கவனிக்காமல் விட்டு விடுவதாலுமே விபத்துக்கள் நேருகின்றன.

ரயில் பாதையில் உள்ள பாலங்களையும் பாலக் கரைகளையும் அவ்வப்போது பரிசோதித்து வருவதற்காக ரயில்வேயில் தனி இலாக்காவே ஒன்று இருந்து வருகிறது. இந்த இலாக்காவைச் சேர்ந்த உத்தியோகஸ்தர்கள் தங்கள் கடமைகளைச் சரிவரச் செய்திருந்தால் சமீபகால ரயில் விபத்துக்களை நிச்சயம் தவிர்த்திருக்கலாம்.

விபத்து நேர்ந்தவுடன் ஜனாதிபதி முதல் சர்க்கார் அதிகாரிகள் வரை அனுதாபம் தெரிவிப்பதும், அறிக்கைகள் விடுவதும், பார்லிமெண்டில் அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றுவதும் சம்பிரதாயமான காரியங்களாகி விட்டன. அனுதாபத்தினாலோ, அறிக்கைகளினாலோ துன்பங்கள் தீர்ந்து விடாது அல்லவா ?

அரியலூர் விபத்து ஏற்பட்டதற்குக் காரணங்கள் எதுவாக இருந்தபோதிலும், அதன் முழுப் பொறுப்பும் தம்மையே சேர்ந்தது என்று கூறி ரயில் மந்திரி ஸ்ரீ லால்பகதூர் சாஸ்திரி தம்முடைய மந்திரிப் பதவியை ராஜிநாமாச் செய்து விட்டார். இதை நமது பிரதமர் நேருஜியும் ஜனாதிபதியும் ஆமோதித்து அங்கீகாரம் செய்துள்ளார்கள். லால் பகதூர் சாஸ்திரியின் ராஜிநாமா அவருடைய நேர்மையையே எடுத்துக் காட்டுகிறது. பொறுப்பு வாய்ந்த சர்க்கார் செய்ய வேண்டியகாரியத்துக்கு இது ஒரு சிறந்த உதாரணமாகும். ரயில் மந்திரி ராஜிநாமாவோடு எல்லாம் முடிந்து விட்டது என்று எண்ணி விடாமல் மீண்டும் இத்தகைய விபத்துக்கள் நேராமலிருப்பதற்கு வேண்டிய மனித முயற்சிகள் அவ்வளவும் செய்யப்படும் என்று சர்க்கார் உறுதி கூறியிருப்பதை வரவேற்கிறோம்.

முதலில் பந்தோபஸ்தாக ரயில் பிரயாணம் செய்வதற்கான ஏற்பாடுகளைச் சர்க்கார் செய்தாக வேண்டும். முக்கியமாக மழைக் காலங்களில் இம்மாதிரியான பாலங்களின் இரு கரைகளையும் நிரந்தரமான காவலாளர்களைப் போட்டுக் கண்காணிக்க வேண்டியது அவசியம்.

அரியலூர் சம்பவத்தை நேரில் விரைந்து சென்று பார்த்து நிலைமையைத் தெரிந்து கொண்டுள்ள நமது உதவி ரயில்வே மந்திரி ஸ்ரீ அளகேசன் அவர்களே இந்தப் பாலக் காவல் யோசனையை வெளியிட்டிருக்கிறார்.

இதைக் காரியத்தில் நிறைவேற்றுவதில் அதிகக் கஷ்டம் ஒன்றும் இருக்காது; பொருள் நஷ்டமும் அதிகம் ஆகிவிடாது. ரயில் கவிழ்வதால் ஏற்படக்கூடிய பொருள் நஷ்டங்களையும் உயிர் நஷ்டங்களையும் காட்டிலும் வேறு என்ன பெரிய நஷ்டம் இருந்துவிட முடியும்?

# தேசியமயம் — நாட்டுக்கு நல்லதல்ல

நமது தேசம் சுதந்திரம் அடைந்ததும், காங்கிரஸ் கட்சி பதவியேற்றபிறகு, நாட்டின் பெரிய தொழில்களையும் வியாபாரங்களையும் 'தேசிய மய' …

இருந்து வந்தார்கள். இப்போது மேற்படி ஸ்தாபனங்களைச் சர்க்கார் எடுத்து நடத்தத் தலைப்பட்டவுடன் அந்தப் பழைய நிலை மாறி …

# லாப நஷ்டக் கணக்கு!

லாபம்

1. ஆசியாவின் ஒரு பகுதியில் ஏகாதிபத்திய ஆதிக்கம்

நஷ்டம்

1. உலகத்தின் எதிர்ப்பு
2. காமன்வெல்த் உறவில் பாதகம்
3. அமெரிக்காவின் கோபம்
4. மத்திய கிழக்கின் ஆவேசம்
5. ஆசிய நாடுகளின் பகைமை
6. பெட்ரோல் பஞ்சம்
7. வியாபாரச் சிதைவு
8. பிரதம மந்திரி பதவிக்குத் தலைவலி

ஈடன்

புத்தர் காட்டிய ஒளி

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி

ஜெயப்பிரகாச நாராயண்

கண்மூடித்தனமாக ருஷ்யாவைப் பின்பற்றியது தவறு என்பதை நாங்கள் உணர்ந்து அதற்காக வருந்துவதாகக் கம்யூனிஸ்ட் கட்சி காரியதரிசி திரு அஜாய் கோஷ் திரு ஜெயப்பிரகாச நாராயணனுக்கு எழுதியுள்ளார்.

தயவை நாடிச் செல்லும்படியான நிலை நிச்சயம் ஏற்பட்டு விடும்.

சுதந்திரமாகத் தொழில் நடத்தக் கூடிய டாக்டர்களும், வக்கீல்களும் கூட இப்போது ஆட்சி புரியும் காங்கிரஸ் கட்சியின் தயவை எதிர்பார்க்க வேண்டியதா யிருக்கிறது.

ஆகவேதான், வெறும் தத்துவ ரீதியாகப் பேசித் தொழில்களைச் சர்க்கார் மயமாக்கி விடுவது தவறு என்பதை எடுத்துக்காட்ட விரும்புகிறோம். இதன் காரணமாக, பொதுமக்களும் வியாபாரிகளும், தொழிலாளர்களும் நடுத்தர மக்களும், எல்லாருமே சுதந்திர உணர்ச்சி இழந்து சர்க்காருக்கு அடங்கி, சர்க்காரை நடத்தும் காங்கிரஸ் கட்சியோடு ஒத்துப் போகும் மனப்பான்மையை அடைந்து வருகிறார்கள். காங்கிரஸ் சர்க்காரின் தேசிய மயக் கொள்கையினால் விளையக்கூடிய பலன் இது தான். இந்த நிலைமையை நீடிக்க விட்டால் காங்கிரஸ் கட்சியின் எதேச்சாதிகாரப்போக்கு பெரிதாக விசுவரூபம் எடுத்துவிடும். தொழில்களையெல்லாம் ஒரு கட்சி ஆக்கிரமித்துக் கொண்டு விட்டால் அதன் சக்தி ராக்ஷத சக்தியாகி விடும். காங்கிரஸ் கட்சியாயினும் வேறு எந்தக் கட்சியாயினும் அது மாற்ற முடியாத சக்தி பெற்று விட்டால் அபாயமாகும்.

ஆகவேதான் நாம் காங்கிரஸுக்கு எதிராக ஒரு பலம் வாய்ந்த கட்சியை அமைக்க வேண்டுமென்று அபிப்பிராயப் படுகிறோம். காங்கிரஸுக்கு பலமான ஒரு எதிர்ப்புக் கட்சி இருந்தால்தான் ஜனநாயக முறையில் ஆட்சி நடைபெறும் என்று நமது ஒப்பற்ற தலைவர் ராஜாஜி அபிப்பிராயப்படுகிறார். பண்டித ஜவாஹர்லால் நேரு போன்ற மாபெரும் தலைவர்களும் இதே அபிப்பிராயத்தைச் சந்தேகத்துக்கு இடமில்லாமல் சொல்லி வருகிறார்கள்.

ஆயினும், காங்கிரஸ் கட்சியின் மூலம் அதிகாரம் பெற்று மாகாணங்களில் ஆட்சி செலுத்தி வரும் பெரியோர்கள் இந்த உண்மையை ஒப்புக் கொண்டாலும், எதிர்ப்பைக் கண்டு கவலைப்படவே செய்கிறார்கள். பதவி மோகமும், கவலையின்றித் தேர்தலில் வெற்றிபெற வேண்டு மென்ற சுயநலமும் தான் இதற்குக் காரணம்.

இவர்களுடைய சௌகரியத்துக்காகத் தேச மக்களின் நன்மையைப் புறக்கணிக்க முடியாது. காங்கிரஸ் கட்சிக்கு எதிராக ஒரு சரியான எதிர்க் கட்சியைத் தோற்றுவித்தால் காங்கிரஸ் கட்சி பயத்தோடு வேலை செய்யும். பிரிட்டனில் டோரிக் கட்சிக்கு எதிராகச் சம பலத்துடன் கூடிய தொழிற் கட்சி இருக்கிறது. அதனால் ஜனநாயக ஆட்சி அங்கே சிறப்பாக வளர்ந்து ஓங்குகிறது. டோரிக் கட்சி எதேச்சாதிகாரமாகப் போய் விடாதபடி தொழிற் கட்சி பார்த்துக் கொள்கிறது. இப்போது, பிரிட்டிஷ் பிரதமர் ஸ்ரீ ஈடன் படும் பாடே இதற்குச் சிறந்த உதாரணமாகும்.

# பிரிட்டிஷ் ஆட்சியின் போக்கு

பிரிட்டிஷ் பிரதமர் ஈடன் பொய்யும் சூழ்ச்சியும் புனைசுருட்டும் நிரம்பிய முறையில் பேசி எகிப்தின் மீது போர் தொடுத்தார். ஆனால் பிரிட்டிஷ் மக்களும், பிரிட்டிஷ் பத்திரிகைக்காரர்களும் ஈடனின் இந்த அக்கிரமத்தைக் கண்டித்தனர்.

இதோ "ஸ்டேட்ஸ்மன் அண்டு நேஷன்" என்ற பத்திரிகையில் வெளியாகி யிருக்கும் விஷயத்தைப் பாருங்கள் :

"சூயஸை நாஸர் தேச உடைமையாக்கியது முதல் சூயஸ் வாய்க்காலை ஒழுங்காகவும் திறமையாகவும் யோக்கியமாகவும் நடத்தி வந்திருக்கிறார். ஈடன் எகிப்தின் மீது போர் தொடுக்கப்படும் என்று யுத்தப் பிரகடனம் செய்த அன்று சூயஸின் சரித்திரத்தில் அதற்கு முன் எப்பொழுதுமே நிகழ்ந்திராத வகையில் அக் கால்வாயில் சென்ற கப்பல்களின் எண்ணிக்கை மிக மிக அதிகமாக இருந்தது. தேச உடைமையாக்கிய பிறகு சூயஸ் போக்கு வரத்தில் ஏதாகிலும் தடையோ கஷ்டமோ ஏற்பட்டிருக்குமோ என்பதை அறியும் பொருட்டுப் பலமுறை சூயஸ் கால்வாய் வழியாக மேலும் கீழும் போய் வந்த இத்தாலி—கிரேக்க கப்பல் தலைவர்களைச் சந்தித்து இப் பத்திரிகையின் நிருபர் கேட்டார். அவர்கள் சூயஸ் கால்வாய் மிகத் திறம்பட நடக்கிறது. பிரிட்டிஷ் பிரஞ்சுக்காரர்கள் வசமிருந்த காலத்தில் லஞ்ச ஊழல் மலிந்திருந்தது. இப்போது லஞ்ச ஊழலே இல்லாமல் நன்றாக நடக்கிறது என்று ஒருமுகமாகக் கூறினார்கள் !"

இப்படி எகிப்துத் தலைவர் மிக நல்ல முறையில் சூயஸ் நிர்வாகத்தை நடத்தி வந்தும் அநியாய முறையில் போர் தொடுத்து, உள்நாட்டு மக்களின் கண்டனத்துக்கும் உலகத்தின் கண்டனத்துக்கும் ஆளாகியுள்ளார் ஈடன். அது மட்டுமா!

உலகம் இதுவரை ஒரு பிரதமரின் தேக அசௌக்கியத்தைக் கேட்டு மனத் திருப்தி அடைந்தது கிடையாது.

ஆனால் பிரிட்டிஷ் பிரதமர் ஈடன் தமது தேக அசௌக்கியம் காரணமாக ஓய்வு எடுத்துக் கொள்ளப் போகிறார் என்று கேள்விப் பட்டவுடன் உலகம் மனத் திருப்தியைத் தெரிவித்தது. உலகத்தின் இந்த மன நிலையை ராஜாஜியின் அறிக்கை மிகத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது.

"நல்ல காலம். இயற்கையாவது ஈடன் பிரபுவைக் காப்பாற்ற முன் வந்ததே! அவருக்குத் தேக அசௌக்கியம் ஏற்பட்டதனால் அல்லவா ஓய்வெடுத்துக் கொள்ள வெளியூர் போக முடிந்தது !

"பிரிட்டிஷ் மக்கள், பாவம், நல்லவர்கள். அவர்களுக்கு ஒரு நல்ல பிரதமரும் நல்ல சர்க்காரும் கிடைத்திருக்க வேண்டும்! அவர்களிடம் இவ்வளவு அனுதாபப் படுவதற்குக் காரணம் பிரிட்டிஷ் சரித்திரத்தில் இப்பொழுது நடந்த இந்தப் படுமோசமான அத்தியாயத்தைப் போல முன்பு எப்பொழுதுமே நடந்ததில்லை. இதை உலகம் மறக்கும் படிச் செய்வது மிகவும் கடினம். ஆனால்

பிரிட்டிஷ் மக்கள் வேறு; அவர்கள் அரசாங்கம் வேறு என்று உலகம் உணரும்படி செய்யலாம். ஐ. நா. சபையோ, வேறு அரசாங்கங்களோ வற்புறுத்துவதற்கு முன்னால் பிரிட்டிஷ் மக்கள் எகிப்துக்கு நஷ்டஈடு கொடுக்கும்படி தங்கள் அரசாங்கத்தை வற்புறுத்தலாம். அத்துடன் ஐ. நா. சபையில், தங்கள் சர்க்கார் செய்த குற்றத்துக்கு உள்ளம் நொந்து மன்னிப்புக் கோரலாம். பிரிட்டிஷ் சர்க்காரின் போக்கு எவ்வளவுக் கெவ்வளவு வெறுக்கும்படியாகவும் அவமானகரமாகவும் உள்ளதோ, அவ்வளவுக்கவ்வளவு பிரிட்டிஷ் மக்களின் போக்கு பண்பு நிறைந்து பாராட்டத் தக்கதாக இருந்தது! ஒரு தவற்றைக் குறித்து அந்தரங்க சுத்தியோடு வருத்தப் பட்டால் அத் தவறு திருத்தப்படலாம். ஆனால் தவம் என்றால் துன்பமும் தொல்லைகளும் இருக்கவே செய்யும்.''

ராஜாஜி சந்தேகித்தபடியே காரியங்கள் நடைபெற்று வருகின்றன.

ஈடனுக்குப் பிறகு பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக வந்துள்ள பட்லர் அரசாங்கமும் தவற்றை உடனே திருத்திக் கொள்ள முயல்வதாகத் தெரியவில்லை. எகிப்திலிருந்து தங்கள் படைகளை வாபஸ் பெற என்னென்னவோ 'சால்ஜாப்பு'கள் தேடுகின்றனர். நாஸரிடம் கால்வாயை ஒப்படைக்கவே தயங்குகின்றனர்.

நேர்மையையும் சீலத்தையும் இதுகாறும் கடைப்பிடித்த பிரிட்டிஷ் மக்கள் மேலும் ஊக்கம் காட்டி உலகில் நியாயம் நிலவச் செய்ய வேண்டும்!

இச் சந்தர்ப்பத்தில் நியாயத்தின் கட்சியில் அமெரிக்காவும் ஐ. நா. வின் காரியதரிசி ஹாமர்ஷோல்டும் செய்துவரும் பணிகளைப் பெரிதும் பாராட்டுகிறோம்.

# தியாகிகளுக்கு உத்தியோகம்

நமது சென்னை சர்க்கார் தியாகிகள் பிரச்னையை இத்தனை காலமும் மூடி மழுப்பிக் கொண்டிருந்தார்கள். இப்போது தேர்தல் நெருங்கி விட்டதால் தியாகிகளுக்குச் சமுதாய நலத் திட்டங்களில் வேலைகள் கொடுப்பது என்று விளம்பரம் செய்திருக்கிறார்கள்.

சர்க்கார் காரியாலயங்களில் தகுதி யில்லாதவர்களுக்கு வேலை கொடுத்தால், அங்கு வேலை கெட்டுப்போகும் என்று பயந்து சமுதாய நலத் திட்டத்தில் வேலை கொடுக்கலாம் என்று முடிவு செய்திருக்கிறார்களோ என்னவோ?

இதிலிருந்து சமுதாய நலத் திட்ட வேலைகளை, நமது சென்னை சர்க்கார் கோவில் பிரசாதம் போல் வந்தவர்களுக்கு வாரி வழங்கக் கூடியவையாகக் கருதுகிறார்கள் என்றே எண்ணத் தோன்றுகிறது. ஆனால் அவை அப்படியல்ல. மற்றச் சர்க்கார் வேலைகளை விடச் சமுதாய நல வேலைகள் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவை. பல அம்சங்களில் தகுதி பெற்றவர்களால்தான் சமுதாய நல வேலைகளைச் சரிவரப் பார்க்க முடியும். தியாகிகள் உத்தியோகத்துக்குத் தகுதியுள்ளவர்களாகவு மிருந்தால் அவர்களுக்கு வேலை கொடுப்பது பற்றி நமக்குச் சிறிதும் ஆட்சேபணை இல்லை.

பாரத சர்க்கார் கோடி கோடி ரூபாய் செலவிட்டு, கிராமங்களிலுள்ள மக்களுக்கு உதவ வேண்டும் என்னும் பெரு நோக்கத்தோடு சமுதாய நல வேலைகளை நடத்தி வருகிறார்கள். இத்தகைய பொறுப்பு வாய்ந்த வேலைகளைத் தகுதியானவர்களிடம் ஒப்படைப்பதற்குப் பதிலாகத் தேர்தலுக்குச் சௌகரியம் செய்து கொள்ளும் நோக்கத்தைக் கொண்டு தகுதியற்றவர்களுக்குக் கொடுப்பது, ஐந்தாண்டுத் திட்டத்தின் லட்சியத்தையே சிதைப்பதாகும்.

'தேசத்துக்காகத் தியாகம் செய்தவர்கள் அவல நிலையில் இருக்கிறார்களே, அவர்களுக்கு உதவ வேண்டாமா?'' என்று கேட்கலாம்.

அப்படித் தியாகத்துக்கு விலை தந்துதான் ஆகவேண்டும் என்றால் அதற்கு இது வழி ஆகாது. தாங்களாக வேலை தேடிச் சம்பாதிக்க முடியாத நிலையிலுள்ள தியாகிகளுக்குப் பணம் கொடுத்து உதவலாம்; அல்லது பென்ஷன் கொடுக்கலாம்

சென்னை சர்க்கார் இதற்கு வேண்டிய நிதி ஏற்பாடு செய்ய வேண்டுமே யொழிய, தகுதி யற்றவர்களுக்கு, உத்தியோகங்களை வழங்கி, பொதுமக்களைச் சொல்ல முடியாத தொல்லைகளுக்கு உள்ளாக்கக் கூடாது!

# தளபதி திம்மையா

1948-ம் ஆண்டு. நவம்பர் மாதம். இமயமலையில் பெரு மழை கொட்டிக் கொண்டிருந்தது. 11,000 அடி உயரத்தில் உள்ள ஸோஜிலா கணவாயைப் பாகிஸ்தான் துருப்புகள் கைப்பற்றி, அவ்விடத்தைத் தங்களுடைய கோட்டையாகப் பலப்படுத்திக் கொண்டிருந்தார்கள். எனவே, அத்தகைய சூழ்நிலையில் அவர்களை எதிர்த்து நிற்க முடியாது என்பதை இந்திய இராணுவ வீரர்கள் உணர்ந்து, போர் தொடங்குவதற்கு உற்ற சந்தர்ப்பத்தை மிகுந்த ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர்.

ஆனால், மேற்படி துருப்புகளை எதிர்த்துப் போராடுவதற்காக இந்திய கவச மோட்டார்களில் நமது துருப்புகள் செல்லுகின்றன என்ற செய்தியைக் கேள்விப்பட்டபோது, அது வெறும் கட்டுக் கதை என்று மற்ற இடங்களிலுள்ள இந்திய இராணுவ அதிகாரிகள் முடிவு செய்தனர். ஆனால், அந்தச் செய்தி பொய் அல்ல; உண்மைதான்! ஓர் இராணுவ தளபதி மேற்படி துருப்புகளைச் செலுத்திச் சென்று மளமளவென்று வெற்றிமேல் வெற்றி பெற்றார். பாகிஸ்தான் துருப்புகள் தங்கள் கோட்டைகள் என்று எண்ணிக் கொண்டிருந்த இடங்களை விட்டு விட்டுப் புறமுதுகு காட்டி ஓடும்படி செய்தார். காஷ்மீரில் இந்தியாவின் வெற்றிக்கொடியை நாட்டினார்.

அந்த வீரத் தளபதி யார்?

அவர்தான் இன்று சர்வதேசப் புகழ்பெற்று விளங்கும் லெப்டினன்ட் ஜெனரல் திம்மையா.

** ** **

சில தினங்களுக்கு முன் இராணுவ நிர்வாகப் பிரதம தளபதியாக நியமிக்கப்பட்டுள்ள லெப்டினன்ட் ஜெனரல் திம்மையா இந்திய இராணுவத்துக்கே திலகமாக விளங்கி வருகிறார் எனலாம். ஏனெனில், இராணுவத்தில் இதுவரையில் வேறு எந்த அதிகாரியும் செய்ய முடியாத பல அரிய அற்புத சாகசங்கள் புரிந்த தனிச் சிறப்பு ஜெனரல் திம்மய்யாவுக்கேஉரியது.



சென்ற உலக மகா யுத்தத்தின் போதுதான் ஜெனரல் திம்மய்யாவின் திறமை வெளியாயிற்று. அப்போது போர்முனைக்கு ஓர் இராணுவப் பிரிவை நடத்திச் சென்ற முதலாவது இந்தியர் அவர்தான் அரக்கானில் உள்ள காங்கோவில் நடந்தஉக்ரமான யுத்தத்தில் ஜெனரல் திம்மய்யா காட்டிய தைரியமும், வீரமும் அவருக்குப் பெரும் புகழைத் தேடிக் கொடுத்தன. அதன் பயனாகவே அவருக்கு டி.எஸ்.ஓ. என்ற உயர்ந்த இராணுவப் பட்டமும் கிடைத்தது.

காஷ்மீர் யுத்தத்திலும் ஜெனரல் திம்மையா காட்டிய வீரதீர பராக்கிரமச் செயல்கள் சாமான்யமானவையல்ல.

காஷ்மீரிலிருந்து அவர் பாகிஸ்தான் பகைவர்களை விரட்டியதுடன், வறுமை, பஞ்சம், பிணி முதலிய பகைவர்களை விரட்டவும் காஷ்மீர் சர்க்காருக்குப் பேருதவியாக இருந்தார். பகைவர்கள் விஷயத்தில் கல் நெஞ்சம் படைத்த ஜெனரல் திம்மய்யா, மக்கள் விஷயத்தில் கருணை உள்ளம் படைத்தவர்.

** ** **

போரில் தமது சூரத்தனத்தைக் காட்டிய ஜெனரல் திம்மையா சமாதானத்தை நிலைநிறுத்தவும் தமக்குத் திறமை உண்டு என்பதைக் கொரியாவில் வெளிப்படுத்தினார். கொரியாவில் சமாதானத்தை மேற்பார்வையிடுவதற்காகச் சென்ற ஐந்து நாடுகள் நடுநிலைமைக் கமிஷனுக்குத் தலைவராக இருந்து சர்வதேசப் புகழ் பெற்றார். அவரது சாமர்த்தியத்தை நமது ஜனாதிபதி பாராட்டி அவருக்கு பத்மபூஷணம் என்ற பட்டம் வழங்கினார். கொடிய கொலை, கொள்ளைகளில் ஈடுபட்டு இந்திய சர்க்காருக்கு இடைவிடாத தலைவலியைக் கொடுத்து வந்த நாக மலைவாசிகளிடையே சென்று, அவர்களுக்கு இந்திய சர்க்காரிடம் நம்பிக்கை உண்டாகும்படி அவர்களுடைய மனத்தை அதிசயமான முறையில் மாற்றியவரும் திம்மய்யாதான்.

1906-ம் ஆண்டு மார்ச் மாதம் 31-ந் தேதி பிறந்த திம்மய்யா தமது இருபதாவது வயதில் டேராடூனிலும், ஸாந்தர்ஸ்டிலும் இராணுவக் கல்லூரிப் படிப்பை முடித்துக் கொண்டு 1926ல் இந்திய இராணுவத்தில் சேர்ந்தார்.

பாகிஸ்தான் பிரிவினையின்போது கிழக்கு பஞ்சாபில் கபிட்சத்தையும் ஒழுங்கையும் நிலைநிறுத்துவதில் அவர் பெற்ற வெற்றியும் போற்றத் தக்கதாகும். அப்போது அங்கிருந்து வெளியேறிய லக்ஷக்கணக்கான முஸ்லிம் அகதிகளுக்கும் மேற்கு பஞ்சாபிலிருந்து வந்த லட்சக்கணக்கான இந்து அகதிகளுக்கும் பாதுகாப்பு அளிக்கும் பணியைத் திம்மய்யா மேற்கொண்டு, தமது கடமையை எல்லோரும் பாராட்டும் வண்ணம் நிறைவேற்றினார்.

ஜெனரல் திம்மையாவின் வாழ்க்கை இந்திய இராணுவ வீரர்களுக்கு ஒரு சிறந்த உதாரணமாகத் திகழ்ந்து வருகிறது.

# FAMOUS *throughout* INDIA

*The Qutb Minar, Delhi*





குதுப் மினார், காலத்தின் சோதனைகளை வென்று அழகுக்குப் புகழ் பெற்று நெடுங் காலமாக நிற்கிறது.

"வெஸ்ட் எண்ட்" கடிகாரங்களும் இதைப்போலவே நெடுங்காலமாகப் புகழுடன் விளங்குகின்றன. நல்ல கடிகாரங்களுக்குரிய — அதாவது சரியான மணி காட்டுவது, நீடித்த உழைப்பு, கவர்ச்சியான தோற்றம்; இவை யாவும் ஒருங்கே கொண்டது. "வெஸ்ட் எண்ட்" கடிகாரங்கள் என கடந்த 80 வருடங்களுக்கு மேலாக நன்கு நிரூபிக்கப் பட்டுள்ளது. அதற்குக் காரணம் — சிறந்த பொருள்களைக் கொண்டு இந்தியாவுக்குகந்த கடிகாரத்தை மிகத் தேர்ச்சி பெற்ற தொழில் நிபுணர்களால் தயாரிக்கப்படுவதே.

நீங்கள் ஒரு கடிகாரத்தை வாங்கும் பொழுது அதன் டயல் மேல் உள்ள 'வெஸ்ட் எண்ட் வாட்ச் கோ.' என்ற பெயரை எப்போதும் கவனியுங்கள்.

# West End Watch Co.

**BOMBAY CALCUTTA**

*Write for FREE Catalogue.*

**SOWAR PRIMA SPECIAL CENTRE SECOND**

*Patent Everbright Steel Rs.* 175

# மாறுவேஷத்தில் மந்திரி

சாவி

விவசாய மந்திரி ஸ்ரீ பக்தவத்ஸலம் அன்று ஏதோ வேலையாகத் தமது காரில் வெளியே போய்க் கொண்டிருந்தார். அவர் கவனமெல்லாம் வரப்போகும் பொதுத் தேர்தலிலேயே ஈடுபட்டிருந்தது. "இப்பொழுது நாட்டில் உணவுப் பிரச்னையல்லவா பெரும் பிரச்னையாக இருக்கிறது? இந்த நேரத்தில் விவசாய மந்திரியாக இருப்பது பெரும் ஆபத்தாக அல்லவா இருக்கிறது?" என்று மிகவும் கவலைப்பட்டார். அப்போது அவருடைய கார் ஆழ்வார்ப்பேட்டை பக்கமாகச் சென்று கொண்டிருந்தது.

ஆழ்வார்ப்பேட்டையில் ஒரு அரிசிக் கடை முன்னால் பெரிய 'க்யூ' வரிசை ஒன்று இருந்தது. 'க்யூ' வரிசையில் ஆண்களும் பெண்களும், ஏழை எளியவர்களும், வயதானவர்களும் சிறுவர்களும், படித்தவர்களும் படிக்காதவர்களும் 'கதம்ப'மாக நின்று நொண்டியடித்துக் கொண்டிருந்தார்கள். 'க்யூ'வில் நின்றவர்கள் சிலர் கையில் பையும் சிலர் கூடையும் வைத்துக் கொண்டிருந்தார்கள்.



விவசாய மந்திரி, தமது டிரைவரைப் பார்த்து "டிரைவர்! இவர்களெல்லாம் யார்? எதற்கு நிற்கிறார்கள்?" என்று கேட்டார்.

"அரிசி வாங்க நிற்கிறாங்க! ஆளுக்கு இரண்டு படி சர்க்கார் அரிசி கொடுக்கிறாங்களாம். படி பதினொன்றரையணாவாம்" என்று கூறி விட்டு டிரைவர் தமது தலையைச் சொறிந்து கொண்டே, "நான் கூடக் கடைக்குப் போய் அரிசி வாங்கணும். இன்று என்னைக் கொஞ்சம் சீக்கிரம் வீட்டுக்கு அனுப்பினீங்களானால்!..." என்று இழுத்தார்.

"அதற்கென்ன? சரி; காரைத் திருப்பி வீட்டுக்கு விடு. எனக்குக் கூட வேறு வேலை இருக்கிறது" என்றார் மந்திரி.

கார் வீட்டை அடைந்ததும் விவசாய மந்திரி தம் டிரைவரை வீட்டுக்குப் போகச் சொல்லி விட்டுத் தம் அறைக்குள் சென்றார்.

அவருக்கு ஒரு அபூர்வ யோசனை உதயமாயிற்று! பொது மக்களுக்காகச் சேவை செய்து வரும் ஒரு காங்கிரஸ் மந்திரி பொது மக்களில் ஒருவனாகக் கலந்து பழகிப் பொது மக்களின் அசௌகரியங்களை அறிந்து அவர்களுடைய குறைகளைப் போக்கினால் தேர்தலில் வெற்றி காண்பது நிச்சயம் என்று பட்டது.

* * *

"அன்ன விசாரம்; அதுவே விசாரம்" என்று மக்கள் தினம் தினம் அரிசிக் கடை முன் 'க்யூ' வரிசையில் கால்கடுக்கநின்று தவம் செய்து வாடுகிறார்கள் அல்லவா? தாமும் அங்கே மாறு வேஷத்தில் போய் மக்களோடு 'க்யூ' வரிசையில் நின்று இரண்டு படி அரிசி வாங்கிக் கொண்டு அப்படியே மக்களின் குறைகளையும் அறிந்து வர விரும்பினார். நிலைக் கண்ணாடியின் முன் போய் நின்று கொண்டு ஒரு சாமியாரைப்போல் வேஷம் போட்டுக் கொண்டார். முதலில் காவி உடை தரித்துக் கழுத்திலே உருத்திராட்ச மாலை அணிந்து கொண்டார். கையில் ஒரு பையும் பிடித்துக் கொண்டார். பிறகு கக்கத்தில் ஒரு யோக தண்டமும் இடையில் இரண்டு ரூபாய் பணத்தையும் எடுத்துச் செருகிக் கொண்டு வெளியே புறப்பட்டார்.

வழியில் ஒரு வீட்டு வாசலில் போய் நின்று கொண்டு, "அம்மா தாயே, பிச்சை!" என்று யாசித்தார்.

அந்த வீட்டு அம்மாள், "போ! போ! வேறு வேலை இல்லை உங்களுக்கு! எங்களுக்கே சாப்பாட்டுக்கு அரிசி கிடைக்கிறதில்லை. இந்த லட்சணத்தில் பிச்சை போட அரிசி ஏது? போய் எங்கேயாவது வேலை செய்து பிழை" என்று இரைந்தாள்.

இதற்குள் அரிசி வாங்கப் போயிருந்த அந்த அம்மாளின் புருஷர் இரண்டு படி அரிசியுடன் வீட்டுக்குள் நுழைந்து கொண்டிருந்தார். சாமியாரைப் பார்த்து, "சாமியாரே! போ! நானே கடையிலிருந்து இரண்டு படி சர்க்கார் அரிசி பிச்சை வாங்கி வருகிறேன்.

இதில் உனக்கு வேறேயா? 'பிச்சையெடுத்தா ராம் பெருமான்...' என்கிற கதைதான்! அரிசி வேணுமானால் போய் அரசாங்கத்தோடு முட்டிக் கொள்" என்றார்.

பரதேசி, "அரசாங்கம் என்ன செய்யுங்க? அரிசி விலையைக் குறைக்க அவங்களால் முடிந்ததைச் செய்யத்தானே செய்கிறாங்க! கொள்ளை லாபத்துக்கு ஆசைப்பட்டுச் சில வியாபாரிங்க சர்க்கார் முயற்சியைப் பாழ் படுத்தினால் சர்க்கார் என்ன செய்யும்?" என்று உபதேசம் செய்தார்.

"இன்னும் நிறைய நியாயவிலை அரிசிக் கடையை ஆரம்பித்து ஜனங்களுக்கு வேண்டிய அளவு அரிசி கொடுத்தால் என்னவாம்?" என்று கேட்டார் அந்த கிரகஸ்தர்.

"சென்னை சர்க்காரிடம் அரிசி இல்லே. மத்திய சர்க்கார் அனுப்பினால்தானே முடியும்? சென்னை சர்க்கார் மத்திய சர்க்காரை அரிசி கேட்டிருக்காங்க. அவங்களும் அனுப்புகிற தாகச் சொல்லி யிருக்காங்க. கூடிய சீக்கிரம் நிலைமை சரியாயிடும்!" என்றார் சாமியார்.

"சாமியாரே! ஏது நீ பெரிய மந்திரி மாதிரி பதில் சொல்கிறாயே? இவ்வளவு விஷயங்களும் உனக்கு எப்படித் தெரியும்?"

"பத்திரிகையில் படிச்சேனுங்க" என்று கூறி விட்டுச் சாமியார் புறப்பட்டார்.

"இந்தா, ஒரு பிடி அரிசி வாங்கிட்டுப் போ; நல்ல சாமியாராக இருக்கிறாய்!" என்று கூறி கிரகஸ்தர் ஒரு பிடி அரிசியை எடுத்துச் சாமியாருக்குப் போட்டார். சாமியார் பிறகு ஒரு நியாய விலை அரிசிக் கடைக்குச் சென்று அங்கே நின்ற மாபெரும் 'கியூ' வரிசையில் சேர்ந்துகொண்டார்.

"என்ன சாமியாரே! இருக்கிற கூட்டம் போதாதென்று நீயும் வேறு வந்து விட்டாயா? வா! சாமியாருக்குக் கூடவா அரிசி வேணும்? இரண்டு வீட்டில் பிச்சை யெடுத்தால் தீர்ந்தது!" என்றார் 'கியூ' வரிசையில் நின்று கொண்டிருந்த ஆசாமி ஒருவர்.

"என்ன அப்படிப் பேசறீங்க? சாமியாருக் குப் பசி எடுக்காதா என்ன? எனக்கும்தான் அரிசி வேணும்" என்றார் சாமியார்.

'கியூ' வரிசையில் நின்று கொண்டிருந் தவர்கள் தலைக்குத்தலை சர்க்காரைக் கண்ட படி ஏசிக் கொண்டிருந்தார்கள். ஒருவர், "இங்கே நாமெல்லாம் அரிசிக்குக் கிடந்து திண்டாடுகிறோம். மந்திரிங்க பாட்டுக்குச் சௌக்கியமா ஊர் சுத்திக்கிட்டு இருக்காங்க" என்று கூறினார்.

"சும்மா ஒண்ணும் சுத்தலே ஐயா; தேர்த லுக்காகத்தான் சுத்தறாங்க" என்றார் இன் னொருவர்.

"அது யாரு அந்த மந்திரிங்க?" என்று கேட்டார் வேறொருவர்.

"முதல் மந்திரி காமராஜ், கல்வி மந்திரி சுப்பிரமணியம், விவசாய மந்திரி பக்த வத்சலம் இந்த மூன்று பேரும்தான் இணை பிரியாமல் சேர்ந்தே சுத்தறாங்களே?"

"சுத்தட்டும், இந்தத் தடவை நிச்சயம் காங்கிரஸுக்குப் பலத்த எதிர்ப்பு இருக்கப் போகிறது. காங்கிரஸ் பலத்தைப் பார்த்து விடலாமே!" என்றார் இன்னொருவர்.

"பார்க்கிறது என்னங்க! இந்த மூன்று பேரும் எப்படியும் ஜெயிச்சுடுவாங்க. மந்திரி சபையும் நிச்சயம் அமைச்சிடுவாங்க!" என்றார் ஒரு காங்கிரஸ் அனுதாபி.

"ஆமாம், யார் மந்திரிசபை அமைத்தாலும் அதில் பக்தவத்சலம் ஒரு மந்திரியாக வந்துடுவார் என்பது மட்டும் நிச்சயம்" என்றார் மற்றொருவர். இந்தப் பிரபல ஹாஸ்யத்தைக் கேட்டுச் சாமியார் உள்பட எல்லோருமே 'கொல்' லென்று சிரித்தார்கள்.

"என்னங்க? இன்னும் எத்தனை நாளைக்கு இப்படி 'கியூ'விலே நின்று கஷ்டப்படணுமோ தெரியவில்லையே. புண்ணியவான் ராஜாஜி முதல் மந்திரியா வந்து ரேஷனையே எடுத்தார். இப்போது மறுபடியும் அரிசிக்குத் திண்டாட்டம் வந்துட்டுது!" என்று கூறினார் ஒரு குட்டையான ஆசாமி.

"மந்திரிகளுக்கென்ன? சுகமாகக் காரிலே சுற்றிக் கொண்டே பிரசங்கம் செய்துவிட்டு மாலையும் போட்டுக் கொள்கிறார்கள். இங்கே ஒரு நாளாவது ஒரு மந்திரியாவது 'கியூ'விலே வந்து நின்று கஷ்டப்பட்டாங்களானால் ஜனங்கள் படுகிற அவஸ்தை தெரியும்" என்றார் ஒரு நெட்டை ஆசாமி.

"எல்லாக் கஷ்டமும் குறுவைச் சாகுபடி கைக்கு வருகிற வரைக்கும்தானுங்க; அப்புறம் நாட்டிலே அரிசிக் கஷ்டமே இருக்காது...." என்றார் சாமியார்.

"என்ன சாமியாரே? உங்களுக்கு ஜோசியம் தெரியுமா? எப்படிச் சொல்கிறீங்க?" என்று கேட்டார் ஒருவர்.

"பத்திரிகையிலே போட்டிருக்குதே பார்க்கலீங்களா?" என்றார் சாமியார்.

"ஆமாம்; குறுவைச் சாகுபடி எப்பொழுது கைக்கு வருமாம்?" என்று கேட்டார் ஒருவர்.

"மார்ச்சு மாதத்துக்குள் பூராவும் வந்துடும்னு போட்டிருக்குது."

"சரிதான்; மார்ச்சிலேதான் பொதுத் தேர்தலும் வருகிறது. அதுக்காகத்தான் குறுவைச் சாகுபடின்னு சொல்லி மார்ச்சு வரைக்கும் விஷயத்தைத் தள்ளிப் போடப் பார்க்கிறாங்க போலிருக்குது சர்க்கார். மார்ச்சு முடிஞ்சுட்டால் எலெக்ஷனும் முடிஞ்சுபோயிடும். அதுக்கப்புறம் பார்த்துக்கலாம் பாருங்க. இது ஒரு யுக்திதான்!" என்றார் நெட்டை ஆசாமி.

இதற்குள் நியாயவிலை அரிசிக் கடை ஆசாமி "ஸ்டாக்கிலிருந்த அரிசி அவ்வளவும் தீர்ந்து போய் விட்டது; இனிமேல் நாளைக்குத்தான் அரிசி. எல்லோரும் வீட்டுக்குப் போகலாம்" என்றார்.

'கியூ' வரிசை கலைவதாயில்லை. அரிசிகொடுத்தால்தான் போவோம் என்று பலர் அங்கேயே அடம் பிடித்தார்கள். ஆனால் இதற்குள் பெருமழை பிடித்துக் கொள்ளவே எல்லாரும் விழுந்தடித்துக் கொண்டு ஓடிவிட்டார்கள். சாமியாரும் ஓடினார். கொஞ்ச தூரம் ஓடிய பிறகு ஒரு வண்டி பிடித்துக் கொண்டு தம் வீட்டை அடைந்தார். வேஷத்தைக் கலைத்தார். புதிய ஆடைகளை உடுத்திக் கொண்டு உடனே பத்திரிகைகளுக்குக் கீழ்வருமாறு ஓர் அறிக்கை தயாரித்து அனுப்பி வைத்தார்:

★

**சர்க்கார் அறிக்கை**

"சென்னை சர்க்கார் அரிசி நிலைமையை நெருங்கிய முறையில் கவனித்து வருகிறது. நெருக்கடியைச் சமாளிப்பதற்கான திட்டங்களையும் போட்டு வருகிறது."

✳

மறுநாள் டிரைவர் வந்ததும் "நேற்று அரிசி வாங்கினாயா?" என்றார் மந்திரி.

"இல்லேங்க, அரிசிக் கடையிலே ஒரே கூட்டம். பாவம்! அந்தக் கடைக்கு ஒரு சாமியார்கூட அரிசி வாங்க வந்தார். எல்லாரும் சர்க்காரைக் குறை சொன்னாங்க. சாமியார் மட்டும் சர்க்காரை ஆதரித்துப் பேசினார். ஆனால் அவருக்குக் கூட அரிசி கிடைக்கவில்லே. மழை வேறே வந்து விட்டது. எல்லாரும் தெப்பலா நனைந்து வீட்டுக்கு ஓடிவிட்டாங்க, பாவம். சாமியாரும் ஓடினார்!" என்றார் டிரைவர்.

# ஸரமா யார்?

## ராஜாஜி

ஹிந்து பத்திரிகையில் ''சக்கரவர்த்தித் திருமக''னைப் பற்றிப் பாராட்டி விமரிசனம் எழுதியிருப்பதைப் பற்றி மிக்க மகிழ்ச்சி அடைந்தேன். அதற்கு நன்றி செலுத்திவிட்டு அந்த விமரிசனத்தில் ஒன்றிரண்டு 'குற்றங்கள்' காட்டியிருப்பதைப்பற்றி இதை எழுதுகிறேன்.

விசுவாமித்திரர் இராமனுக்கு உபதேசித்துத் தந்த மந்திரங்களுக்கு 'பலம்' 'அதி பலம்' என்று நான் பெயரிட்டதைப் பற்றித் திரு சுந்தராச்சாரியார் ஆட்சேபிக்கிறார். அந்தப் பெயர்கள் பெண்பாலாக இருக்க வேண்டும், அஃறிணையாக நான் அமைத்திருப்பது தவறு என்கிறார். வடமொழியில் 'பலா' 'அதிபலா' என்று இருப்பது உண்மை. தேக பலத்தைத் தரும் மந்திரங்களை ஸ்திரீகளாக வைத்துச் சொல்லுவது, தமிழில் அதிலும் பேசும் தமிழில் நன்றாயிருக்காது. 'இவள்,' 'அவள்' என்று தமிழில் மந்திரங்களைச் சொல்லுவதற்ில்லை. பலை, அதிபலை என்று வடமொழிச் சொற்களைத் தமிழாக்கும் இலக்கண வழக்கத்தின்படி சொன்னால் தேக பலத்தைப் பற்றிய பொருள் காணமற் போகும். தமிழ் வழக்கு வேறு, சமஸ்கிருத வழக்கு வேறு. யோசித்துத்தான் அஃறிணை ஈறுகிய மகர வொற்று போட்டேன்.

இரண்டாவது விஷயம் சுந்தராச்சாரியார் சொல்லுவது என்னவென்றால்; யுத்தம் நடந்து கொண்டிருந்தபோது, சீதாதேவிக்கு ஸரமா என்பவள் சமாதானமும் தைரியமும் சொன்னதாக வால்மீகி ராமாயணத்தில் சொல்லப்படுகிறது. இந்த ஸரமா விபீஷணன் மனைவி என்று நான் எழுதியிருப்பது தவறு என்கிறார் சுந்தராச்சாரியார்.

ராமாயணத்துக்கு வியாக்கியானம் கோவிந்தராஜர் எழுதிய ''பூஷணம்'' எல்லாப் பெரியோர்களாலும் மதிக்கப்பட்டுவருகிறது. அதில் இந்தக் கட்டத்து உரையில் ஸரமா விபீஷணன் மனைவி என்றே எழுதி யிருக்கிறார். மற்றொரு பிரசித்தமான வியாக்கியானம் ''திலகம்'' என்பது. அதிலும் கோவிந்தராஜர் சொல்லியிருக்கிறபடியே ஸரமா விபீஷணன் மனைவி என்று தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

இவ்வாறு பழைய வியாக்கியானங்களில் இருப்பதை நான் அவருக்கு எடுத்துக் காட்டி எழுதிய பிறகுதான், இரண்டாவது கடிதம் ஹிந்துப் பத்திரிகைக்கு எழுதி யிருக்கிறார். அதில் கோவிந்தராஜரும் பிழையாக எழுதியிருக்கிறார் என்று பிடிவாதமாகச் சொல்லுகிறார். வியாக்கியான கர்த்தாவான கோவிந்தராஜரையே எதிர்த்துத் தன்னுடைய வாதத்துக்கு வேறு ஒரு சமாதானம் தேடிச் சொல்லுகிறார் :

சீதைக்குத் துணையாக ராவணன் உயர்ந்த பதவியிலிருக்கும் தன் உறவினனை அமைத்திருப்பானா என்று சுந்தராச்சாரியார் கேட்கிறார். ராஜகுமாரியான சீதைக்கு அசோகவனத்தில் சகியாகத் தன்னுடைய உறவினளை அமைத்திருந்ததில் ஒன்றும் வியப்பு இல்லை. இந்த ஆட்சேபணை சரியல்ல. ஆகையினால்தான் உரையாசிரியர்கள் ஸரமா என்பவள் விபீஷணன் மனைவி என்று சொல்லி யிருக்கிறார்கள். ஸரமாவின் குணங்களை எடுத்துச் சொல்லும் போதும் வால்மீகி பகவான் அவளுடைய பண்பாட்டை மிகவும் புகழ்ந்து பாடியிருக்கிறார்.

பரம்பரையாக வந்திருக்கும் வியாக்கியானத்தைப் பாராமல் சுந்தராச்சாரியார் என் எழுத்தில் குற்றம் கண்டது பொருத்தமல்ல. வியாக்கியானத்தைப் பார்த்தே எழுதி யிருந்தால் அதுவும் வியப்பே! என்மேல் குற்றம் சொல்லும் போது மதிப்புக்குரிய கோவிந்தராஜரும் இப்படியே தவறுகப் பொருள் கொண்டிருக்கிறார் என்றல்லவோ முதலிலேயே எழுதி யிருக்க வேண்டும்? அப்படி எழுதியிருந்தால் பெருமையே பட்டிருப்பேன் அல்லவா? மகா வித்துவானும் பக்தருமான வியாக்கியான கர்த்தா சொன்னதே பிழையானல், என்னைப் பற்றி என்ன கவலை? அதைப் பார்க்காமலே சுந்தராச்சாரியார் முதலில் எழுதிவிட்டு, பிறகு சமாதானம் தேடினர் என்று எண்ணுகிறேன். எப்படியாயினும் அதைப் பற்றிக் கவலையில்லை. என்னுடைய நூலை மிகவும் பாராட்டி எழுதியிருப்பதற்கு நன்றி செலுத்துகிறேன்.

இலக்கியச் செல்வம்-௯.

# சாளரத் தாமரை

பேராசிரியர் அ. சீநிவாசராகவன்

'அந்தக் குழந்தையின் முகத்தைப் பார்த்தீர்களா, நல்ல செந்தாமரை மாதிரி...' என்று தொடங்கினேன்.

'எனக்குக் கொஞ்சம் முக்கியமான வேலை இருக்கிறது. பிறகு வருகிறேன்' என்று சொல்லிக் கொண்டே நண்பர் நடையைக் கட்டினார்.

எனக்குச் சிறிது ஏமாற்றமாக இருந்தது. பிறகு புரிந்தது. 'தாமரை போன்ற முகம்' என்று பேசத் தொடங்கினால், கேட்பதற்கு யார்தான் இருப்பார்கள்? 'தாமரை முகம்', 'முகத் தாமரை' என்ற சங்கதிகளைப் போட்டு, அந்தப் பல்லவியைத் திருப்பினாலும் அதே கதிதான். ஏன் இப்படி? இது தாமரையின் குற்றமா, அல்லது முகத்தின் குற்றமா? இரண்டும் இல்லை.

இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன், எவ்வளவு அழகோடு பூத்ததோ, அதே அழகோடுதான் இன்றும் நம்முடைய புழக்கடைத் தோட்டத்தில் தாமரை இதழ் விரிக்கிறது. அதுபோலவே, பழங் காலத்தில் மட்டுந்தானா, இல்லை, இன்றும், பால் வடியும் குழந்தையின் முகத்தில் அழகு மலரத்தான் மலர்கிறது. பின் ஏன் 'தாமரை போன்ற முகம்' என்று சொன்னவுடன் முகத்தை அப்படிச் சுளிக்கிறோம்?

'எங்கள் கண்ணம்மா முகம் செந்தாமரைப் பூ'

என்று பாரதியார் சொன்னாற் கூட, இந்த பாரதியாருக்குப் போயும் போயும் முகத்தின் அழகைச் சொல்ல, தாமரைப் பூதானா கிடைத்தது, வேறொன்றும் அகப்படவில்லையா என்று எண்ணுகிறோம். கவிச் சக்கரவர்த்தி கம்பரே தான் பேசட்டுமே:

> சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை
> ஒத்திருந்த முகத்தினை.....

அப்போதும், சித்திரத்தின் அலர்ந்த என்று செந்தாமரைக்குக் கவிஞன் மெருகு தந்த போதிலும், நமக்கு என்னவோ போலத்தான் இருக்கிறது. முகம் தாமரை, கண் தாமரை, கை தாமரை, தாமரை, தாமரை, தாமரை, ஆமாம், நம்முடைய கவிஞர்கள் இந்தத் தாமரையைப் படாதபாடு படுத்தி விட்டார்கள். கேட்டுக் கேட்டுத் தாமரையின் அழகு கூடப் புளித்துப் போய் விட்டது. நம்முடைய நாட்டு இலக்கிய உலகில், முகத்தின் அழகைப் பளிச் சென்று எடுத்துக் காட்ட, அதை ஆயிரம் மடங்காகத் தூக்கிக் காட்ட வந்த அந்தத் தாமரை இன்று வாடிவிட்டது.

இப்படியெல்லாம் எண்ணமிட்டுக் கொண்டே மகாகவி காளிதாஸனுடைய 'ரகுவம்சம்' என்ற காவியத்தைப் புரட்டிக் கொண்டிருந்தேன்.

இந்துமதி என்பவளை அஜன் என்ற அரசன் மணம் செய்து கொள்ளும் காட்சி. அக்கினி சாட்சியாக, அஜன் இந்துமதியின் கரத்தைப் பற்றுகிறான். இதைச் சொல்கிறான் கவிஞன்:

'அந்த அரசகுமாரன் (அஜன்) தன் கரத்தால் மணப் பெண்ணின் கரத்தைப் பற்றினான். அருகில் இருக்கும், கொடி போன்ற அசோக மரத்தின் தளிரை, தன் கொழுந்தால் தொடும் மாமரத்தைப் போல அவன் விளங்கினான்.'

எனக்கு உயிர் வந்தது. 'ஹஸ்தேன ஹஸ்தம் பரிக்ருஹ்ய வத்வா' 'கையினால் மணப் பெண்ணின் கையைப் பிடித்து' என்று கவிஞன் தொடங்கிய உடனே, 'சரி, சரி, இரண்டு கைகள் வருகின்றன. ஒன்றாவது, இந்துமதியின் கையாவது, தாமரைப் பூவாக இருக்கும்' என்று எண்ணினேன். நல்ல வேளை, கவிஞன் தாமரைப் பொய்கை அருகிலே போக வில்லை. ஒரு கரம், அசோகத்தின் ஒளித்தளிர், மற்றொன்று தேமாங் கொழுந்து. இரு கரங்களும் சோலை அலையோடு சோலை அலை கலப்பது

போலச் சேர்ந்தன. பற்றியது மாமரம்; பற்றப்பட்டது கொடி போன்ற அசோகம். இதுவுந்தான் எவ்வளவு பொருத்தம்! காளிதாஸன் மகாகவிதான். நைந்துபோன பழைய உவமை என்று எண்ணித்தானே தாமரை மலரை அணுகி விடவில்லை! இப்படியாகச் சென்றது என் சிந்தை.

யாரோ சிரிப்பது போல் இருந்தது. 'புத்தகத்தைக் கொஞ்சம் திருப்பி, இப்போது நீ பார்த்த சுலோகத்துக்கு முந்தி, ஒன்பது சுலோகங்களைத் தள்ளி விட்டு, பத்தாவது சுலோகத்தைப் பாரேன்' என்று யாரோ சொல்வது போல் இருந்தது. பரபர வென்று முந்திய பக்கத்தைப் பார்த்தேன்.

அங்கே, அஜனும் இந்துமதியும் பட்டணப் பிரவேசம் செய்கின்ற காட்சி. கலியாண மண்டபத்தை நோக்கிச் செல்லும் அந்த ஊர்வலத்தைக் காண, பெண்கள் திரளாக வருகிறார்கள். ராஜ வீதியின் இருபுறமும் உள்ள மாளிகைகளின் ஜன்னல்களில் எல்லாம், ஆவலோடு, கண்களை அகலவிரித்து அங்கும் இங்கும் பார்க்கின்ற பெண்கள். அவர்கள் முகத்திலிருந்து மதுவின் மணம் மிதந்து வருகிறது, மலரின் வாசனை போல. கண்கள், கரிய பெரிய கண்கள், பூவின் மேல் அசையும் வண்டுகளைப் போலப் புரளுகின்றன. முகங்களோ....

முகங்களா, நீங்கள் ஜன்னல்களில் காண்பது முகங்களா, நன்றாய்ப் பாருங்கள், நீங்கள் காண்பது வண்டுமொய்க்கும் நறுமண மலர்கள், ஆயிரம் இதழுடைய தாமரைமலர்கள் அல்லவா? ஜன்னல்கள் இந்த ஊர்வலத்துக்காகத் தானோஎன்னவோ-ஸகஸ்ர பத்ராபரணஇவ—ஆயிரம் இதழ்த் தாமரைகளால் அலங்கரிக்கப் பெற்றனபோல், விளங்குகின்றன. தாமரை, பொய்கையில் மட்டுமா மலரும், இங்கே சாளரத்தில் மலர்ந்து விட்டது.

இந்த அற்புதத்தைப் பார்த்துக் கொண்டு நிற்கும் நமக்கு, கம்பருடைய நினைவு வருகிறது. தசரதனுடைய அரண்மனையை நோக்கி, அயோத்தி வீதி வழியாக இராமன் போகிறான். அந்தப் பவனியைக் காண மகளிர் வந்து கூடுகிறார்கள். நீண்ட தூண்கள் வரிசை தீர்ந்து நிமிரும் மாளிகை முகப்புக்கள், நிலா முற்றங்கள், ஜன்னல்கள், எங்கே பார்த்தாலும் மான் கூட்டத்தைப் போலப் பெண்கள் வந்து மொய்க்கிறார்கள். எண்ணிறந்த வனிதையர் முகங்கள் எங்கும் தென்படுகின்றன. அவிழ்ந்த கூந்தல், காதிலே குண்டலம்—முகத்தை அங்கும் இங்கும் திருப்பிப் பார்க்கின்றபோது அசைந்து, இதோ இருக்கிறேன் என்று சொல்கிறது அந்தக் காதணி-வாள், உதிரம் தோய்ந்த வேல், கருவண்டு, கெண்டை மீன், இவற்றை ஒன்றாகச் சேர்த்த அழகுக் கலவையாக மிளிரும் கண்கள். அழகிய முகம், இன்னொரு அழகிய முகம், மற்றொன்று, வேறொன்று, வேறு வேறு வேறொன்று எத்தனை எத்தனையோ எல்லா முகங்களிலும் அழகின் மலர்ச்சி, அதன் நடுவில் வண்டெனப் புரளும் விழிகள், இங்கே, அங்கே, எங்குமே, அடாடா, வீதியெல்லாம், மாளிகை வாசலில், முற்றத்தில், ஜன்னலிலுங்கூட முகங்களா, தாமரைக் காடு அல்லவா பூத்து விட்டது என்று கவிஞன் பரவசம் அடைகிறான்.

> நீள் எழுத் தொடர் வாயினும் குழையொடு நெகிழ்ந்த
> ஆலகத்தினொடும் அரமியத்தலத்தினும் அலர்ந்த:
> வாள் அரத்தவேல் வண்டொடு கெண்டைகள் மயங்கச்
> சாளரத்தினும் பூத்தன தாமரை மலர்கள்.

[நீள்—நீண்ட; எழு—தூண்; தொடர்—வரிசை; வாயினும்—வாசலினும்; குழை—குண்டலம்; ஆலகம்——கூந்தல்; அரமியத் தலம்—உப்பரிகை, நிலா முற்றம்; அரத்த வேல்—இரத்தம் தோய்ந்த வேல்; சாளரம்—ஜன்னல்]

இந்தப் பாட்டைக் கேட்டவுடன், அழகு வெள்ளம் நம்முடைய நெஞ்சிலே அலைமோத மெய்சிலிர்க்கிறோம்.

காளிதாஸனும், கம்பனும் 'தாமரை போன்ற முகம்' என்ற அந்தப் பழைய உவமையைக் கருவியாக வைத்துக் கொண்டுதான் இங்கே சௌந்தர்ய கீதம் பாடி இருக்கிறார்கள். ஆனாலும், நைந்துபோன கிழிசல் என்று நாம் எண்ணிய அந்த உவமை, அவர்கள் கையில், எழில் அணங்கு உடுத்துகின்ற பீதாம்பரம் ஆகி விடுகிறது. ஜன்னலில் தாமரை பூத்தது என்ற வழக்கத்துக்கு மாறான செய்தி ஒன்றால், நம்முடைய கற்பனையைத் தூண்டி, பிறகு, தாமரையின் அழகையும், வனிதையர் முகத்தின் பொலிவையும் ஒன்றாக இசைக்கும் உருவகத்தை அவர்கள் சிருஷ்டி செய்யும் போது, பழைய தாமரை புதிய அழகு பெறுகிறது. நீண்ட மரபினால், வலி மிழந்த பழைய உவமை புதிய சக்தி பெறுகிறது. இதில் வியப்பு என்ன? உவமை மாத்திரமா, கவிஞர் கையாளும் சொல்லும், மொழியிலே பல காலமாக உள்ள சொல்தானே! அவர்கள் தொட்டதும் அதற்கு, இல்லாத ஆற்றல் வந்து விடவில்லையா?

(தொடரும்)



## நாங்கள் அறியோம்...!

கருமை நிறமுள்ள ரோமம் கவலையினால்
நரையாகும் ஆகாது என்பதை நாங்கள்
அறியோம். ஆனால் நரை ஏற்படுவதற்குக்
காரணம் எதுவாயினும், நரைத்த ரோமங்களை,
லோமா நிச்சயமாக மீண்டும் கருமையடையச்
செய்கிறது என்பதை நாங்கள் அறியோம்.

TAM




உலகப் பிரசித்தி பெற்ற லோமா
கோத்திரங்கள் இயற்கையாகவே
கருமையையும் வனப்பையும்
தருபவை.

எம். எம். கம்பாட்வாலா அஹமதாபாத் 1
வி. நரோத்தம் அண்டு கோ பம்பாய் 2

ஸ்டாக்கிஸ்டுகள் :

| | |
|---|---|
| மதராஸ் : | ஜே. பாலபாய் & கம்பெனி<br>260, எஸ்பிளனேட், மதராஸ் - 1 |
| திருவனந்தபுரம் : | ராஜன் மெடிகல் ஸ்டோர்ஸ்<br>ஹாஸ்பிடல் வியூ, திருவனந்தபுரம் |
| கோயமுத்தூர் : | எஸ். ஒட்டாஜி பிரான்ச்<br>தபால் பெட்டி நெ. 7, கோயமுத்தூர் |
| சேலம் : | விஜய் ஸ்டோர்ஸ், மார்க்கெட், சேலம் |

அழகப்பரின் அதிசய சாதனைகள்-3

# அழகப்பா பொறி இயல் கல்லூரி

**பகீரதன்**

உலகத்தில் இல்லாத ஒரு அதிசயம் நமது நாட்டில் நடைபெற்று வருகிறது. சென்னை ராஜ்யத்தில் இருந்து ஒரு தகுதி வாய்ந்த இளைஞன் இங்கிலாந்துக்குச் சென்று மேல் படிப்பு படிக்க விரும்பினால் அவனுக்கு அங்கு சுலபமாக இடம் கிடைத்து விடுகிறது. உலகப் புகழ் பெற்ற ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் போன்ற சர்வகலாசாலைகளிலும் இடம் கிடைத்து விடுகிறது. என்ஜினியரிங் பயிற்சிக்கும் இடம் கிடைத்து விடுகிறது.

இங்கிலாந்தில் படிப்பதற்கு இடம் கிடைப்பது போலவே அமெரிக்காவிலும் கிடைத்து விடுகிறது. அந்த நாடுகளில் உள்ள எந்த சர்வகலாசாலையிலும் இந்திய மாணுக்கர்கள் இடம் சம்பாதித்துக் கொள்ளலாம்.

ஆனால் சென்னை மாகாணத்தில் பிறந்த இளைஞன் ஒருவன் சென்னை இன்ஜினியரிங் கல்லூரியிலோ, மருத்துவக் கல்லூரியிலோ இடம் பெறுதல் அரிது! இந்த உலகில் மானிடராய்ப் பிறத்தலையும்விட மிக அரிது!

காலேஜில் இண்டர்மீடியட் என்னும் இடை வகுப்பில் தேறிய மாணுக்கர்கள் முதலில் இன்ஜினியரிங் கல்லூரியிலோ, மருத்துவக் கல்லூரியிலோ இடம் தேடுவார்கள். இவர்களோடு போட்டி போட்டுக் கொண்டு பி. ஏ. பட்டம் பெற்றவர்களும் அங்கு வந்து விடுவார்கள்.

இண்டர்மீடியட் தேறிய மாணுக்களுயிருந்தாலும் பி. ஏ. தேறிய மாணுக்களுயிருந்தாலும் மேற்படி கல்லூரிகளிலே அவ்வளவு சுலபமாக இடம் பெற்று விட முடியாது.

சாதி, குலம், மதம், ஜில்லா ஆகிய அதிசயமான பல பரீட்சைகளிலும், அபூர்வமான பல சோதனைகளிலும் அந்த மாணுக்கர்கள் தேறியாக வேண்டும்!!!

ஆலயங்களுக்குள் இல்லாத சாதி வேற்றுமை, ஹோட்டல்களில் இல்லாத சாதி வேற்றுமை, பொது வாழ்வில் இல்லாத சாதி வேற்றுமை அறிவை வளர்க்கும் கல்வி ஸ்தாபனங்களில் மட்டும் இருந்து வருகிறது. இந்தச் சாதி வித்தியாசம் தொலைய வேண்டாமா? அதற்கு என்ன செய்வது?

உடனடியாக ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒரு இன்ஜினியரிங் கல்லூரியையும் மருத்துவக் கல்லூரியையும் ஆரம்பித்துவிட வேண்டியது தான் சிறந்த வழி. இதற்குச் சர்க்கார்தான் உதவி செய்ய வேண்டும் என்பதல்ல. ஈகைக் குணம் படைத்த மனிதர்களும் செய்யலாம். சமூகத் தலைவர்களும் செய்யலாம்.

இந்த நாட்டிலிருந்து சாதிப் பேய் ஓட வேண்டும். எல்லோரும் அறிவுபெற்றவர்களாக விளங்க வேண்டும். மக்கள் வெறும் கலைக் கல்வி கற்றால் மட்டும் போதாது. தொழிற் கல்வியும் பயில வேண்டும். அதுதான் மிக அவசியம். உழைப்பின் மூலமாகத்தான் ஒரு மனிதனும், அவன் வாழும் நாடும் உயர முடியும் என்பதை நாம் நன்கு அறிவோம். ஆனால் யாரும் காரியத்தில்தான் செய்வதில்லை. செய்ய முயலுபவர்களுக்கும் இந்த நாட்டில் நல்ல ஆதரவு கிடைப்பதில்லை.

ஆனாலும் இப்படி எத்தனையோ இடையூறுகள் இருந்தாலும் அத்தனைக்கும் மத்தியில் இந்த நாட்டிலிருந்து சாதிப் பேய் ஒழிந்து கல்வி ஸ்தாபனங்கள் உயர வேண்டும் என்பதை உணர்ந்த உத்தமர் ஒருவர் இருக்கிறார். அவர்

திரு டி. எஸ். வெங்கண்ணா—பிரின்ஸிபல்

தான் கோட்டையூர் வள்ளல் என்று புகழ் பெற்ற டாக்டர் அழகப்பர் அவர்கள். அந்தத் தர்மசீலர் காரைக்குடியில் பொறி இயற் கல்லூரி ஆரம்பித்து அதை மிகச் சிறந்த முறையில் நடத்தி வருகிறார்.

** ** **

எட்டு ஆண்டுகளுக்கு முன்னால் காடும் மேடுமாக இருந்த பூமி, நரிகளும் கொடிய விஷ ஜந்துக்களும் வாழ்ந்து வந்த வனப் பிரதேசம், பகலில்கூட அந்தப் பக்கம் நடப்பதற்குப் பயப்படும்படியாக இருந்த பயங்கரமான இடம் இன்று ஆயிரக்கணக்கான மாணவர்கள் உல்லாசமாகப் பவனிவரும் கலைக்கூடமாக, சொப்பனபுரியாக மாறி விட்டது. விஞ்ஞான நிபுணர்களும், கணிதவல்லுநர்களும், கட்டடக் கலைஞர்களும், மின்சார நுணுக்க ஆராய்ச்சியாளர்களும், கலைவாணர்களும், சித்திரக் கலைஞர்களும், சங்கீதக் கலைஞர்களும் வளரும் தெய்வ பூமியாக மாறி விட்டது. தினம் தினம் உலகத்துப் பேரறிஞர்கள் எல்லாம், மாபெரும் தலைவர்கள்

தனி நகரமாகவே ஒளிபெற்றுத் திகழ்கிறது. ஆமாம்; அழகுக் கலைகள் மிளிர அழகப்பா நகரமாகக் காட்சி அளிக்கிறது.

இந்தக் கல்வி ஸ்தாபனத்தின் தந்தை டாக்டர் அழகப்பர். எட்டே ஆண்டுகளுக்குள் உலகத்துக் கல்வி ஸ்தாபனங்களின் கவனங்களை எல்லாம் கவரும் முறையில் டாக்டர் அழகப்பர் தம்முடைய கல்லூரிகளை அற்புதமான முறையில் வளர்த்திருக்கிறார்.

உலகில் யார் யாரோ என்னென்னவோ தர்மங்கள் செய்கிறார்கள். ஆனால் கல்வி தர்மம் போல் சிறந்த தர்மம் வேறில்லை. இதையேதான் மகாகவி பாரதியார் மிக அழுத்தந் திருத்தமாகக் கூறியிருக்கிறார். ஆனந்த வெறியுடன் பாடியிருக்கிறார்.

அன்னசத்திரம் ஆயிரம் வைத்தல்
ஆலயம் பதினாயிரம் நாட்டல்
அன்ன யாவினும் புண்ணியம் கோடி
ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல்

என்று முரசு கொட்டி முழங்கி யிருக்கிறார். எழுத்தறிவு செய்வது எவ்வளவு பெரிய



அழகப்பா கல்லூரிகளுக்கான பல கட்டடங்கள் உருவாகி வருகின்றன. இதோ, அழகப்பா பொறி இயற் கல்லூரியின் நிர்வாகக் காரியாலயம் கட்டப்பட்டு வருவதைப் பாருங்கள்.

எல்லாம் வருகை தரும் புனித ஸ்தலமாகப் புத்துயிர் பெற்று விளங்குகிறது.

ஒரு தனி மனிதரா இத்தகைய அபூர்வ காரியத்தைச் சாதித்திருக்கிறார் என்பதை எண்ணும்போது ஆச்சரியமா யிருக்கிறது.

நேயர்களில் பலர் காரைக்குடி ரயில்வே ஸ்டேஷனைப் பார்த்திருப்பார்கள். அந்த ஸ்டேஷனுக்குச் சற்றுத் தூரத்திலேதான் பிரசித்திபெற்ற அழகப்பா கல்லூரிகள் இருக்கின்றன. பல லட்சம் ரூபாய் செலவில் கட்டப்பட்ட கட்டடங்கள்; விசாலமான மண்டபங்கள்; குறுக்கும் நெடுக்குமாகச் செல்லும் நெடிய சாலைகள்; சாலைகளுக்கு இருபுறமும் வரிசை வரிசையாகப் பசுமையான மரங்கள்; விசாலமான மிகப் பெரிய விளையாடுமிடங்கள்; நூல் நிலையங்கள்; கண்காட்சிச் சாலைகள்; மாணவர் விடுதிகள்; மாணவிகளின் வாசஸ்தலங்கள்; குழந்தைகளின் இல்லங்கள்; நூற்றுக்கணக்கான சிப்பந்திகளின் மனைகள்—இம்மாதிரி எத்தனை எத்தனையோ நவீன வசதிகளுடன் அழகப்பா கல்லூரிகள் கம்பீரமாக விளங்குகின்றன.

தர்மம் என்பதை உலக மக்களுக்கு மிக வன்மையாக எடுத்துக் காட்டியிருக்கிறார்.

இதை நன்கு உணர்ந்த டாக்டர் அழகப்பர் கவியரசரின் வாக்கை மீறி இன்னும் ஒரு படி மேலே சென்றிருக்கிறார். எழுத்தறிவுடன் தொழில் அறிவும் காணும்படியான மிகச் சிறந்த பொறிஇயற் கூடமே கட்டியிருக்கிறார்!

முதன் முதலில் சென்னை ராஜ்யத்தில் தொழிற் கல்விக்கான இன்ஜினீயரிங் கல்லூரி ஆரம்பிப்பதற்குத் தர்மம் செய்தவர் டாக்டர் அழகப்பர்தான். அண்ணாமலை சர்வகலாசாலையில் இன்ஜினீயரிங் பகுதி ஆரம்பிப்பதற்கு ஐந்து லட்சம் ரூபாயை வெள்ளித் தாம்பாளத்தில் வைத்துத் தந்து உடனே இன்ஜினீயரிங் கல்லூரி ஆரம்பிக்கும்படி, காலம் சென்ற ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியாரிடம் கேட்டுக் கொண்டார் டாக்டர் அழகப்பர். அழகப்பரின் விருப்பப்படியே அண்ணாமலை சர்வகலாசாலையில் இன்ஜினீயரிங் கல்லூரி ஆரம்பிக்கப்பட்டது. வானோங்கி நிற்கும் இமயமலையைப் பார்க்கிறோம். ஆனால் அது அவ்வாறு நிற்பதற்குத் துணை செய்து வரும் அதன் அஸ்திவாரம் நம் கண்ணுக்குத்

தெரிவதில்லை. பூமிக்கு அடியில் இருக்கும் இன்னொரு இமயமலை தன் புகழைத் தியாகம் செய்து பூமிக்கு மேலே தெரியும் இமயமலைக்குப் புகழ் தேடிக் கொடுக்கிறது. அது போல அண்ணாமலை சர்வகலாசாலையில் இருக்கும் இன்ஜினீரியங்கல்லூரி ஆரம்பிப்பதற்கு அஸ்திவாரமாகத் துணை செய்தவர் டாக்டர் அழகப்பர். ஆகவே இந்த இன்ஜினீயரிங் கல்லூரியை 'அழகப்பா இன்ஜினீயரிங் கல்லூரி' என்று சொன்னாலும் தவறாகாது. இன்னும் சென்னையில் இருந்த ஒரு இன்ஜினீயரிங் கல்லூரி போதாது என்று உணர்ந்து இன்னொரு கல்லூரி ஆரம்பிப்பதற்கு ஐந்து லட்சம் ரூபாய்களை அள்ளிக் கொடுத்தார். அவர் கொடுத்த நன்கொடையைக் கொண்டு கிண்டியில் 'அழகப்பச் செட்டியார் தொழிற் கல்லூரி' என்று அவர் பெயரிலேயே ஒரு தொழிற் கல்லூரி ஆரம்பிக்கப்பட்டு நடைபெற்று வருவதை நேயர்கள் பலர் அறிந்திருக்கலாம். இவ்வாறு அண்ணாமலை நகரிலும், சென்னையிலும் இன்ஜினீயரிங் கல்லூரிகள் ஆரம்பிப்பதற்குத் துணை செய்ததுடன் திருப்தியடையாமல், காரைக்குடியிலும் ஒரு பொறி இயற் கல்லூரியைத் தம்முடைய சொந்தப் பொறுப்பிலேயே ஆரம்பித்து நடத்தி வருகிறார்.

இந்தப் பொறி இயல் கல்வி ஸ்தாபனம் 1952ம் ஆண்டுதான் ஆரம்பமாயிற்று. இந்த நாலு ஆண்டுகளிலேயே இந்தியாவில் உள்ள மிகச் சிறந்த இன்ஜினீயரிங் கல்லூரிகளுக்குச் சமமாக ஓங்கி வளர்ந்து விட்டது.

இப்பொழுது அழகப்பா பொறி இயற் கல்லூரியில் பலவிதமான இன்ஜினீயரிங் சாதனைகளையும் கற்றுக் கொடுக்கிறார்கள். கட்டடம் கட்டும் கலை, சாலைகள் அமைக்கும் கலை, மின்சார நுணுக்கக் கலை, இயந்திரக் கலை முதலிய நவீன பொறி இயல் உலகத்துக்கு வேண்டிய பல அபூர்வ கலைகளையும் கற்றுக் கொடுக்கின்றனர். இவைகளைப் பற்றிச் சொல்லிக் கொடுப்பதற்கு, அறிவும், ஆற்றலும், அனுபவமும் நிறைந்த பல ஆராய்ச்சி நிபுணர்களும் இங்கு இருக்கின்றனர்.

பாட புத்தகங்களில் படிப்பதை விட நேர்முகமாகக் கைத்தொழிலில் ஈடுபட்டு மேற்படி கல்விகளைப் பயிலுவதற்கான எல்லா வசதிகளும் இந்தக் கல்லூரியில் இருக்கின்றன.

சமீபத்தில் அழகப்பா மின்சாரப் பொறி இயல் மாணவர்களின் உற்சாகத்துடன் கூடிய ஒத்துழைப்பால் காரைக்குடியில் பொறி இயற் கண்காட்சி ஒன்று நடைபெற்றது. அதில் மின்சாரப் பொறி இயல் மாணவர்களேசெய்த பல அதிசயப் பொருள்களைக் காட்சியில் வைத்திருந்தார்கள். மூன்று அடுக்கு நாலு அடுக்கு உள்ள பெரிய மாடிகளில் ஏறி இறங்கும் வசதியுள்ள மின்சார லிப்ட், தானே இயங்கி இசை வழங்கும் அதிசய மின்சார ஹார்மோனியம், காட்சிச்சாலைக்கு வருகிறவர்களை வரவேற்றுக் கை எடுத்து வணங்கும் இயந்திர மனிதன் முதலிய அற்புதங்களைக் காட்சிக்கு வந்த எல்லாரும் கண்டு மூக்கின் மேல் விரல் வைத்து அதிசயித்தனராம்.

குறைந்த காலத்திலேயே மாணவர்கள் திறமையாகத் தொழில் புரியும்படி செய்த அழகப்பா பொறி இயற் கல்லூரி நிர்வாகிகளை எல்லாரும் வியந்து பாராட்டினார்கள்.

சுருக்கமாகச் சொன்னால் அழகப்பா பொறி இயல் மாணவர்கள் கல்லூரியை விட்டு வெளியில் வந்ததும் தாங்கள் கற்ற கல்வியை மிகுந்த தன்னம்பிக்கையுடன் பயன்படுத்தும் திறமையான இன்ஜினீயர்களாகத் திகழுவார்கள் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

அழகப்பா பொறி இயற் கல்லூரி மாணவர்கள் படிப்பு, உடல் உழைத்து வேலை செய்தல் முதலியவைகளுடன் ஏதாவது விளையாட்டிலும் பங்கு கொள்ள வேண்டும் என்று அறிகிறேன். அவர்களுக்காகத் திறந்த வெளி சினிமா தியேட்டர் ஒன்றும் இருக்கிறது. இதில் இன்ஜினீயரிங் சம்பந்தமான பல படங்கள் அடிக்கடி காட்டப் படுகின்றன. பாட புத்தகங்கள் மூலமாகப் பயின்ற பல இன்ஜினீயரிங் கலைகளைப் படங்கள் மூலமாகவும் பார்த்துப் பயன் பெற்று வருகிறார்கள்.

மாணவர்களின் ஒழுக்க உணர்ச்சியை மிக ஜாக்கிரதையாகக் கல்லூரி நிர்வாகிகள் கவனித்து வருகிறார்கள். பல கட்டுப்பாடுகள் மூலம் மாணவர்கள் ஒழுக்கம் காப்பாற்றப் பட்டு, அவர்கள் எண்ணங்கள் தாங்கள் மேற்கொண்ட கல்வியில் நன்றாகத் தொழிற்படும்படி செய்திருக்கிறார்கள்.

எதிர்காலத்தில் இந்த அழகப்பா பொறி இயற் கல்லூரியிலிருந்து எத்தனையோ உலகம் போற்றும் இன்ஜினீயர்கள் தோன்றுவதற்கான நல்ல அஸ்திவாரத்தை அமைத்திருக்கிறார்கள். இதை இந்தக் கல்லூரியில் இருந்து முதல் முதலாகப் பரீட்சைக்குச் . சென்ற மாணவர் குழுவே நிரூபித்து விட்டது.

சென்ற ஆண்டு சிவில் இன்ஜினீயரிங் கலையில் பரீட்சைக்குச் சென்று தேறிய மாணவர்களில் ஒருவர் சென்னை ராஜதானியிலே முதன் மாணவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். மற்ற மாணவர்கள் எல்லாம் நல்ல மார்க்குகள் பெற்றிருக்கின்றனர். இதைப் பார்த்து இந்தியாவில் உள்ள அத்தனை இன்ஜினீயரிங் கல்லூரிகளும் பொறாமைப் படலாம். தமிழ் மக்கள் இதை எண்ணி எண்ணித் தலைநிமிர்ந்து நடக்கலாம்.

இந்த விவரங்களை எல்லாம் அழகப்பா பொறி இயற் கல்லூரியின் பிரின்ஸிபல் திரு டி.எஸ். வெங்கண்ணா பி. எஸ்சி., பி.இ., எம். ஐ. இ. அவர்கள் மிகுந்த பெருமிதத்துடனும் உற்சாகத்துடனும் கூறினார்.

அழகப்பா பொறி இயற் கல்லூரி ஆரம்பித்து ஐந்து ஆண்டுகள்தான் ஆனபொழுதிலும் அதில் நூறு வருஷங்களாக நடைபெற்றுவரும் இன்ஜினீயரிங் கல்லூரிகளில் இருப்பது போன்ற ஏராளமான இயந்திர சாதனங்கள் இருக்கின்றன. நவீன வசதியுடன் கூடிய இயந்திரங்களும், இதர இன்ஜினீயரிங் கருவிகளும் இருக்கின்றன.

''இந்தக் கருவிகள் எல்லாம் எவ்வளவு ரூபாய் மதிப்பு இருக்கும் ?''

''சுமார் இருபது லட்ச ரூபாய் மதிப்பு இருக்கும். இன்னும் பல லட்ச ரூபாய்களுக்கு இயந்திரச் சாமான்கள் வரவழைப்பதற்கான ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருக்கிறது'' என்று பதில் கிடைத்தது.

திரு வெங்கண்ணாவிடம் இன்னும் பல விஷயங்களைப் பற்றி விசாரித்தேன். ''உழைப்புத்தான் செல்வம் ''என்பது இந்தப் பொறி இயல் கல்லூரியில் அஸ்திவாரம் என்று கூறினார். இந்தக் கல்லூரியை ஆரம்பித்த திரு அழகப்பரின் சித்தாந்தமும் அதுதான்.உழைப்புச் சக்தியின்மீது அவருக்கு எல்லையற்ற

மோகம். தம்மைப் போலவே எல்லாரும் உழைக்க மாட்டேன் என்கிறார்களே என்று அவருக்குப் பலர்மீது அளவற்ற கோபம். அது மட்டுமல்ல, திரு அழகப்பருக்கு இன்னும் பல கோபங்களும் உண்டு என்று அறிந்தேன். அவர் நினைக்கிற படி கலாசாலை வளர்ச்சிக்கு உதவி புரியாதவர்கள் மீது கோபம். எதிர் பார்க்கும் அளவுக்குக் கல்லூரிகளில் அவருடன் ஒத்துழைக்காத கல்லூரி நிர்வாகிகளிடம் கோபம். இந்தக் கோபத்தின் காரணமாக எல்லாக் காரியத்தையும் தாமே கவனிக்க லாம் என்றால் அவருடைய உடல் நிலை அவருடன் ஒத்துழைக்க மறுக் கிறது. அதை எண்ணும் பொழுது அவருக்குப் பல சமயங்களில் அவர் மீதே கோபம் கோபமாக வரும்.

அழகப்பரின் கோபங்கள் எல்லாம் சேர்ந்து கலாசாலையின் லாபங்களாக மாறிவிடுகின்றன. அழகப்பர் மேலும் மேலும் நன்றாகக் கோபப்படட்டும். அதன் பயனாக அவருடைய கலாசாலை கள் மேலும் மேலும் பயன் பெறட் டும் என்று எண்ணம் கொண்டேன்.

இந்திய சர்க்காருக்கு ஏதாவது கடிதம் எழுதினால் அதனால் தாமதம் ஏற்பட்டு விடும் என்று, கடிதத் துடன் தாமே நேரில் டில்லிக்குச் சென்று வருவாராம்.

** ** **

வியப்பு தரக்கூடிய ஒரு ரஸமான சம்பவம் கேள்விப்பட்டேன்.

காரைக்குடியில் மின்சார ரஸாயன ஆராய்ச்சிக் கூடம் ஒன்று நிறுவுவ தற்காக நிலமும், பணமும் நன் கொடை அளிப்பதற்குச் சென்னையி லிருந்து விசேஷ விமானத்தில் டாக்டர் அழகப்பர் டில்லிக்குப் பறந் தாராம். அன்று இரவு பன்னிரண்டு மணிக்குப் பாரதத்தின் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேருவை நேரில் பார்த்து மேற்படி ஸ்தாபனத்துக்கான நன்கொடையை ஏற்றுக் கொள்ளும்படி செய்து மின் சார ரஸாயன நிலயத்தைக் காரைக் குடியில் ஆரம்பித்தாராம். நன் கொடை கொடுப்பதில் கூட டாக்டர் அழகப்பருக்கு அவசரம்! சும்மாவா சொன்னார் பொய்யாமொழிப்புலவர்?

" ஞாலம் கருதினும் கைகூடும் காலம்
கருதி இடத்தான் செயின் "

என்றல்லவா சொல்லியிருக்கிறார்!

இவ்வாறு அதிசயமான சாதனைகள் புரிந்து வரும் அழகப்பரின் பொறி இயற் கல்லூரியிலிருந்து இன்னும்

---

அழகப்பா பொறி இயற் கழகத்தில் உள்ள இயந்திரப் பகுதிகள். 1. நீர் சக்தி ஆராய்ச்சிக் கூடம். 2. 3. 4. மின்சார ஆராய்ச்சிக் கூடத்தில் மெ காட்சிகள். மாணவர்கள் ஆராய்ச்சி யில் ஈடுபட்டிருப்பதைக்கவனியுங்கள்.



நூற்றுக் கணக்கான, ஆயிரக் கணக்கான அழகப்பர்கள் தோன்றி இந்தச் செந்தமிழ் நாட்டைச் செழிப்புள்ள நாடாக மாற்ற வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்.

## பொறி இயற் கழக பிரின்ஸிபல்

அழகப்பா பொறி இயற் கழக பிரின்ஸிபல் திரு டி. எஸ். வெங்கண்ணா அவர்கள் மைசூர் ராஜ்யத்தைச் சேர்ந்தவர். மைசூர் சர்க்காரில் பிரதம இன்ஜினீயராகப் பணியாற்றியவர். மைசூரில் உள்ள நீர்வளத்தை உபயோகிப்பதற்கு அருமையான யோசனைகள் கூறியவர். இவர் மைசூர் ராஜ்யத்தின் உயர்வுக்குப் பலகாலம் தொண்டாற்றிவிட்டு ஐந்து ஆண்டுகளுக்கு முன்தான் ஓய்வுபெற்றார்.

அவர் ஓய்வு பெற்றதை அறிந்தவுடனேயே ஏதோ தமக்காகத்தான் அவருக்கு மைசூர் சர்க்கார் ஓய்வு கொடுத்ததாக எண்ணி அழகப்பா பொறி இயற் கல்லூரிக்கு பிரின்ஸிபலாக இருக்கும்படி செய்து விட்டார் டாக்டர் அழகப்பர். திறமையைத் தேடிச் சென்று அதற்கு மதிப்பு அளிக்கும் வழக்கம் டாக்டர் அழகப்பரிடம் இயற்கையிலேயே இருக்கிறது. இந்த மாதிரி எண்ணம் மற்றெல்லாத் துறைகளிலும் உள்ள அதிபர்களுக்கும் ஏற்பட்டால் நாடு நலம் பெறுவதற்கு நல்ல வழி பிறக்கும்.

திரு வெங்கண்ணா தம்முடைய நீண்டகால அனுபவத்தை அழகப்பா பொறி இயற் கல்லூரியின் வளர்ச்சிக்காக உபயோகித்து வருகிறார். "ஏட்டுக் கல்வி மக்களுக்குப் பயன்படாது. உடல் உழைப்புடன் கூடிய தொழிற் கல்விதான் மக்களை உயர்த்தக் கூடியது" என்பதை நன்கு உணர்ந்திருக்கிறார்.

அதனால் அங்குள்ள மாணவர்களை உடல் உழைப்புக்குத் தயார் செய்து வருகிறார். மாணவர்களைத் தேச பக்தியிலும், திறமையிலும், கட்டுப்பாட்டிலும், கடமை உணர்ச்சியிலும் சிறந்தவர்களாக மாற்றி வருகிறார்.

இந்த விஷயங்களைப் பற்றி யெல்லாம் பிரின்ஸ்பல் திரு வெங்கண்ணாவிடம் பேசிக் கொண்டே பொறி இயற் கல்லூரியின் பல பகுதிகளையும் பார்த்து வந்தோம். சுமார் இருநூற்று ஐம்பது வகையான இன்ஜினீயரிங் தளவாடச் சாமான்களின் பெயர்களையும், அதன் அவசியத்தையும் பற்றி அவர் விளக்கிக் கூறியபோது எனக்குத் தலையைச் சுற்ற ஆரம்பித்து விட்டது. அடாடா! பொறி இயற் கலை என்பது எவ்வளவு பெரியது! எவ்வளவு நுணுக்கமானது என்பதை உணர்ந்து கொள்ள முடிந்தது.

இன்னும் அங்குள்ள தொழிற்கூடங்களை எல்லாம் பார்த்தபோது இவை யெல்லாம் நிறுவி நாலு ஆண்டுகள்தான் ஆகின்றன என்பதை என்னால் நம்பவே முடியவில்லை. அவ்வளவு அற்புதமாக இருந்தன தொழிற்கூடத்தின் தோற்றமும் அமைப்பும்.

தச்சுப் பட்டறை, கொல்லுப் பட்டறை, இரும்பை உருக்கி இயந்திரங்களை வார்க்கும் கூடம், இயந்திரக்கூடம், இவைகளுக்கெல்லாம் வேண்டிய ஏராளமான சாமான்கள் சேகரித்து வைத்திருக்கும் பண்டகசாலை இவைகளை எல்லாம் பார்க்கும்போது நான் இந்த உலகத்திலேயே இல்லை. மனித நடமாட்டமே இல்லாத இயந்திர உலகில் இருப்பது போன்ற பிரமைதான் ஏற்பட்டது. ஒவ்வொரு பகுதியிலும் அதிசயமும் அற்புதமும் நிறைந்து இருக்கின்றன.

இந்த இடங்களுக்கெல்லாம் என்னை அழைத்துக்கொண்டு வந்து காண்பித்தார் பிரின்ஸ்பல் திரு வெங்கண்ணா.

"இன்னும் ஏதாவது பார்க்க வேண்டுமா?"

"என்னென்ன பார்க்க வேண்டும் என்பதை நீங்கள்தானே கூற வேண்டும்?" என்றேன்.

"இன்ஜினீயரிங் கல்லூரிக்குத் துணைபுரியும் 'பாலிடெக்னிக்' கலாசாலையையும் பார்த்து விட வேண்டும்" என்றார்.

"பாலிடெக்னிக்கா? அப்படி என்றால்?"

"பட்டப் படிப்புப் பெறாத மாணவர்கள் தொழில் பயிலும் இடம். வெறும் இன்ஜினீயர்கள் மட்டும் இருந்து விட்டால் போதுமா? அவர்களுக்குத் துணைபுரியும் தொழில் நிபுணர்களும் வேண்டாமா? அப்படிப்பட்ட தொழில் நிபுணர்களைத் தயாரிக்கும் இடம் தான் பாலிடெக்னிக்" என்று கூறிவிட்டு அந்தப் பகுதிக்கு அழைத்துப் போகும்படி அங்கிருந்த அதிகாரிக்கு உத்தரவிட்டார்.

பொறி இயற் கல்லூரி பிரின்ஸ்பல் திரு வெங்கண்ணாவிடம் விடைபெற்றுக் கொண்டு 'பாலிடெக்னிக்' பகுதிக்குச் சென்றேன்.

அழகப்பா பாலிடெக்னிக் பகுதியையும், இதர கல்லூரிகளையும் இன்னும் சில மணி நேரத்துக்குள் பார்க்கலாம். (தொடரும்)

# எழில் மிக்க









**சுந்தரம் மோட்டார்ஸ் பிரைவேட் லிட்.**
**மௌண்ட் ரோட், சென்னை – 6.**

**டி. வி. சுந்தரம் அய்யங்கார் & ஸன்ஸ் பிரைவேட் லிட்.**
**கிளைகள் : திருச்சிராப்பள்ளி, திருநெல்வேலி, புதுக்கோட்டை, சேலம் & கோயம்புத்தூர்.**

TVS3-98TM

டி. வி. எஸ். சப் - டீலர்கள் :

**M/s. C. C. ஆட்டோமொபைல்ஸ் லிட்.**
கோழிக்கோடு

**M/s. கொல்லம் ஆட்டோமொபைல்ஸ்**
தபால்பெட்டி நெ. 32, கொல்லம்

**மிஸ்டர் U. சுப்ராய நாயக்**
கன்டோன்மெண்ட், மங்களூர்

சுந்தரம் மோட்டார்ஸ் சப்-டீலர்கள் :

**மெஸர்ஸ் D. S. ஆட்டோமொபைல்ஸ்**
நெல்லூர்

**மெஸர்ஸ் கரபதி கராஜ்**
**(ஜெனரல் மெஷினரி & ஆட்டோ ஸ்டோர்ஸ்)**
காந்தி நகர், விஜயவாடா

## நண்பர்கள் வந்தால்-
## தேநீர் கொடுத்து
## உபசரியுங்கள்



**தேநீரின் சமுதாய நன்மைகள் யாவை?**

முதலாவதாக, இன்பம் நிறைந்த, மிதமாகத் தூண்டுவிக்கும் பானமாக அதை யாரும் எப்பொழுதும் அருந்த முடியும்.

இரண்டாவதாக, தேநீர் நட்புமிக்க சூழ்நிலையை ஏற்படுத்துவதன் மூலம் அமைதியான சம்பாஷணையை ஊக்குவிக்கிறது. எனவே, நன்கு பார்க்குமிடத்து, தேநீர் ஒற்றுமையின் பானமாகும்.



**நான்தான் Te** – விருந்தோம்பலின் சின்னம்



# ரகுபதி  ராகவ

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

## 56

மனிதன் பூரணத்தை அடைய ஆசைப்படுகிறான். முயற்சியும் செய்கிறான். இதனின்றே ஹிந்து சம்பிரதாயத்தில் பகவான் அடிக்கடி அவதாரம் எடுக்கிறான் என்கிற கொள்கை பிறந்திருக்கிறது.

கடவுள் தன்மையை அடைய வேண்டும் என்று மனிதனுடைய உள்ளத்தில் இடைவிடாத ஆசையொன்று இருக்கிறது. ஆசைகளுக்குள் தர்மத்துக்குப் புறம்பாகாத ஆசை இது. தெய்விகத் தன்மையை ஆன்மா அடைய முடியும். கீதை மட்டிலுமல்ல, எல்லா மதங்களிலுமே 'உன்னுடைய பூரணத்தை நீ கண்டு கொள்' என்று உபதேசிக்கப் படுகிறது. இந்தப் பூரணத்தை அடைவது எப்படி, தன்னைத்தான் உயர்த்திக் கொள்வது எப்படி, இதற்கு கீதை வழி காட்டுகிறது. ஹிந்து நூல்களில் எல்லாம் ஆங்காங்கே சொல்லப் பட்டிருந்த போதிலும், மிகத் தெளிவாக கீதையில் இது விளக்கப் பட்டிருக்கிறது. நன்றாகத் தெளிவு படுத்துவதற்காக, 'கூறியது கூறல்' என்கிற குற்றத்தையும் பாராமல் திரும்பத் திரும்பச் சொல்லப்பட்டிருக்கிறது.

தன்னைத்தான் உயர்த்திக் கொள்வதற்கும் ஆன்மா பூரணத்தை அடைவதற்கும் வழி ஏதெனின், செய்யும் செயலில் உண்டாகும் பயனைக் கருதாமல் செய்ய வேண்டியதைச் செய்து முடித்தல். இதுவே கீதையின் முக்கியமான உபதேசம்.

கீதா சாஸ்திரத்தின் நடுநாயகமாக விளங்குவது, லாபத்தைக் கருதாமல் கடமையைச் செய்ய வேண்டும் என்கிற உபதேசம். துறவு என்றால் செயலினால் உண்டாகும் லாபத்தைத் துறத்தல். சந்நியாசம் என்றால் சுயநலனை விட்டு விடுதல். சுயநலனைக் கருதாமல் செய்ய வேண்டியதைச் செய்து கொண்டு போவதே உண்மையான துறவு நிலை. மற்ற உபதேசங்கள் எல்லாம் இந்த உண்மையை மையத்தில் வைத்து, சூரியனைக் கிரகங்கள் சுற்றுவது போலும் அதனின்று ஜோதியைப் பெற்றுப் பிரகாசிப்பது போலும் மற்ற எல்லா உபதேசங்களும் வேகம் பெறுகின்றன. தியானம், பக்தி, அமைதி முதலிய அனேக விஷயங்கள் கீதையில் போதிக்கப் பட்டாலும் பயனைக் கருதாமல் கடமையைச் செய்வதுதான் முக்கிய உபதேசம்.

உடல் என்பது ஒரு சிறை. அந்தச் சிறைக்குள் அடைபட்டிருக்கும் உயிர் கர்மம் செய்தே தீரவேண்டும். செய்யாமல் சும்மா இருக்க முடியவே முடியாது. இந்த நியதி அனைவரையும் கட்டுப் படுத்தும். ஆயினும் எல்லா மதங்களிலும் சொல்லப்படுவது என்னவென்றால் உடலை ஆண்டவனுடைய கோயிலாகக் கருதி வாழ்க்கை நடத்தினால் விடுதலை பெறலாம்.

எல்லாக் காரியத்திலுமே தோஷம் இருக்கும். எந்தச் சின்ன காரியத்திலுமே இது உண்மை. தோஷத்திலிருந்து முற்றிலும் விடுபட்ட செயலைக் காண்பது அரிது. செயலை எப்படிச் சுத்தமாக்குவது என்பது கேள்வி. உடலை எப்படி ஆண்டவனுடைய கோயிலாகச் செய்வது? இந்தக் கேள்விக்கு கீதையில் சொல்லப்படும் விடை என்னவென்றால், "சுயநலத்தைத் துறந்து எந்தச் செயலையும் செய், பலனைக் கருதாமல் கர்மத்தைச் செய், உன் காரியங்களை எல்லாம் ஆண்டவனுக்கு அர்ப்பணமாகச் செய். உன் உயிரையும் உடலையும் ஆண்டவனுக்குச் சமர்ப்பித்து விடு" என்பதே. இதுவே கீதையின் சாரம்.

பலனைத் துறந்து விட்டு உன் வேலையைச் செய் என்பது வெறும் பேச்சில் முடிந்து போகாது. உண்மையைக் காண



கோவையில் சிறப்பாக நடைபெற்று வரும் 'நவ இந்தியா' தினப் பத்திரிகையின் சென்னைப் பதிப்பு நவம்பர் 14ல் சென்னையில் ஆரம்பமாயிற்று. 'நவ இந்தியா' ஆரம்பவிழாவுக்குக் கல்விமந்திரி சுப்பிரமணியம் தலைமை வகித்தார். முதன் மந்திரி காமராஜ் பத்திரிகையை ஆரம்பித்து வைத்தார். விவசாய மந்திரி பக்தவத்சலம் ஆசி வழங்கினார். சென்னை நகரில் உள்ள எல்லாப் பத்திரிகை அதிபர்களும் விழாவில் கலந்துகொண்டு சிறப்பித்தார்கள். 'நவ இந்தியா'வின் ஆசிரியர் திரு ராமகிருஷ்ணன் எல்லோரையும் வரவேற்றுப் பேசுவதையும், மூன்று மந்திரிகளையும், சபையின் ஒரு பகுதியையும் படத்தில் காணலாம்.



பது மட்டும் போதாது. அந்த முடிவை அடைய வேண்டுமானால் உள்ளத்தைக் கடைந்து கடைந்து வெண்ணெயைத் திரட்ட வேண்டும். படிப்பு மட்டும் போதாது. படித்தவர்கள் அறிவை அடைகிறார்கள். வேதங்களைத் தலைகீழாக ஒப்பிப்பார்கள். எவ்வளவு அறிவு அடைந்திருந்தபோதிலும் சுயநலத்தை விட மாட்டார்கள். படிப்பு மட்டும் போதாது என்பதற்காகத்தான் கீதையில் பக்தியையும் தியானத்தையும் உபதேசிக்கிறான் கீதாசாரியன். சிரத்தையில்லாத அறிவு குறி தவறிய துப்பாக்கி வெடியைப் போலாகும். ஆனபடியால் கீதையில் சொல்லப்படுவது, பக்தி செலுத்து.அறிவுதானாகவேவரும்என்று.

பக்தி என்பது வெறும் வாசா கைங்கரியமல்ல. யமனுடன் மல்யுத்தம் செய்வது போன்றதாகும் உண்மையான பக்தி. இதனாலேதான் பக்தனுடைய இலட்சணங்களைச் சொல்லும் போதெல்லாம் கீதையில் யோகியைப் பற்றிச் சொல்வது போலச் சொல்லப்படுகிறது.

பக்தி வெறும் மூடக் கொள்கையல்ல. விஷயமறியாமல் பேச்சுகள் பேசுவது மல்ல. வெளி வேஷமும் அல்லவே அல்ல. துளசி மாலை, நெற்றியில் நாமம், கோவில் பூஜை இவையெல்லாம் இருக்கலாம். ஆனால் பக்திக்கு அடையாளம் இவை மட்டுமல்ல. யாரைக் கண்டும் பொறாமைப் படாதவன் பக்தன். உள்ளத்தில் இரக்கம் நிறைந்தவன் பக்தன். 'நான்' 'எனது' என்கிற அகங்கார மமகாரங்களைத் துறந்தவன் பக்தன். தன்னை மறந்தவன் பக்தன். குளிரும் வெப்பமும் இரண்டையும் ஒன்றாகக் கருதுவான். சுகம்-துக்கம் என்கிற வித்தியாசம் பார்க்க மாட்டான். பிறர் செய்த குற்றத்தை மறப்பான். எப்போதும், உள்ளத்தில் திருப்தி நிறைந்திருக்கும். மனத்தை உறுதி நிலையில் நிறுத்தி யிருப்பான். தன் உள்ளத்தையும் தன்னையுமே பகவானுக்கு அடிமையாக்கி விட்டிருப்பான். அவனுக்குப் பிறரைக் கண்டால் பயமில்லை; அவனைக் கண்டால் யாருக்குமே பயமிராது. நல்லது வந்தால் மகிழ்ச்சிப் பரவசமாக மாட்டான். கஷ்டத்தைக் கண்டு துக்கப்பட மாட்டான். பயப்பட மாட்டான்.

உள்ளம் எப்போதும் சுத்தமாக இருக்கும். செய்யும் செயல்களில் குற்றம் குறை இருக்காது. சாமர்த்தியமாகவே செய்வான். ஆனாலும் பயனைக் கருத மாட்டான். வெற்றியினாலும் தோல்வியினாலும் நிலை இழக்க மாட்டான். புகழும் இகழும் இரண்டையும் ஒரே விதமாகப் பொறுப்பான். பாராட்டுதலினால் கர்வமடைய மாட்டான். அவதூறினால் மனத்தாழ்ச்சியடைய மாட்டான். தனியாக இருப்பதும் பேசாமலிருப்பதுமே விரும்புவான். குற்றமற்ற அறிவைப் பெற்றிருப்பான். இவையே பக்தனைக் குறிக்கும் அடையாளங்கள். பற்றுக்களையறுத்தவனிடம்தான் இவற்றைக் காண முடியும்.




## 3. காதல் கடிதம்

பானுவுக்குத் தன் வேலை போய் விட்டதில் ஒரு சிறிதும் கவலை இருந்ததாகத் தெரியவில்லை. சிரித்த முகத்துடனேயே, '' சரி மாமி... '' என்று கணங்கூட யோசிக்காமல் சொல்லி விட்டுப் பாடி வந்த கவடு தெரியாமல் உள்ளே நடந்தான்.

சின்னத்துரையும் அம்மாவிடம் உத்தரவு கேட்டுக் கொண்டு வணக்கமாகச் சமையற்கட்டுக்குச் சென்ருன்.

திருமதி மார்க்கபந்து சற்று நிம்மதி யடைந்தவள் போல் ஒரு பெருமூச்சு விட்டவளாகப் படுத்துக் கொண்டாள். சமையற்கட்டு, அம்மாள் படுத்திருந்த முன் கூடத்திலிருந்து ஒரு நீண்ட

பானுவுக்குத் தன் வேலை போய் விட்டதில் ஒரு சிறிதும் கவலை இருந்ததாகத் தெரியவில்லை. சிரித்த முகத்துடனேயே, '' சரி மாமி... '' என்று கணங்கூட யோசிக்காமல் சொல்லி விட்டுப் பாடி வந்த கவடு தெரியாமல் உள்ளே நடந்தான்.

சின்னத்துரையும் அம்மாவிடம் உத்தரவு கேட்டுக் கொண்டு வணக்கமாகச் சமையற்கட்டுக்குச் சென்ருன்.

திருமதி மார்க்கபந்து சற்று நிம்மதி யடைந்தவள் போல் ஒரு பெருமூச்சு விட்டவளாகப் படுத்துக் கொண்டாள். சமையற்கட்டு, அம்மாள் படுத்திருந்த முன் கூடத்திலிருந்து ஒரு நீண்ட
தாழ்வாரத்தால் இணைக்கப் பட்டிருந்தது. சாப்பிடும்கூடம் முன்பாகவும், சாமான் அறையும் சமையல் அறையும் அடுத் தடுத்தும் இருந்தன. சமையலறையின் மறுபுற வாசற்படி முற்றத்தில் இருந்தது. பெரிய முற்றம். பின்புறம் ரயில் வண்டி நிலையத்துக்குச் செல்லும் தெரு. அடுத்த பக்கம் குளுகுளு வென்ற தோப்பு. மாமரங்களும் தென்னை மரங்களும் காவிரி வளத்தைப் பறை



தோப்பைத் தடுத்தது முட்கம்பி வேலிதான்.

சாப்பாட்டுக் கூடத்திலே பானு என்ன செய்கிறாள், என்ன சொல்லப் போகிறாள் என்ற ஆவலோடு வந்து நின்றான் சின்னு.

''அங்கேயே நிற்கிறீர்களே? உள்ளே வந்து பாருங்கள் எல்லாம்!''—அவனைச் சமையலறை வாசற்படியிலே தள்ளிக் கொண்டு போயிற்று அந்தக் குரல்.

''எல்லாம் பார்த்துக் கொண்டீர்களா?'' என்று பானு கேட்டு நினைவுபடுத்த வேண்டியிருந்தது. ஏனெனில் அவன் அவளைத்தான் வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தான்.

சமையலறை வெகு கச்சிதமாகவும் சுத்தமாகவும் இருந்தது. அலமாரியிலே டப்பாக்களின் மேலே பொருள்களின் பெயர்கள் எழுதி ஒட்டப்பட்டிருந்தன. வலை அலமாரியிலே ஒரு தட்டில் அவள் செய்து வைத்திருந்த பஜ்ஜி தெரிந்தது. மேடையில் சிமெண்ட் அடுப்பிலே கரி கணகணவென்று ஒளிர்ந்தது. எண்ணெய்ச் சட்டியை அப்போதுதான் கீழே இறக்கி வைத்திருந்தாள்.

சின்னத்துரையைச் சற்று நிமிர்ந்து பார்த்து விட்டு, ''நான் வரட்டுமா? இந்த எண்ணெயை அதோ அந்தச் சிறிய ஜாடியில் ஊற்றி வையுங்கள். ராத்திரி வற்றல் குழம்பும் கத்திரிக்காய்ப் பொரியலும் செய்யச்

றார்கள்'' என்று கூறி, அவனிடம் 'சார்ஜை' ஒப்புவித்தாள் பானு.

சின்னத்துரைக்குத் தான் ஏழு வகுப்புகள் படித்திருப்பதின் அடையாளமாக ஏதேனும் சொல்ல வேண்டுமென்ற ஆசை குடைந்தது. அவனுக்காக அவள் வேலையையும் கூலியையும் ஒரு துளியும் முக வாட்டமின்றி விட்டுப் போகிறாளே? இதுவன்றோ தியாகம்? இந்தப் பேருதவியைப் பெற்றுக் கொண்டு அவன் நன்றி காட்டாமல் நிற்கிறானே?

உள்ளத்தில் ஒரு குரல் இப்படி இடிக்க, நன்றியை எப்படிக் காட்டுவது என்று புரியாமல் அவன் தவித்தான். அது



என்ன பெட்டியா, பேழையா பார்த்துக் கொள் என்று காட்ட ?

"நீ எங்கே போவாய், உனக்கு வேலை போனது வருத்தமா யில்லையா, பானு?" என்று கேட்டான்.

"எனக்கு வேலை போனல், உங்களுக்கு வந்திருக்கிறது!"

"எனக்கு வேலை வந்ததில் உனக்குச் சந்தோஷமா ?"

"சந்தோஷமும் சங்கடமுந்தான்."

அவள் இதழ்கள் மலர்ந்து பரப்பிய மணத்திலே சின்னத்துரை அமிழ்ந்து போனன்.

"எங்கள் வீடுதான் இனிமேல் உனக்குப் பானு!"

அவள் மறுபடியும் சிரித்தாள்.

"அதைப்பற்றி உங்களுக்கு என்ன கவலே? நான் வரட்டுமா ?"

"ம், சம்பளம் வாங்கிக் கொள்ள வில்லையா நீ?....அந்த அம்மாள் தேர் மாதிரி உட்கார்ந்திருக்கிறளே? இங்கே எழுந்து வரவே மாட்டாளோ ?"

"அப்படி நிர்ப்பயமாக இருக்க முடியாது. உஷாராக இருங்கள்!"

"பானு, உனக்கு வருத்தமில்லையே?"

"இல்லை யில்லை. கிடைத்த வேலையை விட்டு விடாதீர்கள். மாமி நல்லவர், நான் வருகிறேன்."

மீண்டும் மின்னல் கீற்றுப் போல் சிரித்து விழியால் வெட்டி விட்டு அவள் முற்றத்திலே இறங்கித் தெருவுக்கு இருந்த வாசற்படி வழியாகப் போய் விட்டாள்.

சின்னத்துரைக்குச் சுய உணர்வு வரவே சில விநாடிகள் சென்றன. அறைப் பக்கம் அவன் திரும்பியபோது கரியடுப்பு கணகண வென்று ஜ்வாலை கிளம்ப எரிந்து கொண்டிருந்தது. சட்டையைக் கழற்றிச் சாப்பிடும் கூடத்திலே ஒரு ஆணியில் மாட்டி விட்டு அவன் வேலையில் முனைந்தான். முதலில் கற்சட்டியை எடுத்து அடுப்பில் போட்டு விட்டு அவள் என்ன சொன்னுள் என்பதை நினைவுபடுத்திக்கொண்டான். வற்றல் குழம்பு என்று அவள் அறிவித் திருந்தாள். எப்போதோ அது செய்ததாகக் கூட அவனுக்கு நினைவில்லை. என்ருலும் சின்னத்துரை இந்த மாதிரிச் சில்லறை விஷயங்களிலே தயங்க மாட்டான். 'புளி' என்று எழுதி ஒட்டப்பெற்றிருந்த பெரிய ஜாடிக்குள் கையை விட்டுப் பார்த்தான். உடனே ஜாடியிலே கள்ளர் தலைவனைப் பார்த்த பணிப் பெண்ணைப் போல் துள்ளினன். மணிக்கட்டுவரை அவனுடைய கை ஆவக்காய்ச் சேற்றில் புதைந்து, அவன் கண்களுக்குப் பயங்கரத் தோற்றத்தை அளித்தது! 'சட் என்ன இது?'

மீண்டும் பார்த்தான். ஜாடியின் மேல் சந்தேகத்துக்கு இடமில்லாமல் புளி என்றுதான் எழுதப்பட்டிருந்தது.

குளிக்கும் அறைக்கு ஓடி, அரைப்படி சீயக்காய்ப் பொடியும், ஒரு சோப்புக் கட்டியும் கரைய ஒரு தொட்டி நீரில் அவன் கையைக் கழுவிவிட்டு வரும் வரை அந்தக் கற்சட்டி காத்திருக்குமா? அது காய்ந்து, கருகிப் போகிறபோக்கில் படாரென்று வெடித்து விட்டு உயிரையும் விட்டது.

வெடிச் சத்தம் போல் செவிகளைத் தாக்கிய ஓசையில் முன் கூடத்திலிருந்த அம்மாள் அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்து உட்கார்ந்தாள். "ஏண்டா, அப்பா! என்ன ஆயிற்று? அதிர்வெடி போல் கேட்டதே?"

"நாசமாய்ப் போயிற்று!" என்று பதிலுக்குச் சின்னத்துரை மனசுக்குள் சபித்துக் கொண்டபடி அவள் முன் வந்து நின்றன்.

"டப்பாவிலும் ஜாடியிலும் ஒன்றுக்கொன்று எழுதி வைத்திருந்தால் என்ன செய்ய அம்மா? புளிஜாடியில் ஊறுகாய், ஊறுகாய் ஜாடியில் நல்லெண்ணெய், கடுகு டப்பாவில் கரிசலாங்கண்ணி விதை..." என்று அடுக்கினன்.

"அப்படியா வைத்திருக்கிருள், கழுதை? எல்லாம் இந்த மனிதர் இடம் கொடுத்தது! சிரித்து மழுப்பி, மினுக்கி நெளித்து, இருக்கட்டும்...நீ போப்பா, கொஞ்சம் பார்த்து எல்லாவற்றையும் செய்......" என்று உஷ்ணத்தை வெளியிட்டு விட்டுச் சமாதானம் சொன்னன்.

சின்னத்துரையும் ஒரு மாதிரியாகப் பல்லைக் கடித்துக் கொண்டு சமையல் அறைக்குத் திரும்பினன்.

முழுதும் அந்த வீட்டில் நின்று நிலைத்து இந்த வேலை பார்க்க அவனுக்குப் பைத்தியமா? வெளியேறி விட வேண்டும் என்பதுதான் அவன் முடிவு.

ஆனல் மார்க்கபந்துவைப் பார்த்துத் தன்னைப் பற்றி இரண்டு வார்த்தைகள் காதில் போட்டு வைக்க வேண்டும். உத்தியோகம் கிடைத்தபின் பானுவுடன் ஆனந்த வாழ்க்கை! மட்டம் தட்டித்தானே ஐயாசாமி பேசினர்? பார்க்கட்டும்!.....

எப்படியோ சமையல் முடிந்தது. ஆள் ஒருவன் செம்பில் பால் கறந்துகொண்டு வந்து வைத்துப் போனன். மார்க்கபந்து இன்னும் காப்பிக்கு வரவில்லை.

சின்னத்துரை முற்றத்துக் குழாயடியில் முகம் கைகால் கழுவிக் கொள்வதற்காக வந்தான். மாலை மங்கி அந்தி வெய்யில் பக்கத்துத் தோப்பில் மரங்களின் கிளைகளூடே வந்து முற்றத்திலே பொன்ஒளியைத் தெளித்திருந்

# எக்லா

## தென் இந்தியா விரும்பும் டால்க்!

### *தெம்பூட்ட, மணமளிக்க தனிப்பட்ட தயாரிப்பு*

இந்த பரத நாட்டியக்காரியைப்போல், நீங்களும் தென்னாட்டின் அதி உஷ்ண கால நிலையிலும்கூட குளுமையும் இதமும் பெறலாம். மனோரம்மிய மணம் பெற்ற எக்லா டால்க் உபயோகித்தால் குளுமையான நுண்ணிய சுகந்தத்திற்கு இந்த ஒப்புயர்வற்ற டால்க்கை அடிக்கடி தாராளமாக உபயோகியுங்கள்

*மெல்லிய எக்லா ஒரு லட்சிய முகப்பவுடரும் கூட*

கால்கேட்

# எக்லா

## டால்க் பவுடர்



மோஹனப் புன்னகை பூத்திடுங்கள்

டூத்-பிரஷ் **டெக்**கை

வாங்குங்கள்!



தது. ஆனி மாசக் கடைசியாக இருக்கும். மாமரங்களிலே நீள மூக்கு ஜாதி பழங்கள் தங்கக் கட்டிகளாய்த் தொங்கின. பார்த்துக் கொண்டே சின்னத்துரை குழாயைத் திறந்துவிட்டான். பூந்துறையில் குழாய் ஒரிடத்திலும் கிடையாது. ''ரயில் உத்தியோகம் என்றாலே உத்தியோகம்தான். வீடு, குழாய்...'' என்ற எண்ணம் உள்ளத்திலே ஓட அவன் கால்களைத் தேய்த்துத் தேய்த்துக் கழுவிக் கொண்டிருந்த சமயம் முற்றத்தின் நடுவிலே ஒரு கல் வந்து விழுந்தாற் போல் இருந்தது. சட்டென்று திரும்பினான் சின்னத்துரை. வந்து விழுந்த ஒரு மணிக்கல்லில் காகிதம் ஒன்று சுற்றப்பட்டிருந்தது.

* * *

கல்லைக் காகிதத்தில் சுற்றிப் போட்டார்களா எவரேனும்?

எதற்கு?....

வியப்புடன் அவன் காகிதத்தைப் பிரித்த வண்ணம் உற்றுப் பார்த்தான். அது ஒரு வெறும் கூழாங்கல். படிகம் போலிருந்தது. விஷமத்துக்காக எவரேனும் வாண்டுப் பயல்கள் விட்டெறிந்திருக்கலாம்...சின்னத்துரை வாண்டுப் பயலாக இருந்த காலத்தில் இந்த விளையாட்டில் தெருத் திண்ணையில் உட்கார்ந்தவாறே ஈடுபடுவது உண்டு. பழைய நோட்டுத் தாள்களில் தெரு மண்ணையோ, அம்மா வீடு கூட்டி மூலையில் குவித்திருக்கும் குப்பையையோ வைத்து வெகு அழகாகப் பொட்டலம் கட்டுவான். தெரு மூலையில் எவரேனும் வந்து கொண்டிருப்பதைப் பார்த்துவிட்டுமெள்ள வீதியில் அந்தப்பொட்டலத்தை நழுவ விட்டுவிட்டுத் திண்ணையில் சாதுவைப் போல் உட்கார்ந்திருப்பான். இந்த வேடிக்கையில் எத்தனை பெரியவர்கள் ஏமாந்து போவார்கள். சிலர் கொஞ்சதூரம் காவால் தள்ளிக்கொண்டே போவார்கள். சுற்றுமுற்றும் பார்த்த வண்ணம் திருட்டுப் பார்வையுடன் பிரிப்பார்கள். உள்ளே இருப்பது மண், குப்பை என்று தெரிந்த பின் ஏமாந்தவருக்கு வரும் ஆத்திரம் இருக்கிறதே? அவர்கள் வீசி எறியும் போது சின்னத்துரை 'ஹோ ஹோ' என்று வாயிற்படியில் நின்று கையைக் கொட்டிச் சிரிப்பான். ஏமாந்தவர் பின்னும் வெட்கமடைந்தவராக ஓடினால் அவன் ஆனந்தம் அவர் தெருக்கோடி கடந்து மறையும் வரை நீடிக்கும். 'டேய் பயலே, நீதானா?' என்று விசிறிக் காம்பைத் திருப்பிக் கொண்டு அவனை நோக்கி வரக்கூடியவர்களாக இருந்தால் உள்ளே ஓட்டம் பிடிப்பான்.

அந்த மாதிரி வால்கள், வீட்டுக்குள் விளையாடுகிறார்களா? மேலும் பெரிய பொட்டலம் என்றாலும் பரவாயில்லை. நெல்லிக் காயளவுக்குக் கூடத் தேறாத மணிக்கல்..தோப்புக்குள் இருந்தல்லவா வந்து விழுந்தது? அவன் குழாயடியில் நின்றிருந்ததால், குழாய்ச் சுவர் தோப்புப் பக்கம் அவன் பார்வையை மறைத்து விட்டது. இல்லாவிட்டால் நிச்சயமாக அந்த வாண்டுப் பயலைப் பிடித்து மிரட்டி அனுப்பி விடுவான். ஆனால் வாண்டுப் பயல்தானா? தோப்புக்குள் வாண்டுப்பயல்கள் நுழைந்தால் காவற்காரன் காலையோ, முதுகையோ சும்மா விடமாட்டானே? இப்படி யெல்லாம் பழைய கால நினைவுகளுடே, அவன் பாலப் பருவத்தின் இன்பங்களில் நினைத்துக்கொண்டு நிற்கையிலே, சட்டென்று ஒரு மின்னல் மண்டையிலே ஒளிர்ந்தது. கையிலே கசங்கியிருந்த காகிதத்தைப் பிரித்துப் பார்த்தான். அது வெறும் குப்பைக் காகிதமில்லை. அந்தக் காகிதத்தில் செய்தி இருந்தது!



யாருக்கு? பானுவுக்கு!

குண்டு குண்டான கையெழுத்திலே கடிதத்திலிருந்த செய்தி இதுவே:

அன்பே பானு!

நீ என்ன முடிவு செய்து வைத்திருக்கிறாய்? ஆற்றங்கரைப் பாழ் மண்டபத்தில் உன் செய்தியை ஆவலுடன் எதிர்பார்த்துத் தினம் வந்து போகிறேன்.

உன் அன்பன்,
மா—ப

மா—ப!

பானுவுக்குக் காதலன்!......

தனக்கு என்று அவன் சொந்தமாக இதுவரை எண்ணிக் கொண்டிருந்த பானுவுக்கும் காதலன்!

ஒன்றும் தெரியாதது போல் இருக்கிறாளே, அவளுக்குக் காதலன்! அன்பே என்று என்ன துணிவுடன் அவன் அவளுக்கு எழுதியிருக்கிறான்?

சினிமாக் காதலர்கள் ஆத்திரம் வந்தால் சிரிப்பார்களே, அட்டகாசச்

சிரிப்பு, அப்படிச் சிரிக்கும்படியான எரிச்சல் குமுறி வந்தது சின்னத் துரைக்கு. கையிலிருந்த காகிதத்தை மீண்டும் மீண்டும் பார்த்தான். கசங்கிய காகிதம்போல் தோன்ற வேண்டும் என்றே செய்திகை எழுதிக் கசக்கியிருக்கிறான். திருட்டுப் பயல்! அந்த மா—ப என்கிற பயல் யாராக இருப்பான்? துணிந்து இப்படிக் கல்லெறிந்து இன்ஸ்பெக்டர் வீட்டுக்குள், காதல் புரிய வேண்டுமானால்?......பானுவுக்கு எப்படிப் பரிச்சயமாயிருக்கும்? அவளுக்கு இஷ்டம் இருக்குமோ? அவளுக்கு இஷ்டமில்லாமல் இந்த மாதிரி காகிதம் எழுதிப் போட்டுத் தொந்தரவு செய்வதானால், அவன் சும்மாவிருக்கலாமோ? அந்தப் பயலை ஒழித்துக் கட்டிவிட வேண்டும் போல அவன் உடல் துடித்தது; உள்ளமும் பறந்தது.

சின்னத்துரை நவீனங்களோ, பத்திரிகைத் தொடர்கதைகளோ படித்தவன் அன்று. ஆனாலும் சினிமாக்கள் பார்த்திருக்கிறான். காதலர் இடையே குறுக்கிடும் வில்லன் முதலிய சமாசாரங்கள் அனைத்தும் தெரியும் அவனுக்கு. கதாநாயகனும் கதாநாயகியும் பூங்காவில் பாட்டுப் பாடிக் கொண்டு சந்தோஷமாக இருக்கும் போது புதர் மறைவிலிருந்து திடீரென்று ஒரு முகமூடி மனிதன் பாய்ந்து வருவான். கதாநாயகியைப் பலவந்தமாகத் தூக்கிப் போக முயற்சிசெய்வான். கதாநாயகன் உடனே இடையில் செருகியிருக்கும் வாளை உருவிக் கொண்டு அவனைச் சண்டைக்கு இழுப்பான். இருவரும் வாட்போர் நடத்துவார்கள். முடிவில் கதாநாயகன் வில்லனைக் குப்புற வீழ்த்தி விட்டுக் கதாநாயகியின் பக்கம் வெற்றிப் பெருமிதத்துடன் நோக்க, கதாநாயகி கண்கள் மலரக் கனிவுடன் புன்னகை செய்வாள்.

அவனுக்குத் தானும் ஒரு சினிமாக் கதாநாயகனாக இல்லையே என்றிருந்தது. அப்போது அந்த மா. ப. எவனாயிருந்தாலும் தன் எரிச்சலைத் தீர்த்துக் கொண்டுவிட முடியுமே? பானுவுக்கு அப்புறமும் அவன் இந்தமாதிரிக் கடிதம் எழுதிக் கல்லில் வைத்து எறிவானா?

இப்படிக் குமம்பித் தவித்துக் கொண்டு அவன் எத்தனை நேரம் துண்டுக் கடிதமும் கையுமாக நின்றிருப்பானோ, தெரியாது!

"யாரடா? உன் பெயர் என்னடா? இரண்டு கப் காப்பியோடு டிபன் கொண்டு வா என்று கால் மணியாகக் கத்துகிறேன்?...ஏண்டாப்பா. நீதான் புது ஆளா? என்ன செய்கிறாய்? ..." என்று கேட்டுக் கொண்டே முற்றத்தை எட்டிப் பார்த்தார் மார்க்கபந்து. அவன் கையில் காகிதம் இருக்கக் கண்ட அவர் புருவங்கள் கூடின. இரண்டு எட்டு முன் வந்து, "ஏண்டா! என்னடா பண்ணுகிறாய்? ஏது கடிதம் அது?" என்று கேட்டார் அவர். அவர் குரலில் சந்தேகம் தொனித்தது.



ஒரு கணம் மலங்க விழித்து விட்டுச் சின்னத்துரை சட்டென்று கடிதத்தைச் சுருட்டி வேட்டி மடிப்புக்குள் செருகிக் கொண்டான். மார்க்கபந்துவுக்கு முன் குழைந்து ஒரு அசட்டுச் சிரிப்பை உதடுகளில் நெளிய விட்டான்.

"ஒன்றும் இல்லை ஸார், இதோ ஒரு நொடியிலே..." என்று கூறி வேகமாகச் சமையலறைக்குள் ஓடினான் அவன்.

"உன் பேரென்ன? சீக்கிரம் கொண்டு வா!" என்றார் அவர்.

"சின்னு ஸார்,....இதோ ரெடி!" என்று வேலையில் அவன் முனைந்தான்.

மார்க்கபந்து 'டக்டக்'கென்று ஜோடு ஒலிக்க வாசல் வராந்தாவுக்குப் போய் விட்டார்.

சின்னு அவசரம் அவசரமாக இரண்டு தட்டுக்களில் சிற்றுண்டியையும் தண்ணீரையும் வாசலில் இருந்த வராந்தா மேஜையில் வைத்துவிட்டு உள்ளே ஓடி வந்தான். காப்பிக் கஷாயத்தைப் பாலில் ஊற்றி, பாலைத் தண்ணீரில் ஊற்றி, சர்க்கரையைக் கிண்ணத்தில் கொட்டி, கோப்பையைக் கீழே சரித்து ஒருவிதமாகக் காப்பியைக் கலந்தான். மீண்டும் வாசலுக்கு வந்தான். பிரம்பு நாற்காலிகளில் மார்க்கபந்துவும், இன்னொரு பறங்கியரும் அமர்ந்திருந்தனர்.

பறங்கித் துரையின் வாயிலிருந்த சிகரெட் புகை மண்டலங்களைச் சிருஷ்டி செய்து கொண்டிருந்தது. கன்னச் சதையும் தொந்தியும் அவனுக்கு அவரைப் பெரிய உத்தியோகஸ்தராக அறிவித்தன. அவரும்கூட மேசையிலிருந்த தட்டைத் தொட்டிருக்கவில்லை. (தொடரும்)

**லக்ஸ் டாய்லெட் சோப்பை**
**நீங்களே உபயோகித்து பார்க்குமாறு**
**சிபார்சு செய்கிறார் லலிதா. "தூய்மை,**
**வெண்மை—இரண்டும் பொருந்திய சோப் இதோ!"**

தமது மேனியை அப்பழுக்கின்றி வைத்திருக்க லலிதா எப்பொழுதும் உபயோகிப்பது லக்ஸ் டாய்லெட் சோப். அதன் செழிப்பான நறுமணமுள்ள நுரை எத்தகைய பெருகுகிறது என்பதை அவர் அறிவார்.
சினிமா நட்சத்திரங்கள் செய்வதை நீங்களும் பின்பற்றுங்கள்—உங்கள் மேனிக்குப் பாதுகாப்புத் தரும் வெண்மையான இப் பராமரிப்பை அளித்திடுங்கள். ஞாபகமிருக்கட்டும், லக்ஸ் டாய்லெட் சோப்பின் அற்புத வெண்மைத் தோற்றமே அதன் தூய்மைக்கு அத்தாட்சி.

**லக்ஸ் டாய்லெட் சோப்**




**சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்**

LTS. 494-50 TM

# பூமிதேவியின் மடியில் பொற்குவியல்



கல்நார் (asbestos) பல வகைகளில் உப யோகமுள்ளதாக இருக்கிறது. உஷ்ணத்தை யும் இரசாயனங்களின் காரத்தையும் தடுத்து நிற்கும் சக்தி அதற்கு உண்டு. அதிலிருந்து ஒரு வகை கெட்டித் துணியும் உற்பத்தி செய்கிறார்கள்.

கல்நாரைச் சிமெண்டுடன் கலந்து வீடு களின் கூரைக்கு உபயோகப்படக் கூடிய தகடு களாகச் செய்கிறார்கள்.

தென்னிந்தியாவில் வருஷந்தோறும் ஒரு சில டன்களே உற்பத்தி செய்யப்படுகின்றன. ஆனால், அபிவிருத்தி முறைகளைக் கைக் கொண்டால், நூற்றுக் கணக்கான டன்கள் கல்நார் உற்பத்தி செய்ய முடியும். இப்போ தெல்லாம் கல்நார் சாதனங்கள் மிக மிகத் தேவையாக இருக்கின்றன.

அலுமினிய மண் சத்து திருவாங்கூர், சென்னைக் கடற்கரை நெடுகப் பரவிக் கிடக் கிறது. எனினும், அதில் இரும்பும் அசுத்தங் களும் அதிகமாக இருப்பதால் அது அலு மினிய உற்பத்திக்கு ஏற்றதாக இல்லை. சேலத்துக்கு அருகில் உள்ள குன்றுகளில் சுத்தமான அலுமினிய மண் சத்து இருக் கிறது. அதைக் கொண்டு அலுமினியம் உற் பத்தி செய்யலாம்.

திருவாங்கூரைச் சேர்ந்த ஆல்வாயில் அலுமினியத் தொழிற்சாலை இருக்கிறது. ஆனால் அதற்கு வேண்டிய அலுமினியக் கனி பீகாரில் உள்ள ராஞ்சிக்கு அருகிலிருந்து வருகிறது. மேற்படி தொழிற்சாலையில் அந் தக் கனியிலிருந்து அலுமினியம் எடுக்கி றார்கள். பிறகு அதைப் பாளங்களாகவும், தகடுகளாகவும், மற்றும் தேவையான உரு வத்திலும் மாற்றுவதற்காக வங்காளத்துக்கு அனுப்புகிறார்கள்.

அலுமினியத்திலிருந்து கம்பிகள் உற்பத்தி செய்வதற்காகத் திருவாங்கூரிலே சமீபத்தில் ஒரு தொழிற்சாலை ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

## எரு உற்பத்திக்கு ஒரு சஞ்சீவி

ஜிப்சம் என்பது சுண்ணாம்பும் கந்தகமும் கலந்த ஒரு பொருளாகும். அது கட்டடப் பூச்சுக்கும், உருவங்கள் வார்ப்பதற்கும், பாரிஸ் பிளாஸ்டர் என்ற சாதன உற்பத் திக்கும், அமோனியம் ஸல்பேட் என்ற இரசாயன எரு உற்பத்திக்கும் உப யோகமாக இருக்கிறது. அது பல இடங்களில் கிடைக்கிறதெனினும், முக்கியமாகத் திருச்சி ராப் பள்ளியைச் சேர்ந்த பெரம்பலூர் தாலுகாவில்தான் அது ஏராளமாக இருக் கிறது. இருபது சதுர மைல் பரப்பில் அது ஆங்காங்கு பள்ளங்களிலிருந்து தோண்டப் படுகிறது. அது மிருதுவாகவும் அதிக மண் கலந்ததாகவும் இருப்பதால், சிறந்த ரக முள்ள ஜிப்சம் கஷ்டப்பட்டுக் கொஞ்சமாகத் தான் எடுக்க முடிகிறது.

## கட்டட, சிங்காரக் கற்கள்

தென்னிந்தியாவில் உள்ள பலவிடங்களி லும் கட்டடங்களைச் சிங்காரிப்பதற்கான கற் களும் சிலைகள் செய்வதற்கு ஏற்ற கற்களும் ஏராளமாக இருக்கின்றன.

சென்னையில் உபயோகிக்கப்படும் கருங் கற்கள் பெரும்பாலும் பல்லாவரத்திலிருந் தும் பறங்கிமலையிலிருந்தும் வருகின்றன. அவை கட்டட நிர்மாண வேலைகளுக்கு மிகவும் தகுதியானவை. அவை இங்கிலாந்து, பிரான் சிலிருந்து வரும் கருங்கற்களைக் காட்டிலும் சிறந்த ரகத்தைச் சேர்ந்தவை. சென்னை, பம்பாய்த் துறைமுகங்களின் நிர்மாண வேலை களுக்குப் பல்லாவரம், பறங்கிமலைக் கருங்கற் களையே உபயோகித்திருக்கிறார்கள்.

மற்றும் பல கோவில்கள், கோட்டைகள், மாளிகைகள், பாலங்கள் முதலிய பல முக்கிய நிர்மாண வேலைகளுக்கு அந்தக் கருங்கற்களே உபயோகிக்கப்பட்டிருக்கின்றன.

தென்னிந்தியாவில் முப்பது அடி அல்லது அதற்கு மேலும் நீளம் உள்ள கருங்கல் உத் தரங்கள் கிடைக்கின்றன; இருபது அடி நீள மும், பத்து அடி அகலமும் அல்லது அதற்கு மேலும் உள்ள ஒரே கருங்கல் பலகைகள் உற்பத்தி செய்யப்படுகின்றன. இன்றும் பல கோவில்களில் அவ்வளவு பெரிய உத்தரங்கள் அல்லது பலகைகளைப் பார்க்கலாம்.

அவ்விதக் கருங்கற்களைப் பூரிக்கு அருகில் உள்ள சூரிய ஆலயத்திலும், புவனேசுவர் ஆலயத்திலும், விசாகப்பட்டினம், கோதா

டாக்டர் எம். எஸ். கிருஷ்ணன்

# அரிசியைக் காணோம்!












வரி, கிருஷ்ணா ஜில்லாக்களில் உள்ள பல இடங்களிலும் காணலாம்.

ஆனால் அக் கற்களால் செய்யப்பட்ட சிலைகள் நொறுங்கிப் பின்னமாகி விட்டன. அதற்கு மாறாக, மாக்கல்லால் செய்யப்பட்ட சிலைகள் அதே கோவில்களில் பல ஆண்டுகள் ஆகியும் யாதொரு சேதமுமின்றிக் காட்சி யளித்து வருகின்றன.

அலங்கார வேலைகளுக்குத் தகுதியான சுக்கான் கற்கள் பலவிடங்களிலும் உள்ள மலைப் பாறைகளிலிருந்து கிடைக்கின்றன. திருநெல்வேலி, கோயம்புத்தூர், சேலம், ஆற்காடு, விசாகப்பட்டினம், ஹைதராபாத் ஜில்லாக்களிலிருந்து சுத்தமான பளிங்கு போன்ற சுக்கான் கற்கள் கிடைக்கின்றன.

கடப்பை, கர்நூல், அனந்தபூர், குண்டூர் ஜில்லாக்களிலும் ஹைதராபாத்தை அடுத்துள்ள சில பாகங்களிலும் வண்டல் சுக்கான் கற்கள் எடுக்கிறார்கள். அவை தளவரிசைக்கும் மேல் தளத்துக்கும் உபயோகமானவையாக இருக்கின்றன.

ஆந்திர ராஜ்யத்தைச் சேர்ந்த ருட்டூரு, ஜம்மலமடுகு முதலிய இடங்களிலிருந்து கடப்பைக் கற்கள் வெட்டி எடுக்கிறார்கள்.

அவை கெட்டியாகவும் பளபளப்பாகவும் இருப்பதால் தள வரிசை போடுவதற்கு மிகவும் ஏற்றவை.

திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் கருடமங்கலத்துக்கும் குன்னத்துக்கும் அருகில் கிளிஞ்சல் கற்கள் கிடைக்கின்றன. கறுப்பு நிறத் தள வரிசையில் வெண்மையான அக் கற்கள் சேர்க்கப்படும் போது பார்ப்பதற்கு மிகவும் அழகாக இருக்கின்றன.

நெல்லூர், கர்நூல் ஜில்லா எல்லை நெடுகக் கரும் பலகைக் கற்கள் கிடைக்கின்றன.

தென்னிந்தியாவில் அற்புதமான களிமண் வகைகளும் ஏராளமாகக் கிடைக்கின்றன. அவை பல்வேறு தினுசான பாண்டங்கள் செய்வதற்கும், கட்டட வேலைக்கான செங்கற்கள் உற்பத்தி செய்யவும் மிகவும் உபயோகமாக இருக்கின்றன.

மங்களூர், கள்ளிக் கோட்டை, கொல்லம் முதலிய இடங்களில் கல், ஓடு தொழில் பிரபலமாக விளங்குகிறது அல்லவா? அது போல் தகுந்த மண் கிடைக்கும் மற்ற இடங்களிலும் அத்தகைய தொழிற்சாலைகள் ஆரம்பிப்பது கஷ்டமான காரியம் அல்ல.

காந்த மண்ணும் சுக்கான்கல் வகைகளில் ஒன்றுதான். அது சூளைகளுக்கும் ஒரு வகை. சிமெட்டி உற்பத்திக்கும் பிரயோசனப்படுகிறது. மற்றும் அது மக்னீஷிய உலோக உற்பத்திக்கு மூலப்பொருளாகவும் இருக்கிறது.

சிறந்தரக காந்த மண் சேலம் ஜில்லாவிலும், தென் மைசூரைச் சேர்ந்த பலவிடங்களிலும் கிடைக்கிறது. சேலத்துக்கு அருகில் உள்ள கஞ்சமலைப்புக்கரடு மலையில் நூறு அடி ஆழத்துக்குள் பத்து கோடி டன்களுக்கு மேல் காந்த மண் சத்து இருப்பதாகத் தெரிகிறது.

தென் மைசூரிலிருந்து வருஷந்தோறும் ஐந்தாயிரம் டன் காந்த மண் எடுக்கப்படுகிறது.

மைகா என்ற அப்பிரக உற்பத்தியில் முதல் ஸ்தானம் வகிக்கும் நாடுகளில் இந்தியாவும்

ஒன்று. மைகா உலோகச் சத்து முக்கியமாகத் தென் பீகாரிலும், ராஜஸ்தானிலும், ஆந்திராவிலும் ஏராளமாக இருக்கிறது. நெல்லூர் ஜில்லாவில் இலேசான பச்சை நிறமுள்ள சிறந்த மைகா கிடைக்கிறது. நெல்லூரில் மாத்திரம் அறுபது, எழுபது மைகா உற்பத்தியாளர்கள் இருக்கிறார்கள்.

இதைத் தவிர விசாகப்பட்டினம், மேற்கு கோதாவரி, சேலம், கோயம்புத்தூர், திருவாங்கூர் பிரதேசங்களிலும் ஓரளவு கிடைக்கிறது. இந்தியாவில் உற்பத்தியாகும் மைகாவில் நாலில் ஒரு மடங்கு தென்னிந்தியாவிலிருந்துதான் கிடைக்கிறது.

மின்சாரத் தொழில் அபிவிருத்திக்கு மைகா மிகவும் அத்தியாவசியமானதாக இருக்கிறது. மைகா இராவிடில் மின்சாரத் தொழில் இவ்வளவு தூரம் முன்னேற்றம் அடைந்திராது. மைகாவைப் பொடியாக அரைத்து ரப்பர்த் தொழிலுக்கும் கட்டட வேலைகளுக்கும் உபயோகிக்கிறார்கள்.

இந்தியாவில் மைகா உலோக மண் சத்து பூமிக்குள் அபரிமிதமாக இருப்பதால், மைகா உற்பத்தி விஷயத்தில் இன்னும் பல வருஷங்களுக்குக் கவலையில்லை.

## வைர விற்பனையில் ஏகபோக உரிமை!

தென்னிந்தியாவில் உற்பத்தியாகும் முக்கிய ரத்தினக் கல் வைரம்தான். இதைத் தவிர, கெம்பு அல்லது செம்மணி, கோமேதகம், மற்றும் வைடூர்யம் போன்ற ரத்னம் முதலியவையும் உற்பத்தியாகின்றன.

துங்கபத்ரா, கிருஷ்ணா, கோதாவரி பள்ளத்தாக்கு நெடுக நூறு ஆண்டுகளுக்கு முன் வரையில் வைரம் தோண்டும் வேலைகள் நடந்து வந்தன. ஹைதராபாத்தில் கோல்கொண்டாவும், அனந்தபூர் ஜில்லாவைச் சேர்ந்த வஜ்ரகரூரும் பல நூற்றாண்டுகள் வரையில் மிகப் புகழ் பெற்ற வைர விற்பனை ஸ்தலங்களாக இருந்தன.

இருநூறு ஆண்டுகளுக்கு முன் வரை உலகிலே இந்தியாவில் மாத்திரமே வைரம் உற்பத்தியாகி வந்தது. அதற்குப் பிறகுதான் பிரேஸில் நாட்டில் வைரம் உற்பத்தி செய்யத் தொடங்கினார்கள்.

சென்ற நூறு வருஷங்களாகத் தென் ஆப்பிரிக்காவிலும், கிழக்கு ஆப்பிரிக்காவிலும் வைரம் உற்பத்தி செய்து வருகிறார்கள். ஆனால், பாரத நாடோவெனில் வைர உற்பத்தியில் முற்றிலும் பின்னணிக்குச் சென்று விட்டது. இப்போது விந்தியப் பிரதேசத்தில் உள்ள பன்னா என்ற இடத்தில் மிகவும் சிறிய அளவில் வைர உற்பத்தி செய்துவருகிறார்கள்.

சேலம், திருச்சி ஜில்லாக்களில் எப்போதாவது சிறிய தானியங்கள் போன்ற மாணிக்கக் கற்கள் கண்டு பிடிக்கப்படுகின்றன. எனினும், அவை உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தவையல்ல.

தென்னிந்தியாவில் உள்ள பல ஜில்லாக்களில் சிறந்த கெம்புக் கற்கள் உற்பத்தியாகின்றன. இந்த நாட்டில் கெம்புக் கற்களால் நகைகள் இழைக்கப்படுவது மிகவும் சகஜமாகும். இவற்றைத் தவிர மோதிரம், கண்ட சரம், ஜபமணி இவைகளுக்கு ஸ்படிகக் கற்களையும் உபயோகிக்கிறார்கள்.

## வர்ணங்களும் மணல் வகையும்

வர்ண உற்பத்தித் தொழிலுக்கு வேண்டிய சரக்குகள் தென்னிந்தியாவில் அபரிமிதமாக இருக்கின்றன.

பெல்லாரி ஜில்லாவில் உள்ள ஸாண்டூரிலும் மற்றும் சில இடங்களிலும் சிவப்பு இரும்பு பஸ்மம் கிடைக்கிறது.

கடப்பை, ராமநாதபுரம், தஞ்சாவூர், திருவாங்கூர், கர்நூல் ஜில்லா முதலிய இடங்களில் ஏராளமாகச் செம்மண் அல்லது காவிக்கல் கிடைக்கிறது. வெண்மண், மாக்கல், கறுப்பு மாக்கற் பாறை முதலியனவும் வர்ணங்களுக்கு உபயோகித்துக் கொள்ளப் படுகின்றன.

கடற்கரை நெடுக ஓரத்திலும் ஆற்றுப் படுகைகளிலும் உள்ள மணல் அவ்வளவு சுத்தமாக இருப்பதில்லை. எனவே, பல முறைகளைக் கைக் கொண்டு அதைச் சுத்தம் செய்த பிறகுதான், கண்ணாடி உற்பத்திக்கு அது உபயோகமாகிறது.

கிழக்குக் கடற்கரையில் உள்ள மணல் குன்றுகளில் சுத்தமான மணல் இருக்கிறது. சென்னைக்கு அருகில் உள்ள எண்ணூரிலும் சுத்தமான மணல் இருக்கிறது. எனவே, அதைச் சென்னை நகரில் உள்ள கண்ணாடித் தொழிற்சாலைகளில் உபயோகப்படுத்திக் கொள்கிறார்கள். குண்டூர் ஜில்லாவில் உள்ள சிராளாவிலும் வெள்ளை மணல் கிடைக்கிறது. ஆனால், அதை இன்னும் கண்ணாடி உற்பத்திக்கு உபயோகப்படுத்திக் கொள்ளவில்லை.

திருவாங்கூரில் கடற்கரை நெடுகவும், திருச்சிராப்பள்ளி, ராமநாதபுரம், தஞ்சாவூர், விசாகப் பட்டினம் ஜில்லாக்களிலும் சில இடங்களில் விசேஷ மணல் வகைகள் இருக்கின்றன.

அதில் டிடேனியம் கனி, தோரியம், கந்தகம் முதலியவை கலந்திருக்கின்றன.

**அணுசக்தி உற்பத்திக்குத் தோரியம் மிகவும் அத்தியாவசியமான ஒரு சாதனமாகும்.**

திருவாங்கூரில்தான் இந்த மணலிலிருந்து மேற்படி சாதனங்களை உற்பத்தி செய்யும் வேலைகள் நடந்து வருகின்றன.

தென்னிந்தியாவில் பல இடங்களிலும் மாக்கல் வண்டல்கள் ஏராளமாக இருக்கின்றன. இவை உயர்ந்த உலோகச் சேர்க்கைக்கும், டால்கம் பவுடர் போன்ற வாசனைத் தயாரிப்புகளுக்கும் உபயோகமாக இருக்கின்றன. ரப்பர், காகிதம் முதலியவற்றின் உற்பத்திக்கும் மாக்கல் பிரயோசனமாக இருக்கிறது. சுத்தம் செய்யப்படாத மாக்கல் தீயையும் திராவகத்தையும் எதிர்த்து நிற்கும் சக்தியுடையதாக இருப்பதால், வீட்டுப் பாத்திரங்கள் செய்யவும் அதை உபயோகப் படுத்திக் கொள்கிறார்கள்.

எனவே, பூதேவியின் மடியில் கிடக்கும் பொற்குவியல்களான உலோக சாதனங்களை, கரங்கச் செல்வங்களை அபிவிருத்தி செய்ய வேண்டியது தென்னிந்தியாவின் சுபிட்சத்துக்கு அத்தியாவசியமாகும்.

# புது பாட்டரி வாங்கப் போகிறீர்களா?

## அதிக காலம் உழைப்பது

# ஓக்ஸ் பாட்டரி

**பெட்ரோல் அல்லது டீஸல் மூலம்
இயங்கும் எவ்வித வாஹனம் மற்றும்
டிராக்டருக்கும் ஏற்றது கிடைக்கும்**

இந்தத் தடவை நீங்கள் பாட்டரி வாங்கும்பொழுது அதிக காலம் உழைக்கும் ஓக்ஸ் பாட்டரியைப் வாங்குங்கள். எவ்வித கடின யந்திரங்களையும் சமாளிப்பதற்காக அதிக உறுதியுடன் தயாரிக்கப்படும் இந்த பாட்டரி குறைந்த செலவில் சிறந்த உழைப்பை அளிக்கிறது.




**ஜார்ஜ் ஓக்ஸ் பிரைவேட் லிட்.**

இந்தியா முழுவதிற்கும் அங்கீகரிக்கப்பட்ட
[illegible] விநியோகஸ்தர்கள்
[illegible] ரோடு, பம்பாய் 1

GO. [illegible]



யாவசந்திரனுக்கு வெல்லம் ரொம்ப இஷ்டம். வெல்லம் சேர்த்த பண்டங்கள் கிடைத்தால் விடமாட்டான்.

வைத்தியர்கள் அவன் தேக நிலையைப் பார்த்து. "இவன் உடம்பு கெட்டுப் போய் விட்டது. இவன் சர்க்கரைப் பண்டங்கள் அதிகமாகச் சாப்பிடக் கூடாது" என்றார்கள்.

அவனுக்கோ இந்தப் பத்தியம் முடியவில்லை. எப்படியோ சர்க்கரைப் பண்டங்களைத் தேடிச் சம்பாதித்துச் சாப்பிட்டு விடுவான். அவன் பெற்றோர்களால் இதைத் தடுக்க முடியவில்லை.

"இதற்கு என்ன செய்வது? என் அருமைக் குழந்தையை இழந்துவிடுவேனே!" என்று தாய் அழுதாள்.

# தேகப்பயிற்சி வாத்தியார்




தகப்பனுக்கு ஒரு வழியும் தோன்றவில்லை. கும்பகோணம் சென்று சங்கராச்சாரியாரைக் கேட்டான்.

அவர் சொன்னார்: "பையனைக் கொண்டு போய் ஒரு மிட்டாய்க் கடையில் விட்டுவிடு. எவ்வளவு வேணுமோ அவ்வளவு சாப்பிடட்டும்."

இவ்வாறு சொன்னது பையனுடைய தகப்பனுருக்கு ஆச்சரியமாக இருந்தது.

மனைவியிடம் யோசித்தான்.

"எப்படியாயினும் அவர் நமக்குக் குருவாயிற்று. ஆனபடியால் அவர் சொன்னபடியே செய்வோம். நம்ம சிநேகிதர் ராம்லால் இருக்கிறாரே. அவரைக் கேட்டு அவர் கடையில் பையனைச் சேர்த்து விடலாம்" என்றாள் பையனுடைய தாய்.

பாலசந்திரனை ராம்லாலின் மிட்டாய்க் கடையில் வேலைக்காரனாகச் சேர்த்து விட்டார்கள். "சம்பளம் கிடையாது. எவ்வளவு வேண்டுமானாலும் எந்த மிட்டாய் வேண்டுமானாலும் எடுத்துச் சாப்பிடலாம்" என்று கடைச் சொந்தக்காரர் சொல்லி விட்டார்.

பாலசந்திரனுக்கு வெகு சந்தோஷம். நான்கு வேளையும் வயிறு நிறைய சர்க்கரைப் பண்டங்கள் தின்றான். வேலையில் சேர்ந்த ஐந்தாவது நாள் பையனுக்குப் பேதி எடுத்தது. அன்ன ஆகாரம் வேண்டியிருக்கவில்லை. மிட்டாயை நினைத்தால் அவனுக்கு வயிறு ஊறும். மூன்று நாட்கள் அவஸ்தைப் பட்டான். பிறகு எப்படியோ நோய் நின்றது. ஆனால் அது முதல் பாலசந்திரனுக்கு வெல்லப் பண்டத்தை நினைத்தால் வாந்திக்கு வரும். முற்றிலும் வெறுத்து நீக்கி விட்டான்.

உடம்பு சரியாகப் போய்விட்டது. "மிட்டாய்க் கடையில் எனக்கு வேலை வேண்டாம், அப்பா!" என்று தகப்பனைக் கேட்டுக் கொண்டான்.

பாலசந்திரனை அழைத்துக் கொண்டு பெற்றோர் இருவரும் கும்பகோணம் சென்று ஆசாரியார்முன் தரையில் விழுந்து நமஸ்காரம் செய்தார்கள்.

"பையனுக்கு எல்லாம் சரியாகப் போய் விட்டது. உங்கள் ஆசீர்வாதம்!" என்றார்கள்.

ஆசாரிய சுவாமிகள் பாலசந்திரனை ஆசீர்வதித்து அனுப்பினார்.

இப்போது பாலசந்திரன் மதுரைக் கல்லூரியில் தேகப் பயிற்சி வாத்தியார். கொட்டாப்புளியைப் போல் இருக்கிறான். மாணவர்களும் அவனிடம் பிரியமாக இருக்கிறார்கள். யாரையும் திட்ட மாட்டான்; எதையும் அவனே செய்து காண்பிப்பான்.







வீட்டில் ஒரு காந்தத்தை வாங்கி வைத்துக் கொண்டால் அடிக்கடி காணாமற் போகக்கூடிய ஊசி, ஸேப்டி பின், கொண்டை ஊசி முதலிய சிறிய வஸ்துக்களை அதன்மீது போட்டு வைக்கலாம். அவை அதில் பத்திரமாக ஒட்டிக் கொண்டிருக்கும். அவற்றை நாம் தேவையானபோது எடுத்துக் கொள்ளலாம்.



(கிளியைச் சாப்பிடக் காத்திருக்கும் பூனை):— வாங்க, வாங்க, கிளியாரே! ஆயுசு நூறு உங்களுக்கு! உங்களைத்தான் நானும் நினைத்துக் கொண்டிருந்தேன்!



''அடே! நான் நேற்று ஒரு குதிரையின்மீது சவாரி செய்தேன். என்னைப் புலியும் சிங்கமும் துரத்தி வந்தன.''

''ஐயையோ! அப்புறம்?......''

''டக் கென்று ரங்கராட்டினத்தில் இருந்த குதிரை மீதிருந்து கீழே குதித்து விட்டேன்!''



ஒரு கண்ணாடி டம்ளரின்மீது படத்தில் காட்டியுள்ளது போல் வர்ணத்தால் ஒரு பூனைத் தலை எழுதவும். அதன் கண்ணிலுள்ள கறுப்பு விழியை மட்டும் கண்ணாடிக்கு உள் பக்கத்தில் எழுதவும். பிறகு, பூனை நீங்கள் எந்தப்பக்கம் போனாலும் உங்கள் பக்கமாகவே தன் பார்வையைச் செலுத்தும். இது மிகவும் வேடிக்கையாயிருக்கும்.



பாலர் தொடர் கதை

# ஊமை ராஜா

## 14. வஞ்சகத் தண்டனையோ ?

**வி**ஜயன் சந்தடியின்றி நடந்து சென்று மானைச் சமீபித்தான். ஆனால், இமைப் பொழுதுக் குள்ளாகவே அது ஒரே துள்ளலில் நாலடிக்கு அப்பாற் சென்று குதித்தது! அவன் ஏமாற்றத்துடன் நின்றான். ராஜகுமாரியோ, தன் முத்துப் பற்கள் வெளியே தெரியும் வண்ணம் 'கலகல' வென்று நகைத்துக் கொண்டிருந்தாள்.

மானைப் பிடிப்பதற்காக விஜயன் செய்த முயற்சிகள் தோல்வியடைந்து விட்டன. ராஜகுமாரி அவனை யழைத்துக் கொண்டு, மரத்தடிக்கு வந்தாள். பெட்டியைத் திறந்து அதிலிருந்த நீளமான கயிற்றை யெடுத்து விஜயனிடம் கொடுத்தாள்.

விஜயனும், ராஜகுமாரியும் திரும்பிச் சென்றதைக் கண்ட மான்குட்டி, மீண்டும் தைரியத்துடன் அப்புல்வெளிக்கே வந்து விட்டது. இரண்டாம் தடவையாகக் கையில் கயிற்றுடன் வந்து விட்ட விஜயனைத் தன் ஓரக் கண்களால் பார்த்தவாறே அது மேயத் தொடங்கிற்று. அவன் வெகு ஜாக்கிரதையுடன் அதன் அருகாமைக்கு வந்து நின்று, கையில் சுருக்குடனிருந்த கயிற்றை வீசினான். அப்பொழுதும் அவனுக்குப் பெருத்த ஏமாற்றமே தான் கிடைத்தது. மான் ஒரே துள்ளலில் பத்தடியைக் கடந்து சென்று மேயத் தொடங்கியது [illegible]

விஜயனின் மனத்தில் உற்சாகமும், வீறாப்பும் ஏற்பட்டுவிட்டன. எப்படியும் அதைப் பிடித்தே விடுவது என்ற எண்ணத்துடன் ஓடினான். பாவம்! ராமாயணக் கதையில் வரும் மாய மானாகவேதான் அது அவனை அலைக்கழித்தது.

துரோணன்



முடிவாக அவன் ஓடித் துரத்தும்படி யாகிவிட்டது. மரங்களின் இடைவெளிகள் வழியாகவும், புதர்களின் வழியாகவும் புகுந்து புகுந்து அவனை நெடுந் தூரத்துக்கு இழுத்துச் சென்றுவிட்டது! கடைசியாக மான்தான் வெற்றி யடைந்தது! எங்கேயோ போய்ப் பதுங்கிக் கொண்ட அதை அவனால் கண்டு பிடிக்கவே முடியவில்லை. இனியும் அந்த மாயப் பிறவியிடம் மன்றாடிப் பயனில்லையெனத் தோன்றவும், அவன் சோர்வுடன் திரும்பினான். வந்த வழிகளைக் கூட அவன் சரியாகக் கவனித்திராமையால், பழைய ஆலமரத்தின் இருப்பிடமே அவனுக்குத் தெரியவில்லை. சுற்றிச் சுற்றி வந்தும், அவன் ஓரிடத்துக்கேதான் திரும்ப வேண்டியிருந்தது!

ஏறக்குறைய மூன்று மணி காலம் நடந்த பின், அவனுக்கு அந்த ஆலமரத்தின் இருப்பிடம் தெரிந்தது. அவன் வேகத்துடன் நடந்து ஆலமரத்தை அணுகினான். அடுத்த ஒரே கணத்தில் அவனது விழிகள் ஏமாற்றம் நிறைந்து, பரிதாபமாக மாறிற்று. அம் மரத்தினடியில் அவன் ஏற்கனவே கண்ட குதிரைகள், ராஜகுமாரி, வேல்கள், மரப் பெட்டி—இவை யொன்றையும் காணோம்! அவன் மனத்திலிருந்த இந்திர பதவியெல்லாம் மறைந்தோடி விட்டது!

தனிமையாக நின்ற அப்பெரும் மரம் மட்டும், தலையசைத்தபடியே அவனது ஏமாற்றத்தைக் குறித்துப் பரிகசிப்பது போன்று இருந்தது!

ராஜகுமாரனை விஜயனுக்கு அப்பொழுது கடவுள் மீது கடுங் கோபம் உண்டாயிற்று. அவர் தன்னை ஏன் இவ்வாறெல்லாம் ஆசை காட்டி வஞ்சகம் செய்ய வேண்டுமென்று பல முறைகள் தன் மனத்துக்குள் கேட்டுக் கொண்டான். முன்னமேயே கரடியினிடமோ, அசுரர்களிடமோ, முடிவாக அப் பாதாளப் பள்ளத்தின் மூலமாகவோ, ஒரே வழியாகத் தன் உயிரைக் கொண்டுபோயிருக்கக் கூடாதா? இப்பொழுது ஒரு மாய மானை ஏவித்தானே ராஜகுமாரியைத் தன்னிடமிருந்து பிரித்து விட்டார்?

அவள் எங்கே போயிருப்பாள்? ஏன் தன்னையும் அழைத்துப் போக வேண்டும் என்று அவளுக்குத் தோன்றவில்லை?

ராஜகுமாரன் பலவாறாக வெல்லாம் எண்ணமிட்டபடியே, எழுந்து நாலாபுறங்களையும் பார்த்தான். குதிரைகள் சென்ற அடிச்சுவடுகளும் கூடத் தெரியவில்லை. இனி யோசிப்பதில் என்ன பயன்? அவனுடைய பிரயாணம் தொடங்கிற்று. ஆனால், இந்தத் தடவை சூரியன் இருக்கும் திசையைக் கணக்கிட்டுக் கொண்டு, வட திசைப்புறமாகத் திரும்பிச் சென்றான். போகப் போகக் கெட்டியான கூழாங்கல் பூமி மாறி, கால்களுக்கு மிருதுவான மணற் பாதைகள் வந்தன.

ராஜகுமாரனின் வேகம் அதிகரித்தது. ஆனாலும், போகப் போக அது வளர்ந்து கொண்டேதான் போயிற்று! வெகு தூரத்தில் மரங்களின் அசைவினால், அங்கிருந்த ஒரு வெண்மையான கட்டடம் அவன் கண்களுக்குத் தெரிந்தது.

பெரும் பிரயாசையுடன் அவன் அத் தோப்பிலுள்ள கோயிலுக்கு வந்து விட்டான். எப்பொழுதோ கட்டப்பட்டிருந்த அக் கோயில் இப்பொழுது பாழடைந்து கிடந்தது. விஜயன் குழப்பத்துடன் நாலா புறங்களையும் நோக்கினான். அவ் வெய்யிலில் மீண்டும்கிளம்பவே அவனுக்குத் தைரியம் ஏற்படவில்லை. கொஞ்ச நேரம் இளைப் பாறிய பின்னராவது கிளம்பலாமென்று அவனுக்குத் தோன்றிற்று. ஆகவே, அங்கிருந்த படிக்கட்டுகளின் மீது சாய்ந்தவாறு உட்கார்ந்தான். எதிரிலிருந்த கோயிலின் வெளிப்புறத்துச் சுவர் அவனது சித்திர ஆசையைத் தூண்டிற்று! அவன் தன் பையிலிருந்த உபகரணங்களை எடுத்துக் கொண்டு அச் சுவரில் வரையத் தொடங்கினான். வேறு என்ன? அவனது வாழ்க்கையைத்தான்!

படுக்கை மஞ்சம், கரடி முதல் ஆரம்பித்துக் கடைசியாக வந்த ராஜகுமாரி வரையில் வரைந்து விட்டான். அப்பொழுதுதான் அவனது தோள் புறத்தை யாரோ தீண்டுவது போன்றிருக்கவும்] திடுக்கிட்ட



படியே திரும்பினான். அடுத்த கணம் அவன், 'ஓ' வென்று கூச்சலிட்ட படியே ஓடவும் முயன்றான். அதன் காரணம், அவனது பின்புறத்திலிருந்த ஒரு கிழ மனிதரின் உருவம்தான். அவரது தோற்றத்தில், பயங்கரம் எதுவுமில்லை; ஆனால் அவர் துறவியைப் போன்று, முகத்தில் அடர்த்தியான ரோமம் வளர்ந்திருந்ததுதான் ஏறக்குறைய அந்த அசுரர்களின் உருவத்தை ஒத்திருந்தது.

ஓட முயன்ற ராஜகுமாரனை, அவர் கையைப் பிடித்து இழுத்தார். 'எங்கே போகிறாய்?' என்று கேட்பது போன்ற பாவம் அவரது முகத்தில் சொரிந்தது. அவன் அவரைத் தெய்வமாகவே மதித்துத் தம் கைகளையும் குவித்தான். அவனுடைய கண்கள் நீரைச் சொரிந்தன. முதியவர் அவனது முதுகில் தட்டிக் கொடுத்தவாறு அவனைத் தன் குடிசைக்கு அழைத்துக்கொண்டு சென்றார். (தொடரும்)

# நிலக்கரியின் உபயோகம்

சுரங்கங்களிலிருந்து எடுத்து வரும் கரிகளை உடைத்துப் பலவிதமாகப் பிரித்தெடுக்கிறார்கள். பெரிய அளவு கரி, சிறிய அளவு கரி, கெட்டியான கரி, இலேசான கரி என்று அவற்றுக்குப்பெயர் கொடுக்கிறார்கள். இலேசான கரியில் எரிச் சத்து குறைவு. கெட்டிக் கரியில் எரிச்சத்து அதிகம். இலேசான கரி எரியத் தொடங்கினால் புகை அதிகம் உண்டாகி ஆகாயத்தில் புகை மண்டலம் சூழ்ந்து விடும். ஆனாலும் பெரிய பெரிய தொழிற்சாலைகளுக்கு இலேசான கரியே மிகவும் பயன்படுகிறது. ஏனெனில் இது நிறையவும் கிடைக்கிறது. இதன் விலையும் மலிவு.

கரிப் புகை ஆகாயத்தை அடைவதற்கு முன்னமே இதை அடக்கி விடுவதற்குச் சில தொழிற்சாலைகள் பரிசோதனைகள் நடத்தி வருகிறார்கள்.

கெட்டிக் கரியின் விலை அதிகம். இதில் புகையும் அதிகம் வருவதில்லை. சாம்பலும் கொஞ்சமாகவே விழும். இந்தக் கெட்டிக் கரி வீட்டு உபயோகத்துக்கு ஏற்றவை.

பூமிக்கடியில் பாறைகளால் அதிகமான அழுத்தத்தைப் பெறும் கரிக்குக் கெட்டிக் கரி என்று பெயர்.

தொழிற்சாலைகளின் உலைகளில் கரி எரியும் போது பார்த்திருக்கிறீர்களா? இரும்பு ஜன்னல் போன்ற பீடத்தின் மீது கரி எரிந்து கொண்டிருக்கும். அந்த ஜன்னல் சந்துகளின் வழியாகச் சாம்பல் துகள் கீழே உள்ள குழிகளில் விழுவதையும் காணலாம். ஒரு நீண்ட துடுப்பினால் எரியும் தணல்களைக் கிளறிச் சாம்பலைக் கீழே தள்ளுவார்கள்.

படத்தில் காட்டியுள்ள உலையில் இரு கதவுகள் உள்ளன. கரி எரியும் இடத்தில் ஒரு வழி இருக்கிறதல்லவா? இந்த வழியாகத்தான் தேவையானபோது கரியை உலைக்குள் செலுத்துவார்கள். கீழே விழும் சாம்பல்களை வெளியே எடுப்பதற்கு மற்றொரு வழி உண்டு. இந்த இரண்டு வழிகளைத் தவிர உலையில் இன்னொரு வழியும் இருக்கும். அந்த வழியாகத்தான் உலை எரிவதற்குத் தேவையான காற்று உள்ளே புகும். அடுப்போ, உலையோ எரிவதற்கு ஓரளவு காற்று தேவை என்பதை நாம் ஏற்கெனவே அறிவோம்.

இயற்கை நமக்கு அளிக்கும் ஏராளமான கரிகளை நாம் பல வழிகளில் உபயோகிக்கிறோம். முன்னெல்லாம் வீடுகளிலும் தொழிற்சாலைகளிலும் மட்டுமே கரியை உபயோகப்படுத்தினார்கள். இப்போது கரியினால் ஆகாத காரியமே இல்லை என்று கூறலாம். கரியினால் தண்ணீரைக் காய்ச்சி ஆவியாக்கி அதன்மூலம் பலகாரியங்களைச் செய்து விடுகிறோம். ஆவியின் உதவி கொண்டு மின்சாரம் உண்டாக்குகிறோம். மின்சாரத்தின் மூலம் ரயில் ஓட்டுகிறோம். விளக்கு எரிக்கிறோம். சமையல் செய்கிறோம். சலவை செய்கிறோம். ரேடியோ கேட்கிறோம். டெலிவிஷன் பார்க்கிறோம். இவ்வளவும் கரியின் உதவியினால் நடைபெறுகின்றன என்று அறியும்போது ஆச்சரியமாயில்லையா?



# சிக்கன வாழ்க்கை

பெ.சுமதி ராமசாமி

அன்புக்குரிய சுஜாதா,

உன் கடிதம் கிடைக்கப் பெற்றேன். சிக்கனத்தைப் பற்றி நீ எழுதிக் கேட்டிருக்கிறாய். அவசியம் அலசி, ஆராய்ந்து தெளிவு செய்து கொள்ள வேண்டிய விஷயம்தான்.

சில நாட்களுக்குமுன் பம்பாய்ப் பத்திரிகை ஒன்றில் படித்தேன். "ஆயிரம் ரூபாய் வருமானமுள்ள ஒருவன் 999 ரூ. செலவு செய்யும் வரை ஆனந்தமாக இருக்கிறான். 1001 ரூ. செலவு செய்ய ஆரம்பித்தால் இல்லாத கவலைகள் அவனை வந்து சூழ்ந்து கொள்ளுகின்றன" எனக் குறிப்பிட்டிருந்தது. மகத்தான உண்மை.

ஒருவரைப் பற்றியும் நாம் கணக்காக விதரணையாகச் செலவு செய்கிறார்கள் என ஒப்புக் கொள்ள மாட்டோம். அதிகச் செலவாளி, அல்லது மிகவும் செட்டு என இருவகையாகத்தான் பேசுவோம். பலாபலன்களைப் பார்த்துச் சில சமயம் நிர்ணயிக்கிறோம். சிக்கனமாக இருப்பது தன் வரையில் நல்லது, தாராளமாக இருப்பது பிறருக்கு நன்மை என்று வேண்டுமானால் பாகுபடுத்திச் சொல்லலாம்.

முன் காலத்தில் சிக்கனமாக இருப்பது வழி வழியாக வந்த வழக்கமாக இருந்தது. இயற்கைப் பொருள்களே வாழ்க்கையின் தேவையைப் பூர்த்தி செய்தது. இலகர் வேப்பங்குச்சியால் பல் துலக்கினர் என்று அறிகிறோம். இன்று ஆடம்பரப் பொருள்களின் அடிமைகளாக வாழ்கின்றோம். எளிமை நம்மை விட்டு அகன்று விட்டது. படாடோபம் மேலோங்கி விட்டது.

எங்கள் உறவினரான ஒரு அம்மாள் மிகவும் செட்டும் சீருமாகக் குடும்பம் நடத்துவார். அதுவரை போற்ற வேண்டியதுதான். ஒரு முறை அவர்கள் வீட்டுக்கு வருவதாகச் சொல்லி இருந்தோம். ஆனால் எதிர்பாராத விதமாக அன்று போக முடியவில்லை. மறுநாள் போன போது அந்த வீட்டு அம்மாள் 'உங்களுக்காகப் பால் வாங்கி வைத்து வீணாகிப் போய் விட்டது' என்று ஐந்தாறு தடவைகள் சொல்லிக் காட்டினார். அது தவறு.



காரைக்குடியில் ஒரு சிநேகிதி வீட்டுக்குச் சாப்பிட வருவதாகச் சொல்லியிருந்தோம். கார் சத்தியாக்கிரகம் செய்தது. வழியில் சாப்பாட்டை முடித்துக் கொண்டோம். பிற்பகல் தான் அவர்கள் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தோம். சிநேகிதி எங்களுக்காகச் சமைத்த சாதத்தில் தேங்காய், சர்க்கரை முதலியவைகளைக் கலந்து முதல் தர டிபனாக அமைத்துக் கொடுத்து விட்டாள். சிக்கனமுறையோடு கௌரவமாக நடந்து கொண்டதைக் கண்டு மிகவும் வியந்தேன். இது பின்பற்ற வேண்டிய அம்சம்.

வசதி உள்ளவர்கள் கல்யாணம் போன்ற விசேஷங்களில் அபாரமாகச் செலவு செய்கிறார்கள். அதைப்போல் இல்லாதவர்கள் செய்ய முயலுவது மிகவும் தவறாகப் போகிறது.

கண்ணைப் பறிக்கும் போலி நகைகளையோ, நீடித்து உழைக்காத ஆடம்பரமான துணிகளையோ வாங்குவது விலை குறைவென்றாலும் சிக்கனமாகாது. ஒவ்வொரு பொருளையும் வீணாக்காமல் உபயோகிப்பதுதான் சிக்கன முறை.

காருக்குப் போடும் பெட்ரோலுக்குச் சிக்கனம் பார்ப்பது மிகவும் அவசியம். வீட்டுக்கு வேண்டிய சாமான்களை ஒரே நடையாக வாங்கி வந்தால் பெட்ரோல் குறைகிறது. ஒவ்வொரு சாமான் ஒவ்வொரு இடத்தில் மலிவு என்று வாங்கப் போனால் அதனால் சிக்கனமில்லை யல்லவா? மலிவாக வாங்கி விட்டதாகப் பெருமைப் படுவதில் அர்த்தமில்லை. வாடகை வண்டிக்குக் கணக்குப்பார்க்கிறோம். சொந்த வண்டிக்குப் பார்ப்பதில்லை.

ஒரு அறையில் வேலை இருந்தால் விளக்கைப் போடுகிறோம். வேலை முடிந்த பிறகு அணைக்கக் கை வருவதில்லை. விசிறியை நிறுத்துகிறோம். அதைக்கடைசி வரை நிறுத்தி விட்டோமா வென்று கவனிப்பதில்லை. சின்ன விஷயங்களில்கூடக் கச்சிதமாக நடந்து கொண்டால் அழகாயிருக்கிறது. செலவும் குறைகிறது. அம்மாதிரி சிறந்த முயற்சிகளைச் செய்து பார்ப்போமே.

இப்படிக்கு,
பூமாதேவி

# படித்துப் பாருங்கள்

## தஞ்சை (ஐந்தாண்டின் சாதனைகள்)

**கா**விரியின் கருணையினால் தஞ்சை "சோழ வள நாடு சோறுடைத்து" என்று பெருமை பெற்று விளங்குகிறது. இந்த வளம் கொழிக்கும் தஞ்சை ஜில்லாவைச் சர்க்கார் மேலும் நீர் வளமும் நிலவளமும் செழிக்கச் செய்து பண்படுத்தி யிருக்கிறார்கள். ஐந்தாண்டில் சர்க்கார் அரும் பெரும் சாதனைகளைச் செய்திருக்கிறார்கள்.

மாயூரம், சீர்காழி, நன்னிலம் தாலூகாக்களில் சரியான வடிகால் வசதியின்மையால் பல ஆயிரக் கணக்கான நிலங்கள் சரியானபடி சாகுபடிசெய்ய முடியாமல் இருந்தன. இவற்றுக்கு வடிகால் வசதியளிக்கப் பன்னிரண்டு பெரிய வடிகால் திட்டங்களை 34.84 லட்சம் ரூபாய் செலவில் பூர்த்தி செய்துள்ளனர்.

முதல் ஐந்தாண்டுத் திட்டம் முடிவுறும் கடைசி ஆண்டில் மட்டும் 870 கிராமங்களுக்குச் சர்க்கார் மின்சார வசதி அளித்துள்ளது. பூச்சி பூஞ்சாளத் தடுப்புத் திட்டத்தைச் சர்க்கார் 44,460 ஏக்கர் நிலங்களில் கைக்கொண்டதனால் ரூ. 98,616 மதிப்புள்ள உணவுப் பொருள்களும் பயிர்களும் காப்பாற்றப்பட்டன.

கடந்த ஐந்தாண்டு காலத்தில் தஞ்சை ஜில்லாவில் குழந்தைகளுக்குக் கல்விச் செல்வம் வழங்குவதற்காகப் புதிதாகப் பத்து உயர்தரப் பள்ளிகள் திறக்கப் பட்டன.

தஞ்சை ஜில்லாவில் நிலம் கொழிக்கவும், தொழில் பெருகவும், அறிவு வளரவும் சர்க்கார் புரிந்துள்ள சாதனைகளைப் புள்ளி விவரங்களுடன் இந் நூலில் விளக்கியிருக்கிறார்கள். ஐந்தாண்டுத் திட்டம் வெறும் ஏட்டுத் திட்டமல்ல, ஆக்க வேலைத் திட்டம் என்பதை இந் நூலிலிருந்து தெரிந்து கொள்ளலாம். பிரசுரம்: சென்னை அரசாங்க செய்தி விளம்பர இலாகா, சென்னை; விலை: அணா 4.

## "ஈழகேசரி" வெள்ளிவிழா மலர்

**வி**னோபாஜி, ராஜாஜி, சென்னைக் கவர்னர் ஸ்ரீபிரகாசா முதலிய பெரியார்களின் ஆசியுடன் 'ஜாம் ஜாம்' என்று வெளியாகியுள்ள "ஈழகேசரி" வெள்ளிவிழா மலர் பொன் போன்ற மலராகத் திகழ்ந்து, கண்களுக்கும் கருத்துக்கும் விருந்தாக அமைந்திருக்கிறது. ஈழநாட்டிலே இருள் கவிந்து கொண்டிருந்த போது, அதாவது அரசியல் அடிமைத்தனமும் அன்னிய மொழி மோகமும் தலை தூக்கித் தாண்டவமாடிக் கொண்டிருந்த போது, 'ஈழகேசரி' பிறந்தது. அன்றிருந்து சென்ற இருபத்தைந்து ஆண்டுகளாக "ஈழகேசரி", குறிப்பாக அரசியல், தமிழ் இலக்கியத் துறைகளில் செய்துள்ள அரும்தொண்டை அளவிட முடியாது. இருபத்தைந்து ஆண்டுகளாகத் தொண்டு புரிந்து வரும் இப்பத்திரிகையின் வெள்ளிவிழா மலரை, கவிஞர்கள், புலவர்கள், பண்டிதமணிகள், இலக்கியப் பேராசிரியர்கள் ஆகியோரின் படங்களும் பொன்மொழிகளும் அலங்கரிக்கின்றன. நூம்பதுக்கு மேற்பட்ட கண்கவர் படங்கள் மலரின் சிறப்புக்குச் சிகரமாக அமைந்திருக்கின்றன. பல்வேறு இலங்கைக் கோவில்களின் படங்களும் 'ஈழத்து மணி விளக்குகள்' என்ற மகுடத்தில் இலக்கிய மேதைகளின் படங்களும் மனஇருளை நீக்கும் ஒளிச்சுடராகத் திகழ்கின்றன. ஸ்ரீ இராஜ அரியரத்தினத்தை ஆசிரியராகக் கொண்ட 'ஈழகேசரி' மேன்மேலும்வளர்ந்து இலங்கைத் தமிழர்களுக்குத் தொண்டு புரிந்து வர வாழ்த்துகிறோம்.

கிடைக்குமிடம்: 'ஈழகேசரி' காரியாலயம், சுன்னாகம், இலங்கை. விலை: ரூ. 5.

## விஜய

**இ**ந்த வருஷ தீபாவளி மலர் மகாகவி பாரதியாரின் முழு உருவப் படத்தை அட்டையில் தாங்கிக் கொண்டு வெளியாகியிருக்கிறது. பேராசிரியர் அ. சீநிவாசராகவன், திரு ப. ராமஸ்வாமி, திரு கி. பட்சிராஜன் முதலிய சிந்தனைச் செல்வர்களின் கருத்துச் செறிந்த கட்டுரைகளும் கதை கவிதைகளும் இதில் அடங்கியுள்ளன. விலை: அணா 8.

## சிவாஜி

**தி**ருச்சி மலைக்கோட்டையை அட்டையில் தாங்கிக் கொண்டு வெளியாகி யிருக்கிறது சிவாஜி ஆண்டு மலர். இதன் ஆசிரியர் திரு திருலோக சீதாராம் 'குருவிக்கூடு' என்ற கவிதை நாடகம் வழங்குகிறார். திரு பாஸ்கரத் தொண்டைமான் ராஜராஜனது கனவைத் தமிழர்களுக்கு நினைவூட்டுகிறார். திரு கி. சந்திரசேகரன், திரு ந. பிச்சமூர்த்தி, திரு சோமு, திரு த. சிதம்பரசுப்பிரமணியன், திரு அகிலன் முதலிய பல எழுத்தாளர்களின் கவிதை, கதை, கட்டுரைகளும் இடம் பெற்றிருக்கின்றன. படிக்கப் படிக்கச் சிந்தனையைக் கிளறும் விஷயங்கள் அடங்கிய இம் மலரின் விலை: ரூ. ஒன்றுதான். கிடைக்குமிடம்: சிவாஜி காரியாலயம், தெப்பக்குளம், திருச்சி.

## புயலுடன் போர்

**செ**ன்ற ஆண்டு நவம்பரில் வீசிய பயங்கரப் புயல் தென்னிந்தியாவை எவ்வளவு தூரம் பாதித்தது என்பது எல்லோருக்கும் தெரிந்ததுதான். ஆனால், சென்னை சர்க்கார் அந்தப் புயலின் கோர விளைவைச் சமாளிக்க எத்தகைய நடவடிக்கை எடுத்தனர் என்னும் விவரம் எல்லாருக்கும் தெரிந்திராது. மேற்படி புயலின் கொடூரப் பலனையும், சர்க்கார் அதற்கு எதிராகத் தக்க சமயத்தில் எடுத்த நடவடிக்கைகளையும் புள்ளி விவரங்களுடன் இச் சிறு வெளியீடு விளக்குகிறது. க்ஷேம நல சர்க்காரின் சாதனைகளை அறிந்துகொள்ள விரும்புகிறவர்கள் இந் நூலைப் படிக்க வேண்டும். ஆங்கிலத்திலும் தமிழிலும் இந்த வெளியீடு பலருடைய உபயோகத்தையும் கருதி வெளியிடப்பட்டிருக்கிறது.

பிரசுரம்: Director of Information and Publicity, Madras.





## மரச்சாமான்களைக் காப்பாற்றுவது அவசியம்

மரச்சாமான்கள் எந்த மாதிரியும் செய்யப்பட்டிருந்தாலும், அவைகளின் மேற்புறம் எப்படி இருந்தாலும், அவைகளுக்கென்று இருக்கும் ஷாலிமார் பெயிண்டைப் பூசினால், அச்சாமான்கள் அதிக காலம் உழைப்பதுடன், பார்ப்பதற்கு அதிக வசீகரமாகவும் இருக்கும்.





... ஏனெனில், இந்தியாவில், ஷாலிமார் பெயிண்ட் கம்பெனியாருக்கு மாத்திரம் தான், 56 வருடத்திற்கு மேலாக பெயிண்ட் தயாரிக்கும் அனுபவம் இருக்கிறது. ஷாலிமார் பெயிண்ட்கள் இந்தியாவின் பல்வித கடுமையான சீதோஷ்ண நிலைமைகளையும் தாங்கக்கூடும் என்பதற்கு, ஷாலிமாரின் பரந்த ஆராய்ச்சியும், தொடர்ந்த முன்னேற்றமுமே அத்தாட்சியாகும்.



எந்த உபயோகமாயினும், பெயிண்ட் ஆர்டர் செய்யும் பொழுது, அவ்வுபயோகத்தை தெரியப்படுத்தவும்.

# ஷாலிமார்




## பெயிண்ட்கள்

ஷாலிமாரின் சகலவித பெயிண்ட்களின் முழு விபரங்களுக்கு ஷாலிமார் பெயிண்ட்ஸ் லிமிடெட், கேட்டு எழுதவும்.



மனம்கவர் மணம்,,

டிராலி

டால்க் பவுடர்

மஸ்க் சோப்



# மூன்றின் மகத்துவம்

**புதுமைச்சித்தன்**

நான், ஏன் மூன்றுக்கு அவ்வளவு முக்கியத்துவம் கொடுத்தேன் என்று சிலர் கேட்கலாம். என் அருமை மகனிடம் ஒரு கட்டுரையைக் கொடுத்து, ''டேய், இதைத் தபாலில் சேர்த்து விட்டு வாடா!'' என்றேன்.

உடனே அவன், ''அப்பா! இன்றைக்குத் தேதி மூன்று!'' என்றான் தனக்கே உரிய முகாரியில்!

''நாளைக்குத் தபாலில் போட்டுக் கொள்ளலாம்; மூன்றில் எது செய்தாலும் மூளிதான்! எதுவும் விளங்காது!'' என்ற ஆமோதிப்பை அடுப்பங்கரையிலிருந்தபடியே ஒலிபரப்பினாள் என் அருமை மனைவி.

மூன்று அவ்வளவு மோசமானதா?

உலகில் மூன்றுக்குப் புகழ் மிக்க நல்லதொரு இடம் உண்டு என்பதே என்னுடைய நம்பிக்கை!

ஏகமாய் இருக்கும் இறைவன் வினை புரியுங்கால், பிரும்மா, விஷ்ணு, சிவன் என்று மூன்றாகின்றார்; அவர் புரியும் தொழிலும், சிருஷ்டி ஸ்திதி சம்ஹாரம் என்று மூன்றுதான்! உடல் உறுப்பைத் திருநாமமாக்கி, சிவபிரானை அழைக்கும்போது இரு கண்களுடன் நெற்றிக் கண்ணையும் கூட்டி முக்கண்ணன் என்று அழைப்பதில், முக்கண்ணனைவிட மூன்றுதான் முக்கியத்துவத்தைத் தட்டிக் கொண்டு போகிறது!

நமக்கும் கண்கள் மூன்றுதான் என்றால் ஆச்சரியமாக இல்லை! புறக் காட்சிகளைக் காண உதவும் கண்கள்இரண்டுடன் மனக்கண் என்ற ஒன்றையும்சேர்த்தால்! உள்ளொளியை வளர்க்காத நாம் அகக் கண்ணின் பயனடையாததில் என்ன வியப்பு?



சிவபிரான் சீற்றமடைந்து நெற்றிக் கண்ணைத் திறந்து எரித்ததும் மூன்று உலகையே! அதனால்தானே திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளென்ற திருநாமம் எய்தினார். சிவனைத் தரிசித்து வணங்கும் கருத்தில் பிறையைத் தரிசித்து வணங்குகிறோமே; அவ்விதம் நமது தரிசனத்துக்கும் வணக்கத்துக்கும் நான்காம் பிறையும் ஐந்தாம் பிறையுமா உரியதாகின்றன? இடையாதே; மூன்றாம் பிறைதானே! மூன்று எவ்வளவு பெருமையைப் பெற்றிருக்கிறது!

ஈரேழு பதினான்கு லோகமென்று வர்ணித்தாலும், எங்கும் எப்பொழுதும் போய் வரச் சக்தி படைத்த நாரத மாமுனிவரை ஈரேழு பதினான்கு லோக சஞ்சாரி என்று சொல்வதில்லை; மூன்று உலகும் சஞ்சரிப்பவர் என்ற பொருளில் திரிலோக சஞ்சாரி என அழைப்பதில், மூன்று பெற்றுள்ள விசேஷத்தன்மை விளங்கவில்லையா! மகாபலி மன்னனிடம் வாமனர் வந்து யாசித்தாரே, மண்; எவ்வளவு? மூன்றடி! இங்கும் மூன்றுதான் முன் நிற்கிறது; முக்கியத்துவம் பெறுகிறது!

சிறுவர்கள், குறும்புத்தனமோ பிழையோ முதல் தடவை செய்தால் மன்னித்து விடுகிறோம்; இரண்டாவது தடவை செய்தாலும், மன்னித்து விடுகிறோம்; மூன்றாவது தடவையும் செய்தாலோ, தண்டித்து விடுகிறோம்! இரு தடவைகள் மன்னித்த நாம், மூன்றாவது தடவையும் மன்னிக்காததில் பெருமையில்லா விட்டாலும், மூன்றில் பெருமை இருக்கவே செய்கிறது!

விருந்தும் மருந்தும் மூன்று நாள் என்று, நாம் விருந்துக்கும் மருந்துக்கும் கொடுப்பதை விட மூன்றுக்கே சிறப்பளிக்கிறோமா, இல்லையா? தரைப் படை, ஆகாயப்படை, விமானப் படை என்று படை வகைகளும் மூன்றே! பண்டைய காலத்திலும், காலாட் படை, குதிரைப் படை, வேழப் படை என் படை வகைகள் மூன்றே! இசைக்கருவிகளும் தோற்கருவி, துளைக் கருவி, தந்திக் கருவி என்று மூன்றேதான்! பறை (முரசு) வகைகளும் மணப்பறை, பிணப் பறை, போர்ப்பறை என்று மூன்றே மூன்றுதான்! நம் நாட்டில் எத்தனையோ நதிகளிருப்பினும் புண்ணிய ஜீவநதிகள் என்ற புகழ்ச்சிக்குரிய நதிகளும், கங்கை, யமுனை, பிரம்மபுத்திரா என்ற மூன்று

தானே! ஆசைகளும், மண், பெண், பொன் என மூன்றே!

முக்கனி என்று கனி வகைகளான மா, பலா, வாழையைச் சிறப்பிப்பதுடன் உண்மையில் மூன்றையும் சிறப்பித்து விடுகிறோம், அல்லவா! நாவலோ, நாடகமோ எதுவாயிருப்பினும், அதிலும் மூன்று புகுந்து தனக்குரிய மதிப்பைப் பெற்று விடுகிறது. எப்படியா? நாவலிலும் நாடகத்திலும் பல பாத்திரங்கள் இருப்பினும், கதாநாயகன், கதாநாயகி,



வில்லன் என்ற ஜீவபாத்திரங்கள் மூன்று தானே! இதில், ஜீவ பாத்திரத்துக்குள்ள முக்கியத்துவம் மூன்றுக்கும் உண்டு என்பதை எவர் மறுக்க முடியும்!

கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே தோன்றி விளங்குவதாகச் சொல்லப்படும் தமிழை, செந்தமிழ், பைந்தமிழ், தீந்தமிழ், தெய்வத்தமிழ் என்று பல புகழ்ப் பெயர்களைக் கூறிப் புகழ்ந்தாலும் முத்தமிழ் என்று கூறுவதில் தான் பண்டிதர், பாமரர் யாவரும் மகிழ்கின்றனர். புகழ்மொழியின் தனிப் பெருமையே அந்தப் பெயரில்தான் அடங்கியிருக்கிறது. இயல், இசை, நாடகம் என்று தமிழ் மூன்றுதான்! ஏன்? தமிழ் என்பதிலும் த—மி—ழ் என்ற எழுத்துக்களும் மூன்றே மூன்று தானே! தமிழ் எவ்வளவு பெருமையும் புகழும் அடைகிறதோ அதே விதம் அதனுடன் உறவு கொண்ட மூன்றும் அடைந்து விடுகிறது! என்னே மூன்றின் பெருமை!

தமிழ்மட்டுமா மூன்று? தமிழ் வளர்க்கத் தோன்றிய சங்கங்களும், முதல், இடை, கடை என்று மூன்றுதான்! இது வரையில் சொல்லி வந்ததெல்லாம் இருக்கட்டும். தமிழ் மொழியைப் பேணி வளர்த்த மன்னர்கள் எத்தனை பேர்கள் தெரியுமா? சேர சோழ பாண்டியரென்ற வகையினர் மூவரே! எத்தனையோ மன்னர்கள் தமிழை வளர்த்தார்கள். ஆயினும் மூவேந்தர்கள் வளர்த்த முத்தமிழ்தான் முதன்மையாகக் கூறப்படுகிறது. தமிழுக்கு அணிகலனாக விளங்கும் வள்ளுவர் குறளும் முப்பால் என்ற மூன்று பிரிவுகள்தானே! இன்றும் தமிழ் வளர்த்தவர்கள் — வளர்ப்பவர்கள், பெரும்பாலோர் பெயரிலுள்ள எழுத்துக்களும் மூன்றே! ராஜாஜி, கல்கி, பாரதி, வ. உ. சி, டி. கே. சி; இந்தப் பெயர்களில் உள்ள எழுத்துக்களை எண்ணிப் பாருங்களேன்; என்னே மூன்றின் பெருமை! புகழ்! மகத்துவம்!

உலகில் மூன்று பெற்றுள்ள முக்கியத்துவத்துக்கும் புகழுக்கும் எல்லையேது?

# கடல் கண்ட கனவு

## பதினேழாம் அத்தியாயம்

## நங்கையின் அன்னை

வீர விக்கிரமன் கொடும்பாளூரி லிருந்து மதுரைக்குப் புறப்படுவதற்கு முன்பு சில பாதுகாப்பு ஏற்பாடுகளை மிகவும் கவனிப்போடு செய்து முடித் தான். யாழ் நங்கை காணமற் போனது அவனுக்குப் பெரிய அதிர்ச்சியைக் கொடுத்திருந்ததால், அந்தக் கணத்தி லிருந்து யாரையும் நம்புவதற்கு அவ னுடைய உள்ளம் இடந்தரவில்லை. மகள் காணமற் போய் விட்டாள் என்று யாழ் நங்கையின் அன்னை துடிதுடித்துக் கொண்டிருந்த போதிலும், வீர விக்கிர மன் அந்தத் துடிதுடிப்பை முழுதும் நம்பிவிடவில்லை. யாழ் நங்கையும் அவ ளோடு பேரியாழும் சேர்ந்து மறைந்து விட்டதால், வீர விக்கிரமனுக்கு அந்த அம்மாளிடம் பலத்த சந்தேகம் ஏற் பட்டது. மகளோடு இந்த அம்மாளும் சேர்ந்து ஏதோ சூழ்ச்சி செய்திருக்க வேண்டும் என்று வீர விக்கிரமன் நினைத்தான். ஆனல் அதே சமயம் இன்னொரு சந்தேகமும் வீர விக்கிரம னுடைய மனத்தில் ஏற்பட்டது. அதா வது, ஆதியிலிருந்தே யாழ் நங்கையின் மனப்போக்குக்கும் அவளுடைய அன்னை யின் போக்குக்கும் எத்தனையோ வித்தி யாசம் இருந்து வந்திருக்கிறது. இருவ ருடைய இலட்சியங்களும் முற்றிலும் வேறுபட்டவை. அதோடு, இந்த இலட் சிய மாறுபாட்டினல் இருவருக்குள்ளும் அடிக்கடி சண்டைகூட நடந்திருக்கிறது. அதெல்லாம் வீர விக்கிரமனுக்கு நன்ரு கத் தெரியும். எனவே, இப்படி வெவ் வேறு மன இயல்புகளைக் கொண்ட இந்த இருவருக்குள்ளும் எப்படி மனம் ஒன்றுபட்டு அதன் பயனக ஒரு சூழ்ச்சி நடந்திருக்க முடியும்?

இவ்வாறு சந்தேகப்பட்டான் வீர விக்கிரமன். பல வருஷங்களுக்கு முன்பு கொடும்பாளூரில் வயோதிகப் பெரிய வர்கள் பலர் இந்தக் குங்கும மாளிகை யைப் பற்றிப் பல செய்திகள் கூறியதை வீர விக்கிரமனே கேட்டிருக்கிறன். யாழ் நங்கை என்ற அந்தப் பெண்ணின் இயற்கையான பெயர் வேறு என்றும், இந்த இளம் பெண் குங்கும மாளிகை யைச் சேர்ந்தவள் இல்லை என்றும் பலர் வீர விக்கிரமனிடமே சொல்லியதுண்டு. இந்த முறையில் அந்த நங்கைக்கும் அவளுடைய அன்னை என்று சொல்லிக் கொள்ளும் கணிகையர் தலைவிக்கும் பாசமான தொடர்பு ஏதும் இருக்க நியாயமில்லை என்பது வீர விக்கிரம னுக்கு நன்ருகத் தெரியும். என்ருலும் யாழ் நங்கை தனது வரலாறு என்ன என்பதை அறிவாளா, அவளுடைய உள் மனத்தில் தனது எதிர்கால வாழ் வைப் பற்றித் திட்டமாக என்ன கருதி யிருக்கிருள் என்பது; யாருக்கும் சரி



யாகத் தெரியாது. ஆகையால் வீர விக்கிரமனுக்கு ஒரு தெளிவான அபிப்பிராயம் கிடைக்கவில்லை. குங்கும மாளிகையின் தலைவியான அம்மானைப் பற்றியோ அவனுக்கு மிக நன்றாகத் தெரியும். எந்த நேரத்தில் எப்படி நடந்து கொள்ளுவாள் என்று சொல்ல முடியாத இயல்பு கொண்டவள் அவள்! சேற்றிலே நட்ட கம்பம் எந்தப் பக்கத்தில் எப்பொழுது எப்படிச் சாயும் என்று யாரால் சொல்ல முடியும்! எனவே, யாழ் நங்கை சித்திராங்க பூபதியோடு வலம்புரித் தீவுக்கே ஓடிப் போக வேண்டும் என்று தீர்மானித்திருந்தாலும், அந்தத் தீர்மானத்துக்கு இந்தக் கணிகையர் தலைவியும் உதவி செய்திருக்கக் கூடும்! இப்படி நினைத்தான் வீரவிக்கிரமன். ஆனால் மகளைக் காணோம் என்றும், பேரியாழ் போய் விட்டது என்றும் அந்த அம்மாள் துடிதுடிப்பதைப் பார்த்தால், வீர விக்கிரமனுக்கே மலைப்பாக இருந்தது! அந்தச் சதிகாரன்கூடக் கலங்கும்படி இருந்தது அந்தக் காட்சி!

வீர விக்கிரமன் ஏற்கனவே தனக்கு ஏற்பட்டிருந்த குழப்பத்தை அதிகப் படுத்திக் கொள்ள விரும்பவில்லை. குங்கும மாளிகையில் தனக்கு மிகவும் நம்பிக்கையான வீரர்கள் பன்னிரண்டு பேரைக் காவல் வைத்துவிட்டு மதுரைக்குப் புறப்பட்டான்.

இந்தப் பன்னிரண்டு வீரர்களுக்கும் துணையாக இன்னும் போர்வீரர்கள் அவசியப் பட்டால், கொடும்பாளூர் அரண்மனைத் தளபதிக்கு உடனே செய்தி அனுப்ப வேண்டும் என்று அவர்களுக்குக் கட்டளை யிட்டான். யாழ் நங்கையின் அன்னையான அந்தக் கணிகையர் தலைவியிடம் சொன்னான்: 'அம்மா! எதிர்பாராத விதமாக ஏதேதோ புதிர்கள் கிளம்பிக் கொண்டிருக்கின்றன! யார் நமக்குப் பகைவர், யார் நமக்குத் துணைவர் என்றே சொல்ல முடியாத நிலையில் திடீர் திடீரென்று எனக்கு அதிர்ச்சிகள் வந்து கொண்



டிருக்கின்றன. இந்த நிலைமையில் இந்தக் குங்கும மாளிகையின் எதிர்காலத்தைப் பற்றியும் இப்பொழுது எனக்கு அவநம்பிக்கை உண்டாகி விட்டது. எந்த மாளிகையானது என்னுடைய திட்டங்களுக்கு எல்லாம் ஈடுகொடுத்து உதவும் என்று கனவு கண்டேனோ, அந்த மாளிகையிலேயே இப்பொழுது இத்தனை பெரிய அதிசய நிகழ்ச்சி நடந்து விட்டது. ஆகையால் இனிமேலும் மெத்தனமாக இருப்பது அறிவீனம்! இந்தக் காவலாளர்கள் இரவும் பகலும் இனி இந்த மாளிகைக்குக் காவலாக நிற்பார்கள். யார் உள்ளே வந்தாலும், அல்லது, உள்ளேயிருந்து வெளியே சென்றாலும் இவர்களுடைய அநுமதியைப் பெற்றாக வேண்டும்!''

இவ்வாறு சொல்லிக் காவலாளர்களுக்கும் கண்டிப்பான உத்தரவுகள் போட்டு விட்டுத்தான் வீர விக்கிரமன் குங்கும மாளிகையிலிருந்து புறப்பட்டான். அப்போது யாழ் நங்கையின் அன்னை ஓடிவந்து வீர விக்கிரமனுடைய பாதங்களிலே விழுந்தாள்.

''ஐயா! நீங்கள் சொல்வதைப் பார்த்தால் என்னையுங்கூட நீங்கள் சந்தேகப்படுவது போல் தோன்றுகிறது. நானும் இந்தச் சூழ்ச்சிகளிலே சம்பந்தப்பட்டிருப்பதாக நீங்கள் நினைக்கிறீர்கள் போலிருக்கிறது. வேண்டாம். அந்த மாதிரியான சந்தேகம் உங்களுக்கு வேண்டாம். மறைந்து போன அந்தப் பேரியாழின் பேரில் ஆணையாகச் சொல்கிறேன். எனக்கும் இந்தச் சூழ்ச்சிக்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லை. உண்மையில் நங்கை காணாமல் போய் விட்டதால் என்னுடைய கனவெல்லாம் பாழாகி விட்டது. நான் என்ன கருதி அவளை வளர்த்தேனோ, நான் எந்த நோக்கத்தோடு அவளுடைய முன்னேற்றத்துக்குப் பாடுபட்டேனோ அத்தனையும் சின்னாபின்னமாகச் சிதறிவிட்டது. அன்றொரு நான் ஒரு உத்தமருக்கு ஒரு வாக்குறுதி கொடுத்தேன். அந்த வாக்குறுதியைப் புறக்கணித்து விட்டு நங்கையை என் இஷ்டப்படி மாற்றுவதற்கு முனைந்தேன். அந்தத் துரோகத்துக்கு எனக்குத் தண்டனை கிடைத்து விட்டது! ஐயா, நீங்கள் கொஞ்சம் அமைதியாக இருந்தால் அந்த இரகசியத்தை உங்களிடம் கூறுகிறேன்!''

இவ்வாறு சொன்னாள் குங்கும மாளிகைத் தலைவி. வீர விக்கிரமனுக்கு ஆத்திரம் வந்தது. அவனுடைய மனம் அப்பொழுது இருந்த நிலையில் இந்தப் பிரலாபம் எல்லாம் அவன் செவியிலே ஏறவில்லை.

''அம்மா! உனக்கு அறிவு இருக்கிறதா? உன்னை நான் சந்தேகப்படுகிறேன் என்ற விஷயந்தான் ஒரு பெரிய விஷயமாக உனக்கு இப்பொழுது படுகிறது! அட சுயநலம் பிடித்த பேதையே! என்னுடைய திட்டங்கள் எல்லாம் தவிடுபொடியாகச் சிதறிப் போய்விட்ட இந்தத் தருணத்தில், கேவலம் உன்னுடைய உண்மையை மெய்ப்பிக்க என்னை அமைதியாக இருக்கும்படி சொல்லுகிறாய்! அப்படித்தானே? அறிவற்ற பெண்ணே! எழுந்திரு! என்னுடைய காவலாளர்கள் உனக்கு ஒரு தீங்கும் நேராதபடி காப்பாற்றுவார்கள். நான் மதுரைக்குச் சென்று திரும்புகிற வரை. எனக்கு வேறு எந்தச் செய்தியும் காதிலே விழாது. அந்த உதயசந்திரனுடைய சூழ்ச்சிகளை ஒழித்துக் கட்டி விட்டு, சித்திரமாயனைப் பல்லவ பீடத்தில் அமர்த்துகிறவரை எனக்கு அமைதி என்பது இல்லை. நீ ஏதோ சொன்னாயே, யாருக்கோ நீ துரோகம் செய்தாய் என்று, அந்த வரலாறுகள் எல்லாம் சாவகாசமாகப் பேசிக் கொள்ளலாம். யாழ் நங்கையின் வரலாற்றில் ஏதோ இரகசியம் இருக்கிறது என்று மட்டும் இப்பொழுது யூகித்துக் கொள்கிறேன். மற்றக் கதைகள் எல்லாம் இந்த அவசரத்தில் என்னால் கேட்க முடியாது. வலம்புரித் தீவுக்கு ஓடிப் போய்விட்ட அந்த நங்கையின் கதையை நான் இனிமேல் கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டிய அவசியமுமில்லை! இப்பொழுது நான் மதுரைக்குப் புறப்படுகிறேன்!''

இவ்வாறு குங்கும மாளிகையிலே சொல்லி விட்டுத்தான் மதுரை சென்றான் வீர விக்கிரமன்!

## பதினெட்டாம் அத்தியாயம்

# சித்திர விசித்திரம்

தஞ்சை அரண்மனையில் நல் வரவேற்பு கோலாகலமாக நடைபெற்றது. முத்தரையர்கள் தங்களுடைய குலக் கொடிக்கு வாய்த்த திருநாயகனை வரவேற்றார்கள் என்பது அவர்கள் உபசரிப்பிலேயே நன்கு தெரிந்தது. இந்த விஷயம் பூபதிக்குத் தர்ம சங்கடமாக இருந்தது. உதயசந்திரன் அருகிலே அமர்ந்து கொண்டு பூபதியின் மனப் போராட்டத்தைக் கவனித்தார்.

சலவை செய்யுங்கள்

பிரகாசமாக ஆடைகளை

கோத்ரெஜ்

**சலவை சோப்புத் தூள்கள்**




1 பவுண்டு, 3 பவுண்டு பெட்டிகள்.

| | |
|---|---|
| மிகக் குறைவான தண்ணீர் பசை உள்ளது. சோடா கிடையாது | விலை மலிவு துரித வேலை சிறந்தது |

கோத்ரெஜ்

சிறந்த சோப்புகளைத் தயாரிக்கிறார்கள்
ஸ்நானத்திற்கும் துவைப்பதற்கும் முக க்ஷவரத்திற்கும்
மற்றும் சிங்காரித்துக் கொள்வதற்கும்.

**100% இந்திய**

நிர்வாகம் மூலதனம்





**கூந்தல் மற்றும் மூளை அபிவிருத்திக்கான தைலம்**

செழுமையாகக் கூந்தல் வளர உதவுகிறது. வழுக்கையைத் தடுப்பதுடன் கேசம் உதிர்வதையும் நிறுத்துகிறது. ஞாபக சக்தியை அதிகரித்து ஆழ்ந்த நித்திரையை அளிக்கிறது. எல்லோருக்கும் எக்காலத்திலும் ஏற்றது.

பெரிய பாட்டில் ரூ. 3-8-0
சிறிய பாட்டில் ரூ. 2-0-0

எங்கும் கிடைக்கும்




**ராம்தீர்த் யோகாஷ்ரமம்**

பம்பாய்-14. (C. Rly)

சென்னை டெப்போ:

4/441, தங்கசாலைத் தெரு, சென்னை



கோட்டயம் கே. என். சுப்பிரமணியய்யர் அவர்களின் புத்திரி சௌ. கமலாவுக்கும், நாகபுரி (வெட்) ஏ.எஸ். வெங்கட்ராமய்யர் அவர்களின் புத்திரன் சிரஞ்சீவி ஏ.வி. விஸ்வநாதனுக்கும் 24-10-56 அன்று கோட்டயத்தில் அதிவிமரிசையாக விவாகம் நடந்தேறியது. கல்யாண தினத்தன்று சங்கீதவாணி வஸந்தகுமாரி & பார்ட்டியாரால் சங்கீதக் கச்சேரியும் அடுத்த தினம் திருச்சி ஏ. கே. சி. நடராஜன் & பார்ட்டியாரால் கிளாரனட் கச்சேரியும் நடைபெற்றன. இவ்வைபவத்திற்குப் பல பிரபலஸ்தர்களும் உள்ளூர் பிரமுகர்களும் நேரில் விஜயம் செய்தும் வாழ்த்துச் செய்திகள் அனுப்பியும் அன்பளிப்புகள் வழங்கியும் தம்பதிகளை ஆசீர்வதித்து எம்மையும் கௌரவித்ததற்கு எங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஸ்ரீமதி அண்டு ஸ்ரீ கே. என். சுப்பிரமணியய்யர்



# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு

## (பிரைவேட்) லிமிடெட்

3. சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி
தபால் பெட்டி நெ. 414 ... மதராஸ்-5
தந்தி: 'EVERMANS'... போன்: 85834

**சேரக் கடைசி தேதி 6-12-1956 ... முதல் ஏலத் தேதி 8-12-1956**

| 25 மாதங்கள் | மாதாந்திர சீட்டுகள் (2-வது [illegible]) | 25 அங்கத்தினர்கள் |
|---|---|---|

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |
| D | ரூ. 25/- | ரூ. 625/- | G | ரூ. 10/- | ரூ. 250/- |

*விவரம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டுக்குச் சேர்ந்தது.*

(போர்டார் உத்திரவுப்படி.) எம். வி. சுப்பிரமணியம், மானேஜிங் டைரக்டர்

டெல்லி கிளை ஆபீஸ் விலாசம்: B. 6, பிளாக் III
டெல்லி-அஜ்மீரி கேட் ஸ்கீம், புது டெல்லி-1

**எங்கள் சேவை உங்களுக்குத்தேவை**

கவனித்து அதற்காக மனம் குழம்ப வில்லை அவர்! பூபதியின் தர்ம சங்கடத்தைக் கண்டு மனத்துக்குள்ளே அநுபவிக்கிறவர் போல இருந்தது அவருடைய தோற்றம்!

''சித்திராங்க பூபதி! குதிரையிலே வந்த களைப்பு உங்களுக்கு மிகவும் அதிகமாக இருக்கும். என்னைப்போல் தினந்தோறும் இரவும் பகலும் சுற்றித் திரிகிற நாடோடிக்கு இதெல்லாம் சகஜம். ஆனால் நீங்கள் அப்படியில்லை. சமீப காலத்தில் சேர்ந்தாற்போல் பல நாட்கள் குங்கும மாளிகையில் உணவும் உறக்கமும் தவிர வேறு எந்தவிதமான வேலையும் இல்லாமல் பழகிவிட்டீர்கள். ஆகையால் இப்பொழுது திடீர் என்று குதிரையில் ஏறி வந்தது களைப்பாக இருக்கும். உங்களுக்கு இப்பொழுது ஓய்வு மிகவும் அவசியம். இந்த அரண்மனையின் மேல் மாடத்தில் மந்திரநாயகத்துக்கும் உங்களுக்கும் சேர்த்து ஒரு விசாலமான அறை இருக்கிறது. அங்கே சென்று சற்றுக் களைப் பாறுங்கள். அவசியப் பட்டால்மந்திரநாயகமும் உங்களோடு வருவார்!''

இப்படிச் சொன்னார் உதயசந்திரன், பூபதியைப் பார்த்து! மந்திரநாயகம்சொன்னார்: ''அமைச்சர் திலகமே! எங்கள் இளவரசருக்கு இப்பொழுது உறக்கம் வராது. கடந்த சில நாட்களாக அவருக்கு ஏதேதோ எதிர் பாராத சம்பவங்கள் நேர்ந்து மனத்தைத் தொல்லைப் படுத்தியிருக்கின்றன. ஆகவே, நான் அவரோடு சென்று சில செய்திகளை அவருக்குச் சொன்னால்தான் அவரால் களைப்பாற முடியும்! இல்லையென்றால் ஓய்வு கொள்ளவே அவரால் முடியாது!'' என்றார் மந்திரநாயகம். இந்த வார்த்தைகளை மந்திரநாயகம் சொல்லுவார் என்று எதிர்பார்த்தே உதயசந்திரன் முதலில் அப்படிப் பேசினார்! எனவே முழுமனத்தோடு மந்திர நாயகத்தையும் பூபதியையும் ஓய்வுக் கூடத்துக்கு அனுப்பினார் உதயசந்திரன். அனுப்பிவிட்டு, முத்தரைய மன்னரையும் வல்லத்தரசரையும் உடன் அழைத்துக் கொண்டு தஞ்சை மாளிகையிலே இருந்த ஒரு பெரிய இரகசிய அறைக்குச் சென்றார் உதயசந்திரன்.

மந்திரநாயகத்தோடு மேல்மாடிக்குச் செல்லும்போதே பூபதிக்குக் கண் கலங்கியது. எத்தனையோ பல நாட்களாகத் தனது மனத்தின் அந்தரங்கத்திலே வைத்து வைத்துப் பொருமிக்கொண்டிருந்தஉணர்ச்சிகள் எல்லாம் பொங்கியடித்துக் கொண்டு வந்தன. அவனையும் மீறி விம்மினான் பூபதி.



தோளோடு கைசேர்த்துச் சித்திராங்க பூபதியை அணைத்துக் கொண்டே மந்திரநாயகம் தஞ்சை அரண்மனையின் மேல் மாடிக்கு வந்தார்.

தஞ்சை அரண்மனையின் மேல்மாடி ஒரே அலங்கார மயமான சித்திர சாலையாக இருந்தது. அந்த அறையின் சுவர்களிலே சூரியனுடைய ஏழு வர்ணக் கதிர்களையும், வர்ணக் குழம்பாகப் பிசைந்து சித்திரங்களாக ஓட விட்டிருந்தார்கள், முத்தரைய மன்னர்கள்! சிவபெருமானுடைய திருவிளையாடல்களைச் சித்திரிக்கிற வர்ண ஓவியங்கள் அந்தச் சித்திரசாலையின் சுவர்களிலே நேத்திரானந்தமாகக் காட்சி தந்தன. நான்கு மூலைகளிலும் ஐம்பொன் உலோகத்திலேயே வார்த்து எடுத்த சிலைகள் அவற்றுக்கு என்று அமைக்கப்பட்ட பீடங்களிலே அலங்காரமாக நின்றன. தென்மேற்கு மூலையில் வலஞ்சுழி விநாயகரின் சிலை நின்றது. வடமேற்கு மூலையில் கஜலட்சுமியின் சிலை! வடகிழக்கில் பைரவர்! தென் கிழக்கு மூலையில் ஓராழித் தேரிலே பவனி வருகிற சூரியனுடைய சிலை நின்றது. முத்தரையர்களின் பரம்பரையிலே வழங்கி வருகிற ஒரு சட்டதிட்டமான கலைச் சம்பிரதாயம் இந்த அமைப்புகளில் எல்லாம் எழிலோடு துலங்கியது. இந்தக் கலைக் காட்சிகளையெல்லாம் பார்த்துக் கொண்டே மந்திரநாயகம் பூபதியின் மனக் கலக்கத்தை மாற்ற முயன்றார்.



"பூபதி! இந்த முத்தரைய மன்னர்களின் கலையார்வத்தைப் பார்த்தாயா? உன்னுடைய முன்னோர்கள் நமது செந்தமிழ் நாட்டுப் பண்பாட்டிலே எத்தனை தூரம் ஊறி யிருந்தார்களோ, அதே அளவு நமது பண்டைப் பண்பாட்டிலே ஊறித் திளைத்தவர்கள் இந்த முத்தரைய மன்னர்கள்! போர் என்றால் அதை அறவே வெறுப்பவர்கள். அன்பு மார்க்கத்திலே உலகம் உய்ய வேண்டும் என்ற ஒரே நோக்கத்தோடு அரசியலை நடத்துபவர்கள். 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்' என்ற நமது தமிழர்களின் உயர்ந்த இலட்சியத்தைக் கடைப் பிடிப்பவர்கள். மனிதனை மிருக நிலையிலிருந்து உயர்த்தி, அவனுக்கு அமர நிலை அளிப்பது கலை தான் என்ற பெரும் நம்பிக்கை கொண்டவர்கள் முத்தரையர்கள்! ஆனால் அதற்காக மனிதன் வெறும் வளையற் பூச்சியாக வளைய வரவேண்டும் என்று அவர்கள் கருதவில்லை! விறு கொண்ட தோளும், வீரம் நிரம்பிய உள்ளமும் கொண்டு மனிதன் விளங்க வேண்டும் என்று கருதுகிறார்கள். ஆற்றல் இல்லாதவன் அவசியத்தை உத்தேசித்து அன்பு மார்க்கத்தைப் பேசுவது சாமானியம்! அதில் முத்தரையர்களுக்கு நம்பிக்கை கிடையாது! படை பலமும், வீரம் நிரம்பிய சேனையும் விசால வியூகங்களாக அமைந்திருந்துங்கூட, அவர்கள் அன்பு மார்க்கத்தைக் கடைப்பிடிக்கிறவர்கள்! அதனால்தான் அவர்களுடைய பண்பு எனக்கு இத்தனை தூரம் மனமகிழ்ச்சி தருகிறது. தமிழ் நாட்டில் இன்று போர் ஏற்பாடுகள் இத்தனை தீவிரமாக நடந்து வரும்போதுங்கூட, முத்தரையர்கள் என்ன நினைக்கிறார்கள் தெரியுமோ? நாமாக வலுச்சண்டைக்குப் போகக்கூடாது என்கிறார்கள். அத்தனை அமைதியான நோக்கோடு இருக்கிறார்கள். அப்படியிருந்தும் சண்டை வந்து விட்டது என்றால், அதற்காகப் பின் வாங்கப் போவதும் இல்லை. வலம்புரித் தீவின் கலைச் செல்வங்களை யெல்லாம் பாழ்படுத்திவிட்ட பகைவர்களுக்குச் சரியான பாடம் கற்பிக்க வேண்டும் என்பதில் அவர்களுக்கு எல்லையற்ற வேகம் இருக்கிறது! கலையில் அவர்களுக்குள்ள ஈடுபாடு அத்தனை மகத்தானது....!"

மந்திரநாயகம் பூபதியின் மனத் துயரை மாற்றுவதற்காக முத்தரையர்களின் பெருமைகளை இப்படியெல்லாம் வர்ணிக்க ஆரம்பித்தார். சித்திராங்க பூபதிக்கு ஏற்கனவே உதயசந்திரன் பேசிய பேச்சு மனத்தில் பசுமையாக இருந்தது. எனவே அவன் கருக்கமாக ஒரு கேள்வி கேட்டான்:

"மந்திரநாயகம்! உங்களுடைய பேச்சையும் உதயசந்திரனுடைய பேச்சையும் நான் ஒப்புக் கொள்கிறேன். முத்தரையர்கள் தமிழ்ப் பண்பாடு நிரம்பிய அரச வம்சத்தினர் என்பதில் எனக்குச் சந்தேகமே யில்லை. ஆனால் அவர்களுடைய பெருமைக்கும் என்னுடைய இலட்சியங்களுக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது?"

இவ்வாறு கேட்டான் பூபதி. மந்திரநாயகம் சொன்னார்:

"பூபதி! நீ கேட்டது சரியான கேள்வி. முத்தரையர்களுக்கும் நமக்கும் சம்பந்தம் இல்லை என்று நீ சொல்வது

போட்டியில் கலந்துகொள்ள கடைசி தேதி. 15 டிசம்பர் '56

# மர்பி மெட்ரோ

## இந்திய சங்கீதப் போட்டி

முதல் தேர்வுகள் 17-12-56 அன்று ஆரம்பமாகின்றன




எல்லா மர்பி வியாபாரிகளிடமும், பம்பாய், மெட்ரோ சினிமாவிலும் பதிவு பாரங்களும் விவரங்களும் கிடைக்கும்

---

# இந்தியன் பாங்க் லிட்

(ஸ்தாபிதம்: 1907)

தலைமை ஆபீஸ்: வடக்கு பீச் ரோட், சென்னை. 1

உள்ளூர் ஆபீஸ்கள்:

எஸ்பிளனேட், சௌகார்பேட்டை, எழும்பூர், சேத்துப்பட்டு, திருவல்லிக்கேணி, மவுண்டு ரோட், சைதாப்பேட்டை, ஆள்வார்பேட்டை, தேனாம்பேட்டை, மயிலாப்பூர், காந்திநகர், தியாகராயநகர், கோடம்பாக்கம், நுங்கம்பாக்கம், புரசைவாக்கம், பெரியமேட் & ராயபுரம்.

தென்னிந்தியா முழுவதிலும், பம்பாய், கல்கத்தா, புது டெல்லி, கொழும்பு, சிங்கப்பூர், F.M.S. முதலிய இடங்களில் கிளை ஆபீஸ்களிருக்கின்றன.

## மூலதனம்

| | | | |
|---|---|---|---|
| அதிகாரம் பெற்ற மூலதனம் | ... | ரூ. | 1,00,00,000 |
| வாக்களிக்கப்பட்ட மூலதனம் | ... | ரூ. | 72,00,000 |
| செலுத்தப்பட்ட மூலதனம் | ... | ரூ. | 62,02,615 |
| ரிசர்வு மற்றும் இதர நிதிகள் | ... | ரூ. | 79,75,000 |
| டிபாசிட்டுகள் (30-6-56) | ... | ரூ. | 32.08 கோடி |

வெளிநாட்டு பரிவர்த்தனையுள்பட சகலவிதமான பாங்கு அலுவல்களும் கவனிக்கப்படும்.





D. P. பார்த்தசாரதி,
B.A. (Hons.), B.L.
ஆக்டிங் செக்ரடரி.

உண்மையான வார்த்தை. ஆனால் அப்படிப்பட்ட ஒரு சம்பந்தம் இனிமேலும் ஏற்படாதா? ஏற்படக்கூடாதா? ஏற்பட வேண்டியது அவசியம் இல்லையா? என்பதைத்தான் நான் யோசிக்கிறேன். ஆனால் இந்த விஷயத்தை நானும் நீயும் யோசிப்பதில் அர்த்தம் இல்லை. இந்த முக்கியமான காரியத்தில் ஒரு முடிவு சொல்ல வேண்டியது நமது வலம்புரி மகாராணியார்தான்! அந்த முடிவை நிறைவேற்றுவதுதான் நம் இருவருடைய கடமையும்!''

மந்திரநாயகம் இந்த வார்த்தையைச் சொன்னதும் சித்திராங்க பூபதிக்குச் சீற்றம் உண்டாயிற்று.

''அப்படிச் சொல்லாதீர்கள்! எந்த முக்கிய விஷயத்திலும் முடிவு சொல்ல வேண்டியது மகாராணிதான் என்பதை நான் ஒப்புக்கொண்ட போதிலும் ஒரு சிறு உண்மையைவற்புறுத்திக் கூற விரும்புகிறேன். எந்த முக்கிய விஷயத்திலும், ஒரு முடிவு செய்வதற்கு முன்பு, மகாராணியார் அவசரப்படக் கூடாது. அந்தந்த விஷயங்களில் சம்பந்தப்பட்ட அத்தனைபேரையும் கூப்பிட்டு நன்றாக விஷயங்களை அறிந்து வைத்துக் கொண்டபிறகுதான் ஒருமுடிவு சொல்ல வேண்டும். அப்படியில்லாமல் மகாராணியே ஒரு முடிவுக்கு வந்து விட்டு அந்த முடிவை மற்றவர்களும் ஒப்புக் கொள்ள வேண்டும் என்று எதிர்பார்த்தால் அது தவறான காரியம்!''



இப்படிச் சொல்லும்போது பூபதியின் கண்கள் சிவந்தன. மந்திரநாயகம் அந்த உணர்ச்சியின் ஆழத்தைப் புரிந்து கொண்டார். சொன்னார்:

''பூபதி ஏன் நாம் இருவரும் சுற்றி வளைத்துப் பேச வேண்டும்! அதற்கு அவசியமே இல்லை. விண்டு சொல்வதாக இருந்தால், இப்பொழுது நாம் முடிவு செய்ய வேண்டிய காரியம் உன்னுடைய திருமண விஷயம்! உன்னைக் கேளாமல் உனது அன்னை ஒரு முடிவுக்கு வந்து விட்டதாக நீ நினைத்துச் சீற்றம் கொள்ளுகிறாய். உன்னுடைய மன நிலையைப் பார்த்தால், உன்னிடம் இது விஷயமாக இனி நான் பேசுவதே தவறு என்று தோன்றுகிறது. உன்னுடைய சீற்றத்தில் நீ பெரிய விபரீதங்களை விளைத்து விடுவாய் என்று அஞ்சுகிறேன். இந்தத் தஞ்சை அரண்மனையிலே புயல் வீசும்படி செய்து விடாதே! ஒரு வாக்குறுதி வேண்டுமானால் நான் உனக்குத் தருகிறேன். உன்னுடைய திருமண விஷயமாக இங்கே யாரும் உன்னோடு பேசாதபடி பார்த்துக் கொள்ளுகிறேன். நீ வலம்புரித் தீவுக்குப் போய்ச் சேர்ந்த பிறகு அங்கே உனது அன்னையோடு நீ கலந்து ஆலோசித்து ஒரு முடிவுக்கு வருகிறவரை நாங்கள் யாரும் உன்னோடு உனது திருமண உறவைக் குறித்துப் பேச மாட்டோம்! சரிதானா?''

இப்படிச் சொன்னார் மந்திரநாயகம். அவருடைய குரலில் தீர்மானமும் தெளிவும் இருந்தன. இதைக் கவனித்த பூபதிக்கு உள் மனத்திலே ஒரு திருப்தி உண்டாயிற்று.

''மந்திரநாயகம்! நான் உங்களிடம் பேசக் கருதிய விஷயம் வேறு. உண்மையில் உங்களைக் கண்டதும் என் இதயத்தில் எழுந்த உணர்ச்சிகள் வேறு. அவற்றைச் சொல்லவிடாமல் நீங்கள் பேச்சை மாற்றுகிறீர்கள். அதனால் தான் என்னையும் மீறி எனக்கு ஆத்திரம் உண்டாகிறது. மன்னிக்க வேண்டும்!''

''பூபதி! என்னைப் பார்த்ததும் உன்னுடைய உள்ளத்தில் வேதனையும் மகிழ்ச்சியும் கலந்து வரும் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். உன்னுடைய நன்மையை உத்தேசித்து நான் உனக்குக் கோபம் உண்டாகும்படி நடந்து கொண்டிருந்தால், வலம்புரி இளவரசன் என்ற முறையில் உன்னைக் கேட்டுக் கொள்ளுகிறேன், என்னை மன்னித்து விடு!''

மந்திரநாயகம் இப்படிச் சொன்னதும் பூபதிக்கு இதுவரை அடங்கியிருந்த துயரம் கட்டுமீறிப் பொங்கிக்கொண்டு வந்தது. விம்மிக்கொண்டே சொன்னான்:

''மந்திரநாயகம்! என்னுடைய தாய்நாட்டின் மீது ஆணை கூறிக் கேட்கிறேன். உண்மையைச் சொல்லுங்கள். வலம்புரித் தீவின் காவல் தெய்வத்தைப் பற்றியும் பேரியாழைப் பற்றியும் நீங்கள் என்னிடம் சொன்ன வரலாற்றில் எத்தனை தூரம் உண்மை இருந்தது? எத்தனை விஷயங்களை என்னிடம் மறைத்தீர்கள்?''

இப்படிக் கேட்டு விட்டு மந்திரநாயகத்தின் முகத்தையே பார்த்தான் பூபதி. தொண்டையை இருமிச் சரிப்படுத்திக் கொண்டு மந்திரநாயகம் பேச ஆரம்பித்தார். (தொடரும்)

---

* இந்தக் கதையில் வரும் ஒரு காட்சிதான் இந்த வார அட்டைச் சித்திரமாகத் திகழ்கிறது

# தாயார் திரும்பினாள்

கீழே ஸ்நான அறையிலிருந்து லீல் லீலென்ற சத்தமும் அதைத் தொடர்ந்து மன்னி ராஜத்தின் உரத்த குரலும் என் செவியை வந்து தாக்கின.

"தலையில் ஒரு கை எண்ணெய் வைத்துத் தேய்க்கிறதற்குள்ளேயே ஊரைக் கூட்டி விடுவாய் போலிருக்கிறதே!"

விஷயம் விளங்கி விட்டது. மன்னி மீராவுக்கு எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டுகிறாள். வாரம் இரண்டு முறை வழக்கமாக எங்கள் வீட்டில் நடக்கும் விவகாரம்தான் இது. என் அண்ணன் மகள் மீராவுக்கு எண்ணெய் தேய்த்துக் கொள்வதென்றால் பிடிக்காது. எதற்கும் அழுகையே வராதவளுக்கு எண்ணெயையும் சீயக்காயையும் கண்டால் அழுகையும் ஆத்திரமும் பொத்துக் கொண்டு வந்து விடும். என் மன்னிக்கோ எண்ணெய் ஸ்நானத்தில் அசாத்திய நம்பிக்கை.

வழக்கம் போல் அதிகாலையில் என் ஸ்நானத்தை முடித்து விட்டு, மன்னிக்கு ஒத்தாசையாகச் சமையலறையிலும் கொஞ்சம் வேலை செய்துவிட்டுக் கல்லூரிக்குத் தயார் பண்ணிக் கொள்வதற்காக மாடியிலுள்ள என் அறைக்கு வந்து கொஞ்ச நேரமே ஆகியிருந்தது. மேஜையின் மேலிருந்த புஸ்தகங்களை அடுக்கி வைத்துவிட்டு ஒன்றைக் கையிலெடுத்துக் கொண்டு படிப்பதற்கு உட்கார்ந்தேன். மீராவின் கூக்குரல் காதைத் துளைத்தது. சற்றுப் பொறுத்துப் பார்த்தேன். பொறுக்க முடியாமற் போகவே வேகமாய்க் கீழே போனேன்.

என்னைக் கண்டதும் மீரா இன்னும் பெரிதாகக் கத்த ஆரம்பித்து விட்டாள்.

"அத்தை! அத்தை! அம்மா கண்ணுலே சீயக்காய்ப்பொடியைப்போட்டுட்டா! கண்ணெல்லாம் எரியறதே!..ஊ..ஊ!"

"சனியன்! வாயைப் பார், மலைக் குகையைப் போல! நானா சீயக்காயைக் கண்ணிலே போட்டேன்? கண்ணை மூடிக் கொள் என்று முட்டிக் கொண்டேன். கேட்டால் தானே?" தொடர்ந்து தாலு செம்பு தண்ணீரை எடுத்து அவள் தலையில் கடகட வென்று கொட்டினாள் என் மன்னி.



மீரா எம்பிக் குதித்தாள். செம்பு டக்கென்று அவள் தலையில் மோதியது. மீரா முன்னைக் காட்டிலும் சத்தம் போட்டு அலற ஆரம்பித்தாள்.

நான் புடவையை இழுத்துச் செருகிக் கொண்டு, "மன்னி! நீ போ உள்ளே! நான் அவளைக் குளிப்பாட்டி அழைத்துக் கொண்டு வருகிறேன்!" என்று மீராவின் கையைப் பிடித்தேன்.

"இதோ! நீ பேசாமல் கல்லூரிக்குக் கிளம்பு. அவளை விடு; நான் பார்த்துக் கொள்கிறேன். நீயும் அம்மாவும் கொடுக்கிற செல்லந்தான் இது ஒரே அடங்காப் பிடாரியாய் விட்டது" என்று மீராவைத் தன் பக்கம் இழுத்துக் கொண்டாள் மன்னி.

அவளுக்கு வெகுளியான சுபாவம். படபடவென்று பேசுவாளே தவிர மனம் தங்கமானது. எங்களுக்கெல்லாம் இது தெரியும். ஆகவே அவள் சொல்லும் எதையும் நாங்கள் யாரும் ஒரு பொருட்டாகவே எடுத்துக் கொள்ள மாட்டோம். அம்மாவுக்கு மட்டும் எப்பொழுதும் அம்மாதிரியாக இருக்க முடியாது. மன்னியின் வார்த்தைகளுக்கு ஒரு அர்த்தத்தைக் கற்பித்துக் கொண்டு வேதனைப் பட்டுக் கொள்வாள்.

பூஜையறையிலிருந்தவள் மீராவின் அழுகையைக் கேட்டு அங்கே வந்து சேர்ந்தாள். மன்னியின் வார்த்தைகள் அவள் காதிலும் விழுந்தன. அம்மாவின் முகம் கோபத்தினால் சிவந்து விட்டது. தவிர, மீரா என் அம்மாவின் தனிச் செல்வம். அவள் அழுவதைக் கண்டால் சகிக்க மாட்டாள். இரண்டும் சேரவே, "ஆமாம். உன் பெண்ணை நாங்கள்

வேங்கட லக்ஷ்மி

தான் கெடுக்கிறேம். அவன் ஜோலிக்கு இனி மேல் வரவில்லையம்மா. தெரா! நீ போ, உன் வேலையைப் பார்த்துக் கொண்டு'' என்று கண்ணீர் பொங்கப் படபடவென்று கூறி விட்டுக் கூடத்தில் ஊஞ்சலில் போய்ப் படுத்து விட்டாள் என் தாயார்.

மன்னி அம்மாவை அங்கே எதிர்பார்க்க வில்லை. ஒரு விநாடி அப்படியே திகைத்து நின்று விட்டாள். பிறகு மீராவின் தலையைத் தூவட்டியபடியே, ''நான் என்ன சொல்லி விட்டேன், தெரா? அம்மா இப்படிக் கோபித்துக் கொண்டு விட்டாரே?'' என்றாள்.

''மன்னி! நீயும் எதையாவது உளறி விடுகிறாய். உன்னுடைய சுபாவம் தெரிந்து அம்மாவும் சும்மா இருக்கலாம். அவளும் எதையாவது மனசில் கற்பித்துக் கொண்டு கோபித்துக் கொண்டு விடுகிறாள். மாலையில் அண்ணா வந்ததும் ரகளைதான்!'' என்றேன்.

மீராவுக்குத் தலைவாரி உடுப்புப் போட்டு விட்டு நான் கிழே வருவதற்குள் மணி பத் தடித்துவிட்டது. கூடத்தில் அம்மாவும் மன்னி யும் தர்க்கம் பண்ணிக் கொண்டிருந்தார்கள். ஊஞ்சல் சங்கிலியைப் பற்றியபடியே மன்னி சொல்லுவதற்கெல்லாம் மறு பக்கம் திரும்பிய படி அரைகுறை வார்த்தையில் பதில் சொல் லிக் கொண்டிருந்தாள் என் தாயார். எனக்கு நேரமாகி விட்டதால் நான் ஒன்றையும் கவனியாமல் கிளம்பி விட்டேன்.

* * *

''என்ன அம்மா இது திடீரென்று? நேற்று வரையிலும் உனக்கு இந்த எண்ணமே யில் லையே! போனமாசம்தான் கிராமத்திலிருந்து வந்திருக்கிறாய். இதற்குள் திரும்பவும் அங்கே என்ன காரியம்?'' என்று திகைப்போடு கேட்டான் என் அண்ணா.

''என்னவோ போகணும் போலிருக்கு; வில்வநாதனையும் அம்பாளையும் இரண்டு மாசம் தரிசனம் பண்ணினால்தான் மனசு சரியாகும். நாளைக்கு முதல் பஸ்ஸுக்குக் கிளம்பப் போகிறேன். இராத்திரியே போய் ஒரு டிக்கட்டு வாங்கி வந்து விடு.''

அண்ணாவுக்கும் அம்மாவுக்கும் பேச்சு நடந்து கொண்டிருந்தது. 'ஐயோ! இந்த அம்மாதான் அற்ப விஷயத்தை எல்லாம் எப்படிப் பெரிதாக்கி விடுகிறாள்?' என்று மனத்துக்குள் எண்ணிக் கொண்டேன். மன்னியின் கண் கலங்கி யிருந்தது.

மீண்டும் அண்ணா சொன்னான்:

''போகணுமானாலும் பத்து நாட்கள் பொறுத்துப் போயேன் அம்மா! பண்டிகை வருகிறதே. சின்னப் பயலுக்கு இது முதல் தீபாவளி யாச்சே! நீயும் இருந்தால்தான் நன்றாயிருக்கும்!''

சின்னப்பயல் என் மருமான் ரவி. அவனுக்கு ஒன்பது மாசம் ஆகிறது. தொட்டியில் நிம்மதியாய்த் தூங்கிக் கொண்டிருந்தான்.

''நான் இல்லாவிட்டால் என்ன? உன் மனைவி ஜாம் ஜாமென்று தீபாவளி நடத்தி வைப்பாள். நான் இங்கே யிருந்து கொண்டு உன் பிள்ளையையும் பெண்ணையும் ஏன் கெடுக்க வேணும்?'' என்று வேகமாகப் பொரிந்து விட்டுத் திண்ணைக்குப் போய் விட்டாள் என் தாயார்.

அண்ணாவுக்கு விஷயம் விளங்கி விட்டது. மன்னிக்கும் அம்மாவுக்கும் ஏதோ தகராறு என்பதை அறிந்துகொண்டு உள்ளே வந்தான்.

''ராஜம்! மத்தியானம் என்ன நடந்தது? அம்மாவை நீ என்ன சொன்னாய்?'' அவனு டைய குரல் கடுமையா யிருந்தது.

மன்னி காலையில் நடந்ததை மெதுவாகச் சொல்லி விட்டு, ''நான் ஒன்றும் தப்பாக நினைத்துச் சொல்லவில்லை. அம்மா அதை இவ்வளவு பெரிதாக எடுத்துக் கொள்ளுவார் என்று எனக்குத் தெரியாது'' என்றாள் தழு தழுத்த குரலில். இதைச் சொல்லி முடிப் பதற்குள் அவளுக்கு அழுகை வந்து விட்டது. அண்ணா என் பக்கம் திரும்பி, ''தெரா! நீ சொல்லு, வீட்டில் என்ன நடந்தது?'' என்று கேட்டான். மன்னி சொன்னதையே நானும் சொல்லி முடித்து விட்டு, ''நீ பேசாமலிரு, அண்ணா! எல்லாம் தானே நாளைக்குச் சரியாகி விடும்'' என்றேன்.

''உனக்குத்தான் அம்மாவின் சுபாவம் தெரியுமே! யோசித்துப் பேசுவதற்கென்ன? வாயில் வந்ததை உளறி வைத்துவிடுகிறாயே! கர்மம்! கர்மம்!'' என்று ஆத்திரத்துடன் தலையில் அடித்துக் கொண்டான் அண்ணா. மன்னி பொங்கி வந்த கண்ணீரைத் துடைத் துக் கொண்டாள்.



எனக்கு மட்டும் ஒரு நம்பிக்கை; அம்மா போகமாட்டாளென்று; ஏனெனில் அவளால் மீராவைப் பிரிந்திருக்கவே முடியாது. ஆனால் நான் எதிர்பார்த்ததற்கு மாறாக மறுதினம் காலையிலேயே அம்மா கிளம்பி விட்டாள். எனக்குக்கூடக் கொஞ்சம் ஏமாற்றம்தான். புறப்படுவதற்கு முன்பு நானே அம்மாவிடம் சொன்னேன்.

"ஏனம்மா, இந்த அற்ப விஷயத்துக்காக இவ்வளவு கோபித்துக் கொள்ளுகிறாயே! மன்னிதான் வெகுளித்தனமாகச் சொன்னாள். நீ அதைப் பிரமாதப்படுத்தலாமா? அவள் எவ்வளவு வருத்தப்படுகிறாள், தெரியுமா? அண்ணா வேறு, அவளைத் திட்டுகிறான். அவள் சின்னவள்தானே!"



அம்மா பதிலே சொல்லவில்லை. உதட்டை இறுக மடித்துக் கொண்டே மூட்டைகளைக் கட்டி விட்டாள்.

"பாட்டி! நீ ஊருக்குப்போகிறாயா? என்னையும் அழைத்துப் போய் விடேன்! இங்கேயிருந்தால் அம்மா என்னைத் தினமும் எண்ணெய் தேய்க்கக் குளிப்பாட்டுவாளே! அப்புறம் சீக்காய்ப் பொடியெல்லாம் கண்ணிலே விழும்!" என்று என் அம்மாவின் கழுத்தைக் கட்டிக் கொண்டாள் மீரா. அம்மா அவளை அணைத்து முத்தமிட்டாள். வாசலில் வண்டி வந்து நின்றது.

"குழந்தைகளை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளு" என்றபடியே என் தாயார் வண்டியில் ஏறினாள்.

மன்னி மௌனமாகத் தலையை அசைத்து விட்டு, "தீபாவளிக்குள் வந்து விடுங்கள்" என்றாள் மன்னிப்புக் கேட்கும் பாவனையில். அவளுடைய தொண்டை அடைத்தது.

அம்மா அதைக் கேட்டதாகவே பாவிக்கவில்லை. என்னைப் பார்த்து, "போய் விட்டு வருகிறேன்" என்றாள்.

எனக்கு ஒரே கோபம். 'சிறு குழந்தைகளைப் போல் என் தாயாருக்கு என்ன பிடிவாதம்?' என்று எண்ணிக் கொண்டேன்.

அண்ணாவும் வண்டியிலேறிக் கொண்டான். மீரா வண்டியிலேறிக் கொள்ள வேண்டுமென்று பிடிவாதமாக அழுதாள். என் தாயார் திரும்பியே பார்க்கவில்லை. வண்டி வேகமாகக் கிளம்பி விட்டது.

அப்பா இறந்தபொழுது எனக்கு மூன்று வயது; அண்ணாவுக்குப் பத்து வயது. அம்மா தான் பாவம், மிகவும் சிரமப்பட்டு எங்களை வளர்த்து முன்னுக்குக் கொண்டு வந்தாள். முக்கியமாக அண்ணாவைப் படிக்க வைக்க அம்மா ரொம்பவும் கஷ்டப்பட்டாள். இதெல்லாம் காரணமாக அண்ணாவுக்குத் தாயாரிடம் மிகவும் விசுவாசம். அவனுடைய மனம் வருந்தும்படியாக ஒன்றும் செய்ய மாட்டான். அம்மாவுடைய விருப்பப் பிரகாரமே அவள் தனக்காகப் பொறுக்கியெடுத்த பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொண்டு குடித்தனம் வைத்தான். மீரா பிறந்தாள். அம்மா பேத்தியைக் கொஞ்சிச் சீராட்டலானாள்.

வீட்டில் ஒன்றும் குறைவில்லாமல் இருந்தாலும் மன்னி ராஜத்தின் வெகுளியான சுபாவம் பலவிதமான தகராறுகளுக்கு அஸ்திவாரம் உண்டாக்கியது. நாலைந்து நாளைக்கொருதரமாகிலும் மன்னிக்கும் அம்மாவுக்கும் ஏதாவது சில்லறைச் சச்சரவுகள் உண்டாகும். இரண்டு நாட்களுக்கு இருவருக்கும் பேச்சு வார்த்தை யிராது. பிறகு சமாதானம் உண்டாகி வீட்டில் அமைதி நிலவும். இதில் அதிகம் சிரமப்பட்டது நான்தான். அம்மா தன்னிடம் அனாவசியமாகக் கோபிப்பதாக மன்னி என்னிடம் சொல்லி அழுவாள். அம்மாவும் வயதுக்கேற்ற பொறுத்தன்மையுடன் கொஞ்சம் விட்டுக் கொடுத்துப் போக மாட்டாள்; மன்னியும் நாவைக் கட்டுப்படுத்தி முன் யோசனையுடன் பேச மாட்டாள். நான் யாருக்கும் பரிவு காட்ட முடியாமல் திண்டாடுவேன். கடைசியில் எங்கள் வீட்டில் சமாதானத்தை நிலை நிறுத்துவது மீராதான். மாமியாரிடம் பேச்சு வார்த்தை நின்று போயிருக்கும் சமயங்களிலெல்லாம் என் மன்னி தன் பெண்ணைத் தூது அனுப்பிக் காரியங்களைச் சாதித்துக் கொள்வாள். ஏனெனில் அண்ணாவுக்கு அடுத்தபடியாக, அம்மாவுக்கு உயிரான பொருள் இவ்வுலகத்தில் ஏதாவது உண்டென்றால் அது மீராதான். அவள் கேட்டால் அம்மாவால் மறுக்க முடியாது. ஆகையால்தான் அம்மா அப்படிப் பிடிவாதமாகக் கிராமத்துக்குப் புறப்பட்டுப் போனது எனக்கு மிகவும் ஆச்சர்யமா யிருந்தது.

தீபாவளிக்கு நாலு நாட்கள் இருக்கையில் ஒரு மாலை நான் சீக்கிரமாக வீட்டுக்கு வந்து சேர்ந்தேன். வீட்டில் புடவைக்காரன்



டில்லியில் சாகித்ய அகாடமியின் ஆதரவில் நடைபெற்று வரும் அகில இந்திய புத்தகக் கண்காட்சியின் தமிழ்ப் பகுதியை ஜனாதிபதி ராஜேந்திரப் பிரஸாத் பார்வையிடுகிறார். தமிழ்ப் பகுதியில் உள்ள புத்தகங்களைப் பற்றித் திரு அழ. வள்ளியப்பா ராஷ்டிரபதி ராஜேந்திரருக்கு விளக்கிக் கூறுவதைப் படத்தில் காணலாம்.

---

வந்திருந்தான். பாயின்மேல் புடவைகளைப் பரப்பிக்கொண்டு உட்கார்ந்திருந்தாள்மன்னி. அவளுடைய முகம் ஒரே சோர்வாயிருந்தது. என்னைக் கண்டவுடன், "இதோ! இதிலிருந்து நமக்கு இரண்டு புடவைகளும், மீராவுக்கு ஒரு பாவாடையும் பார்த்து எடு" என்றாள்.

"பெரியம்மா எங்கே?—வீட்டில் இல்லிங்களா?—அவங்க இருந்தால் இதற்குள்ளே விலையைத் தீர்த்து எடுத்திருப்பாங்க" என்றான் நெடுநேரமாக உட்கார்ந்து அலுத்துப்போன புடவைக்காரன்.

"ஊருக்குப் போயிருக்காங்க, பெரியம்மா" என்றபடியே நான்புடவைகளை ஆராய்ந்தேன்.

"தீபாவளிக்குள்ளே வந்துடுவாங்கயில்லே; பண்டிகைத் திருநாளிலே குழந்தைகளை விட்டுப் போட்டு அங்கேயெல்லாம் அவங்களுக்கு இருப்புக் கொள்ளாதுங்க."

"பாட்டி சொன்னாளே, தீபாவளிக்குப் பட்டுப் பாவாடை வாங்கறேன்னு;—பாட்டி எப்போ வருவாள், அத்தை?" என்று பேச்சுக்கு நடுவே குறுக்கிட்டாள் மீரா.

நான் மன்னியைப்பார்த்தேன். அவள் முகம் எனக்கும் பார்க்கப் பரிதாபமாயிருந்தது.

மாலையில் மன்னி என்னுடைய அறைக்குள் வந்தாள். "இதோ! தீபாவளிக்கு என்ன பட்சணம் செய்யட்டும்?" என்று கேட்டாள்.

"என்ன வேண்டுமானாலும் செய்யேன், அண்ணாவுக்குப் பிடித்ததாக இருக்கட்டும்" என்றேன். மன்னி பதில் சொல்லவில்லை. கீழே போய் விட்டாள்.

மாலையில் அண்ணா "தீபாவளிக்குப் பட்சணமாயிதா என்ன?" என்று என் மன்னியிடம் கேட்டான்.

"ஒன்றுமில்லை. ஹோட்டலில் இருந்து கொஞ்சமாக ஏதாவது தித்திப்புப் பட்சணம் வாங்கி வாருங்கள்; இந்தத் தடவை அது போதும்."

"ஏன் அப்படி? வருஷா வருஷம் நீயும் அம்மாவுமாக வண்டிப் பட்சணம் செய்து வைப்பீர்களே!" என்று அண்ணா கேட்டான்.

"அம்மாதான் இங்கே இல்லையே! பட்சணம் பண்ணவே எனக்குத் தோன்றவில்லை" என்றாள் மன்னி.

பண்டிகை நெருங்கி விட்டது. ஊரெல்லாம் பட்டாசுச் சத்தமும் மத்தாப்புக்களின் வெளிச்சமுமாக ஒளிவிட்டன. ஆனால் எங்கள் வீட்டில் மட்டும் வரப்போகும் பண்டிகையை வரவேற்பதற்கான அறிகுறியையே காணோம். அண்ணாவும் அதைப் பற்றி ஒன்றும் கேட்கவில்லை. மன்னியின் கண்களில் ஒரே ஏக்கம்.

குழந்தை மீரா மட்டும் அடிக்கடி, "பாட்டி எங்கே அம்மா? பட்சணம் பண்ண வேண்டாமா?" என்று எங்கள் இருவரையும் துளைத்துக் கொண்டிருந்தாள்.

* * *

தீபாவளிக்கு முதல் நாள் எனக்கு விடுமுறை. ரவியை இடுப்பில் ஏந்திக் கொண்டு வாசலில் வேடிக்கை காட்டிக் கொண்டிருந்தேன். வாசலில் ஒரு குதிரை வண்டி வந்து நின்றது. அம்மாதான் வண்டியிலிருந்து இறங்கினாள்! அவள் பின்னால் இரண்டு மூன்று பெரிய பித்தளை டப்பாக்கள் வந்தன.

"அத்தை! அத்தை! பாட்டி வந்தாட்டா!" என்று உற்சாகத்துடன் என் அம்மாவை வரவேற்றாள் மீரா.

"என் ராசாத்திப் பட்டு!" என்று அவளை வாரியெடுத்துக் கொண்டாள் என் அம்மா.

மன்னி பரபரப்புடன் சமையலறையிலிருந்து வெளியே வந்தாள்.

"என்ன அம்மா!—ஒரேயடியாய் இப்படிக் கிராமத்தில் போய் உட்கார்ந்து விட்டீர்களே!" என்றாள் தழுதழுத்த குரலில். அவளுக்கு உணர்ச்சி வேகத்தில் தொண்டை அடைத்துக் கொண்டது.

"அதுதான் வந்து விட்டேனே!—இந்தப் பட்சணங்களை யெல்லாம் உள்ளே கொண்டு வை. நீங்கள் இங்கே பண்ணுகிறீர்களோ, என்னவோவென்று அங்கேயே பண்ணிக் கொண்டு வந்துவிட்டேன்" என்றாள் அம்மா. மன்னி கண்களைத் துடைத்துக் கொண்டு டப்பாக்களை உள்ளே கொண்டு வந்து வைத்தாள். அவளுடைய முகத்தில் ஒரே மலர்ச்சி.

"இதோ! தீபாவளி ஜவுளியை யெல்லாம் அம்மாவுக்குக் காட்டு" என்று குதூகலத்துடன் உத்தரவிட்டாள் மன்னி. நான் போய் ஜவுளி மூட்டையைக் கொண்டு வந்து அம்மாவிடம் கொடுத்தேன். மன்னியின் ஆனந்தம் எனக்கு வேடிக்கையாயிருந்தது. மனத்துக்குள்ளேயே சிரித்துக் கொண்டேன்.

வாசலில் நாயனக்காரன் பூபாளம் வாசித்துக் கொண்டிருந்தான்.

"ஊ..கடறது!.....பாட்டி,...கடறது!" என்று பலமாகக் கூக்குரலிட்டுக் குதித்துக் கொண்டிருந்தாள் மீரா.

"எண்ணெய்க் குளி யென்றால் என்றைக்கும் இந்த அமர்க்களம்தான் இவளுக்கு" என்று அதட்டியபடியே அம்மா வெந்நீரைக் கடகட வென்று கொட்டினாள் அவள் தலையில். எனக்கும் மன்னிக்கும் சிரிப்புத் தாங்கவில்லை. ஒருவரை யொருவர் பார்த்தபடியே பொங்கி வந்த சிரிப்பைச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டோம்.



# உங்கள் அருமை குழந்தையின் மார்சளி மறைய இதோ ஒரு புதிய, சுலபமான வழி!

**மார்வலியும், தொண்டை கரகரப்பும் இருவழிகளில் பறந்தோட இந்த சக்தி மிகுந்த, சுகம் தரும் களிம்பைத் தேய்த்தாலே போதும்!**

உடனுக்குடன் கவனிக்காவிட்டால் உங்கள் குழந்தையின் மார்க்கபம் ஆபத்தாக முடிய ஏதுவிருக்கிறது! அவன் இரவில் படுக்கும் சமயம், விக்ஸ் வேபோரப தேய்ப்பதால் அவனுக்கு சீக்கிரமே சுகம் கிட்டுகிறது. விக்ஸ் வேபோரப் அவனை இரு வழிகளில் — உடனுக்குடன் — சுவஸ்தப்படுத்துகிறது.

1. சருமத்தின் மூலம் சுகம் — நீங்கள் விக்ஸ் வேபோரப்பை தேய்த்த மாத்திரத்திலேயே அந்த நல்ல சக்தி நிரம்பிய மருந்து சருமத்தில் ஊடுருவிச்சென்று மார்க்கபத்தை முறிக்கிறது. உங்கள் குழந்தை சுகம் பெறுகிறான்.





2. நாசித்துவாரங்கள் மூலம் நன்மை — விக்ஸ் வேபோரப்பின் சுகம் தரும் வாசனை சக்தி மிகுந்த ஒரு நல்ல ஔஷதம். உங்கள் குழந்தை இந்த நல்ல மருந்தை சுவாசிப்பதின் மூலம் மூக்கடைப்பு அகன்று தொண்டை கரகரப்பு நீங்கி நன்மை பெறுகிறான்.

உங்கள் குழந்தையின் மார்க்கபத்தை விக்ஸ் வேபோரப் மாயமாக மறையச் செய்கிறது! இன்றிரவே விக்ஸ் வேபோரப் உபயோகியுங்கள் — சுகம் காணுங்கள்

மார்பிலும்
தொண்டையிலும்
முதுகிலும்
தேயுங்கள்

**விக்ஸ் வேப்போரப்**




**ஜலதோஷத்திற்கு கைகண்ட மருந்து**

7

"விக்ஸ் வேப்போரப்" ஒரு ட்ரேட் மார்க்

# Jaifabs

# ஜெய்பேப்ஸ்

## உயர்தரமான ரேயான் ஸில்குகள்

### ஜெய் ஹிந்த் ஸில்க் மில்ஸ்

ஆக்ரா ரோடு, காட்கோபார், பம்பாய் - 39

---






## 15. மாணவர்கள் தொழிலாளர்களிடையே ஆராய்ச்சி

இயந்திர சாலைகளும் மற்றத் தொழிற்சாலைகளும், சமூகத்துக்கு உதவும் பொருள்களை மட்டும் உற்பத்தி செய்யவில்லை! சமூகத்தை நசிக்கும் நோய்களையுங்கூட உற்பத்தி செய்து விடுகின்றன.

இயந்திரத்தை உண்டாக்கினான் மனிதன். இயந்திரம் தனக்கு அடிமையாக இருக்கவே விரும்பினான் இவன். ஆனால் நடைமுறையோ இதற்கு நேர்மாறாக இருக்கிறது. இயந்திரம் மனிதனை ஆளுகின்றது. இயந்திரக் கொடுங்கோல் ஆட்சிக்கு உட்பட்ட மனிதன், தன் ஓய்வு, அமைதி, விசால இடத்தில் உழைப்பு, நெருக்கடியின்மை, போதுமான வருமானம் எல்லாவற்றையும் பறிகொடுத்து வருகிறான்.

குறைந்த வருமானமுள்ள பாட்டாளி மக்கள் நிறைந்த தொழிற் சாலைகளில் பலருக்கு டி. பி. உட்புகுந்திருக்கலாம், ஆரம்பித்திருக்கலாம், அதிகரித்து வரலாம். இத்தகையோர், தம்முடன் கூட்டு வேலை செய்யும் பலருக்கும் டி. பி. கிருமிகளைத் தானம் செய்கின்றனர். பலஹீனமும் சீர்கெட்ட உணவும் வறுமையின் கொடுமைகளும், டி. பி. தாக்குதலுக்கு எளிதில் தாக்க வசதி அளிக்கின்றன.

பொருள்களை உற்பத்தி செய்வது போல் தொழிற்சாலைகள் டி. பி. நோயாளிகளையும் விளைவிக்கின்றன என்பது பொருந்தும். டி. பி. புகுந்திருக்கிறதா என்ற ஆராய்ச்சி மிகத் தீவிரமாக இங்குதான் நடத்த வேண்டும்! ஆனால் இங்குதான் இத்தகைய ஆராய்ச்சி இடம் பெறுவதில்லை. ஆயிரத்தில் ஒரு பெரிய சாலையிலாவது இத்தகைய ஆராய்ச்சி துவக்கப்பட்டிருக்கலாம்.

ஒவ்வொரு தொழிலாளியையும், மூன்று மாதங்களுக்கு ஒரு முறையாவது, மருத்துவர்கள் மூலம், சோதிக்கச் செய்ய வேண்டும். இவ்வாறு சோதனை செய்யும் போது டி. பி. சந்தேகப் பேர்வழிகளை, இருமல், இளைத்தல், கபம், உஷ்ணம் என்ற விளக்கங்களைக் கொண்டு தனிப்படுத்த வேண்டும். ஸ்கிரீனிங் செய்யவும், எக்ஸ்ரே படம் பிடிக்கவும் தேவையானவர்களை வடிகட்ட வேண்டும். இவர்களைப் படம் பிடித்து, கப சோதனை செய்து, உடல் உஷ்ணத்தைக் கவனித்து, 'டி.பி. சந்தேகம்' "டி. பி. ஆரம்பம்" அல்லது 'தீவிர டி. பி.' என்று ஒதுக்க வேண்டும். இவர்களுக்கு விடுமுறையும் சிகிச்சையும் அளிக்க, முதலாளிகளுடன், அரசாங்கமும் வசதி செய்து தர வேண்டும்.

ஒவ்வொரு தொழிலாளியையும் வருஷத்துக்கு ஒரு முறையாவது, 'ஸ்க்ரீனிங்'க்கு உள்ளாக வேண்டும். இங்கிலாந்து, அமெரிக்கா தேசங்களில் முதலாளியும், அரசாங்கமும் கூடி இத்தகைய திட்டம் செய்து வசதி அளித்து வருகிறார்கள். அந்த நாடுகளில் டி. பி. யின் சாவு குறைந்து விட்டதற்கும், இந்த நோய் கட்டுக்குள்ளானதற்கும், தொழிற்சாலைகளில் டி. பி. ஆராய்ச்சி செய்ததே முக்கிய காரணம் என்று கூறுகிறேன்.

டி. பி. இருக்கிறதா இல்லையா என்று ஆராய்ச்சி செய்ய வேண்டிய முதல் இடம் நமது பள்ளிக்கூடங்கள். சிறுவர்களைத்தான் டி. பி. எளிதில் தொத்திக் கொள்ளுகிறது. சிறுவர் இளைஞர்களில் தான் டி.பி. மரணமும் அதிகமாக இருக்கின்றது. மேல்நாட்டு நிலையைக் கவனிக்கும்போது நம் நாட்டுப் பள்ளி மருத்துவ சோதனை, குழந்தைப் பருவத்தில் இருக்கிறதென்று கூறுவேன். பெயருக்குத் தான் இச்சோதனை நடக்கிறதே தவிர, நோயைத் தடுப்பதற்கோ, நோய் சிகிச்சைக்கோ அல்ல! ஒவ்வொரு பள்ளியிலும் நோயைப் பரிசோதனை செய்யும் வசதி மிகக் குறைவு.

'ஸ்க்ரீனிங்', 'எக்ஸ்ரே' திட்டம் ஆறு மாதங்களுக்கு ஒரு முறை ஒவ்வொரு மாணவனும் பெறவேண்டும். இப்படிப் பெற்றாலுங்கூட, நோய் கண்டு பிடிக்கப் படுவதும், தடுக்கப்படுவதும் திருப்திகரமாக ஏற்படுவது கடினம். ஆரோக்



ராணுவக் கழக மந்திரி ஸ்ரீ மகாவீர் தியாகி, நவம்பர் 16ந் தேதி ஆக்ராவிலிருந்து விமானத்தில் ஐக்கிய நாடுகள் போலீஸ் படையில் சேர்ந்து கொள்வதற்காக எகிப்துக்குச் செல்லும் மூன்றாவது பிரிவு பாரசூட் படையைச் சேர்ந்த இந்திய ராணுவ வீரர்களையும் அதிகாரிகளையும் வழியனுப்பி வைக்கும் காட்சியை மேலேயுள்ள படத்தில் காணலாம்.

கியம் குறைந்த சின்னங்கள் கொண்ட மாணவ மாணவிகளை அடிக்கடி இந்த ஆராய்ச்சிக்கு உட்படுத்துவது அவசியமென்று கருதுகிறேன்.

டி.பி. நோய் கொண்ட ஒரு மாணவனிடமிருந்து பலருக்குத் தொத்திக்கொள்ளக் கூடும். ஆகவே, டி.பி. நோய் பதுங்கி இருக்க எத்தகைய வசதியும் இருக்கக் கூடாது. இது உடனுக்குடனேயே பகிரங்கமாக வேண்டும். அந்த முறையில் பள்ளியின் ஆரோக்கிய சோதனை அமைய வேண்டும்.

டி. பி.யின் நேர் அடையாளங்கள் மாணவ மாணவிகளிடம் இல்லையே வேறு நோய்ச் சின்னங்கள்தானே தெரிகிறது என்று கருதி எச்சரிக்கையை இழத்தல் அறியாமையாகும். ஆபத்துக்கும் இடம் தரும். டி. பி.யில் கொண்டு போய் விடக் கூடிய நோய்கள் பல உள்ளன. சக்குவான், இருமல், டயாபெடிஸ் (சர்க்கரை வியாதி), இன்ப்ளுவன்ஸா ஜுரம் முதலியவை தாங்கள் புகுந்து கொண்டதுடன் திருப்தி அடையா. தாம் அரைகுறை உயிருடன் நோயாளியை விட்டுப் போகும் போது, "டி.பி. அண்ணே! நான் இருக்கிறேன். நீயும்தான் வாயேன்!" என்று கூவும். அல்லது "டி. பி. அண்ணே! இந்த வீட்டை (உடல்) நான் காலி செய்கிறேன்! நீ இங்கு வந்து குடி புகுந்து கொள்! வாடகைக் கட்டுப்பாடு சட்டதிட்டம் ஒன்றுமில்லை!" என்று அழைத்துக் குடி வைத்து விட்டுச் செல்லும்!

டி. பி. சர்க்கரை வியாதியுடன் கூடிய இளைஞரிடத்தில்தான் அதிகம் காணுகிறது. இத்தகையோரின் மரணக் கணக்கே அதிகம். உடல் கனம் குறைந்து, தேய்ந்து போகும் தன்மை கொண்ட சர்க்கரை நோயாளியை எக்ஸ்ரே முதலிய சோதனைக்குள்ளாக்கித் தீர்மானிப்பது அவசியம். டி. பி. யும் இளைஞர்களைத்தான் அதிகம் பலியாக்குகிறது. சர்க்கரை வியாதியும் இந்தத் தரத்தில் சேர்ந்ததே. இரண்டும் சேர்ந்து விட்டால், கேட்பானேன்? டி. பி. இருக்கலாம் என்று சந்தேகப்படும் நோயாளியின் சிறுநீரைச் சர்க்கரைப் பரீட்சைக்கு உள்ளாக்குவது அவசியம் என்று கருதுகிறேன்.

இருமல் இருந்தால் டி. பி.யைக் காட்டிக் கொடுக்கும் ஒரு சின்னம். இருமல் இல்லாதவரிடத்திலும் டி. பி. இருப்பது உண்டு. இருமல் வறட்டு இருமலாக இருந்து கோழை வெளியேற்றும் இருமலாக மாறும். கபம் வெளி வந்தால் இதை விஷக் கிருமி ஆராய்ச்சிச்சாலைக்கு அனுப்ப வேண்டும். இதில் டி. பி. கிருமிகள் இருப்பது, நோய் இருப்பதற்கு அடையாளம். கபத்தில் டி. பி. கிருமி இல்லாதபொழுதும், டி.பி. தாக்கி இருக்கக்கூடும். இந்த டி.பி. கிருமிகள் கபத்தில் குறைவாகவோ அதிகமாகவோ இருக்கலாம். இது இருப்பதை +, ++; +++; என்ற அடையாளங்களால் மருத்துவர்கள் விளக்குவார்கள். அதிக+ குறி இருப்பது, டி. பி.யின் தீவிரத்தைக் காண்பிப்பதாகும்.

# சங்கிலிப் பிணைப்பு

ரத்னமாலா

விடிந்தால் சியாமளாவுக்குக் கல்யாணம். அவர்கள் வீடு ஒரே அமர்க்களப் பட்டுக் கொண்டிருந்தது. ராகவ ஐயரின் மனைவி, பெரிய இடத்தில் தன் பெண்ணைக் கொடுக்கப் போகிறோம் என்ற பெருமை முகத்தில் பொங்கக் கல்யாணக் காரியங்களில் மகிழ்ச்சியோடு ஈடுபட்டிருந்தாள்.

சியாமளா தன் அறையில் மணப்பெண்ணுக்கு உரிய சர்வாலங்காரங்களுடன் அமர்ந்திருந்தாள். அப்போது மாப்பிள்ளையின் ஜானவாச ஊர்வலத்துக்கான ஏற்பாடுகள் துரிதமாக நடந்து கொண்டிருந்தன. சியாமளாவைச் சுற்றிலும் அமர்ந்திருந்த பெண்களெல்லாம் ஊர்வலத்தில் கலந்து கொள்ளச் சென்று விட்டனர். சியாமளா மாத்திரம் அறையில் தனியாக அமர்ந்திருந்தாள்.

அப்போது பக்கத்து அறையில் யாரோ இரண்டு பெண்கள் வம்பளந்து கொண்டிருந்தனர். அவர்கள் பேச்சைத் தன்னையும் மீறி உற்றுக் கேட்டாள் சியாமளா.

"அடி, விசாலம்! இந்த அநியாயத்தைக் கேட்டாயோ?"

"ராகவ ஐயர் செய்திருக்கும் காரியத்தைத்தானே சொல்கிறாய்? ஆமாம்! நானும் இத்தனை வருஷ அனுபவத்தில் இப்படிப்பட்ட அநியாயத்தைப் பார்த்ததே இல்லை! தான் பெற்ற பெண்களிடமே இத்தனை வித்தியாசம் காட்டுவதா? சியாமளாவின் அக்காவும், அத்தானும் கண்டிப்பாக ஊர்வலத்துக்கு வர மறுத்து விட்டார்களா?"

"நல்ல கேள்வி கேட்டாய்! அவள் ஏன் வருகிறாளாம்! 'என்னதான் தன் தந்தையாக இருக்கட்டுமே, எனக்கு ஐந்து பவுனில் சங்கிலி போடுவதற்கு அப்பா அத்தனை சங்கடப் பட்டார். சியாமளாவுக்கு எப்படி இருபது பவுனில் மூன்று வடம் சங்கிலி செய்திருக்கிறார்? நான் எந்த விதத்தில் குறைந்து விட்டேன்?' என்று அந்தப் பெண் தன்னுடைய புருஷனிடம் சொல்லிக் கொண்டிருந்தாளே... பார்க்க வேண்டும்!"

மேற்கூறிய அந்த இரண்டு பெண்களின் சம்பாஷணையைக் கேட்டுச் சியாமளாவின் உள்ளம் துணுக்குற்றது. தன்னையும் அறியாமல் நிலைக் கண்ணாடியில் தன் உருவத்தைப் பார்த்தாள். அவளுடைய அழகிய கழுத்தில் மூன்று வடம் சங்கிலி மின்னியது! அதைப் பார்க்கப் பார்க்கத் தன் கழுத்தை அந்தப் பொன் சங்கிலி நெருக்குவது போலத் தோன்றியது சியாமளாவுக்கு. அவளுடைய விழிகளின் ஓரத்தில் கண்ணீர் திரண்டு நின்றது. 'போலி மதிப்பில்தான் இந்த உலகமே இயங்குகிறது' என்று தானாக முணுமுணுத்துக் கொண்டாள் சியாமளா.

அவளுடைய அக்காவும், அத்தானும் அன்று காலையில்தான் ஊரிலிருந்து வந்தனர். அப்போதெல்லாம் சியாமளாவிடம் பிரியமாக நடந்து கொண்டாள் அவள் தமக்கை.

"சியாமளா, நீ அதிர்ஷ்டசாலி! உனக்குக் கணவனாக வரப் போகிறவன் சிறந்த படிப்பாளி! பெரிய செல்வந்தன்! என் சியாமளாவின் அழகுக்கேற்ற மணவாளன்தான் வாய்த்திருக்கிறான்!" என்று உள்ள நிறைவோடு தங்கையை அணைத்தவாறு அவளுடைய பெருமையில் தானும் பங்கெடுத்துக் கொண்டாளே, அப்போது இந்த நகை விஷயம் தெரியாதோ? இதை நினைக்க நினைக்கச் சியாமளாவின் மனம் வேதனைப் பட்டது.

"சியாமளா, சியாமளா!" என்று அவளுடைய தோழி ஒருத்தி அறைக்குள் ஓடி வரவே சியாமளாவின் சிந்தனை கலைந்தது.

"சியாமளா! மாப்பிள்ளை ஊர்வலம் நடக்கிறது, பார்! மாடிக் கைப்பிடிச் சுவர் அருகில் வா, போய்ப் பார்க்கலாம்!" என்று சொல்லிக் கொண்டே சியாமளாவை இழுத்துக் கொண்டு போனாள் அவள் தோழி.

"மன்மதன் போல இருக்கிறாரடி உன் மாப்பிள்ளை!" என்ற தோழியின் பேச்சால் முகம் சிவக்க ஊர்வலத்தின் கூட்டத்தில் தன் கண்களைப் பதித்து யாரையோ தேடினாள் சியாமளா. சந்தேகமே இல்லை, அந்தப் பெண்கள் பேசிக் கொண்டது உண்மைதான். அவளுடைய அக்காவும், அத்தானும் ஊர்வலத்துக்கு வரவே இல்லை. சியாமளாவின்






மனம் சோர்ந்து விட்டது. அவளையும் அறியாது, மண மாலை சூடி வரும் மாப்பிள்ளையை அவளுடைய கூரிய விழிகள் சந்தித்தன. அவனுடைய கம்பீரம் நிறைந்த தோற்றம் சியாமளாவின் உள்ளத்தை உவகையில் ஆழ்த்தியது. ஆனால், அதே சமயம் தன்னுடைய சகோதரியின் நினைவு அவள் மலர் வதனத்தை வாடச் செய்து விட்டது. குன்றிய மனத்துடன் தன் அறைக்கு வந்தாள் சியாமளா.

சியாமளாவின் மனம் மிகுந்த வேதனைப் பட்டது. தனக்கு இருப்பது ஒரு சகோதரி. அவளும் வேற்றுமையாக நடந்து கொள்கிறாள். இதை எண்ணும்போது சியாமளாவுக்கு அழுகை குமுறிக் கொண்டு வந்தது. கஷ்டத்துடன் அடக்கிக் கொண்டாள். சியாமளா ஒருமுடிவுக்கு வந்தவள்போலச் சுற்றுமுற்றும் பார்த்தாள். எல்லோரும் உறங்கிக் கொண்டிருந்தனர். வெளியே வந்து பார்த்தாள். வேலை செய்த களைப்பினால் தம்மை மறந்த தூக்கத்தில் ஆழ்ந்திருந்தனர்.

சியாமளா ஒரு போர்வையைப் போர்த்திக் கொண்டு பாலனை மாத்திரம் ஓசைப் படாமல் எழுப்பி அழைத்துக் கொண்டு தன் தமக்கை தங்கி யிருந்த இடத்துக்கு, வந்தது வரட்டும் என்று பயத்தால் நெஞ்சு துடிக்கச் சென்றாள். அவள் அறையைப் பாலன் காட்டியதும், தான் இங்குவந்ததை ஒருவரிடமும் சொல்லாதிருக்கும்படி எச்சரித்து அனுப்பி விட்டாள்.

''டொக், டொக்'' என்று கதவு தட்டும் ஓசை கேட்டுக் கதவைத் திறந்த சாந்தா தன் எதிரில் மணப் பெண்ணான தங்கை சியாமளா நிற்பதைக் கண்டு திடுக்கிட்டு விட்டாள். அவள் கணவனும் மிகுந்த ஆச்சரியமடைந்தான்.

'' சியாமளா! இந்த வேளையில் இங்கு எதற்காக வந்தாய்? கல்யாணப் பெண்ணைக் காணோம் என்று தேடினால்....?'' என்று அவசரத்துடன் கேட்டாள் சாந்தா.

'' அப்படி ஒன்றும் தேட மாட்டார்கள்!'' என்று சொல்லி விட்டு, '' அக்கா, நான் கேள்விப்பட்டதெல்லாம் உண்மைதானா?'' என்று கேட்டாள் சியாமளா.

'' எது?''

'' நீங்கள் இருவரும் இந்தத் திருமணத்தில் கலகலப்பாக இல்லையே ஏன்? என் மண விழாவில் மகிழ்ச்சியோடு பங்கெடுத்துக் கொள்ள உங்களுக்கு விருப்பமில்லையா?'' என்று குரல் தழு தழுக்கக் கேட்டாள் சியாமளா.

''உன் திருமணத்தில் எங்களுக்கு மகிழ்ச்சி இல்லாமல் போகுமா?'' என்றான் சாந்தாவின் கணவன்.

''இல்லை. அத்தான்! நீங்கள் இந்த வார்த்தையைப் பேச்சுக்காகச் சொல்கிறீர்கள். நம்மைப் பற்றி வம்பளக்கும் அளவுக்கு உங்களுடைய கோபம் வளர்ந்து விட்டதை நினைக்கும் போதுதான் வருத்தமாக இருக்கிறது. நீங்கள் இருவரும் இப்படி இருப்பதைக் குறித்து அப்பாவும், அம்மாவும் எத்தனை வேதனைப்படுகிறார்கள் தெரியுமா?''

''அப்படி வேதனைப்படுகிறவர்கள் ஏன் தங்கள் பெண்களிடமே இத்தனை வித்தியாசம் காட்ட வேண்டும்?''

''சியாமளா! இதைப் பற்றி உனக்கென்ன? நீ என்ன சொன்னாலும் அவருடைய கோபம் தணிந்து விடாது.''

''அக்கா! கடைசியில் நீயும் இந்தப் போலி மதிப்பில் மயங்கி விட்டாயே என்பதை நினைத்தால் உன் மேல்தான் எனக்குப் பரிதாபம் ஏற்படுகிறது. உனக்கு அப்பா போட்டது ஐந்து சவரன் சங்கிலி. எனக்கு இருபது பவுனில் மூன்று வடம் சங்கிலி. இதுதானே உங்கள் கோபத்துக்குக் காரணம்?''

''.......''

''உனக்குப் போட்டது ஐந்து பவுனாக இருந்தாலும், அது நம் தந்தையின் அன்பைப் போலவே மாசற்ற பசும் பொன். ஆனால்.. ஆனால் எனக்கோ?'' என்று கேட்டுவிட்டுத் துயரம் நிறைந்த கண்களால் அவர்கள் இருவரையும் ஏறிட்டு நோக்கினாள் சியாமளா.

''இந்தச் செயின் போலித் தங்கம்! கில்ட் செய்து விற்கப்படும் நாற்பது ரூபாய் கொண்ட இருபது பவுன் சங்கிலி!'' அவள் சொல்லி வாய் மூடுமுன், ''என்ன என்ன!'' என்று ஆச்சரியத்தோடு இருவரும் ஏககாலத்தில் கேட்டனர்.

''அக்கா! நான் சொல்வது உண்மை.''

''சியாமளா! உண்மையில் நீங்கள் செலுத்தும் அன்புக்கு நாங்கள் அருகதையற்றவர்கள். காரணம் அறியாது கோபித்துக் கொண்டதற்கு மன்னித்து விடு!'' என்றான் சாந்தாவின் கணவன் நெஞ்சம் பாவனையில்.

''சியாமளா!'' என்று தங்கையை அன்புடன் அணைத்துக் கொண்டாள் சாந்தா.

''சியாமளா! ஏன் இப்படி யெல்லாம் நடந்தது! உன் கல்யாண விவரங்கள் தெரியாமல் நாங்கள் கேவலமான முறையில் நடந்து கொண்டோம். ஏன், அப்பா மிகுந்த கஷ்டப்பட்டு விட்டாரா சியாமளா?'' என்று கவலையோடு வினவினாள் சாந்தா.

சியாமளா பெருமூச்சு விட்டபடி கூறினாள்:

''இரண்டு மாதங்களுக்கு முன்புதான் இந்த மாப்பிள்ளையின் ஜாதகம் அப்பாவுக்குக் கிடைத்தது. அவர்கள் நிறைய சீர்வகைகளை எதிர்பார்ப்பதாகப் பின்னை தேடித் தந்த தரகர் அப்பாவிடம் கூறினார்.

பெரிய இடமும் மாப்பிள்ளையின் படிப்பும் அப்பா, அம்மா இருவரையும் கவர்ந்து விட்டன. எப்பாடு பட்டாவது அந்த வரனுக்கே நிச்சயம் செய்துவிட வேண்டும் என்ற எண்ணம் அப்பாவின் மனத்தில் வேரூன்றி விட்டது. மாப்பிள்ளை வீட்டாருக்கும் நம்மை நன்கு பிடித்து விட்டது. ஆனாலும் அவர்கள் கேட்கும் சீர்வகைகளில் சிறிதும் குறையக் கூடாது என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டனர். அப்பாவிடம் அப்போது கொஞ்சம் வசதி இருந்ததால் எப்படியும் சமாளித்து விடலாம் என்ற தைரியத்தில் மாப்பிள்ளைக்குச் சம்மதம் தெரிவித்து விட்டார். ஆனால் என்னுடைய துரதிர்ஷ்டம் அப்பா கடுமையான 'டைபாய்டு' சுரத்துக்கு ஆளாகி விட்டார். பிழைப்பதே புனர்ஜென்மம் ஆகிவிட்டது. அவர் என் திருமணத்துக்கு அரும்பாடுபட்டுச் சேர்த்து வைத்திருந்த கொஞ்ச நஞ்ச பணமும் வைத்தியத்தில் கரைந்து போய் விட்டது.

''இந்த நிலையில் திருமண நாளும் நெருங்கி விட்டது. அப்பா தவியாய்த் தவித்தார். மாப்பிள்ளையின் பெற்றோரிடம் சங்கிலி பின்னால் போடுவதாகச் சொன்னார். அப்பாவின் வேண்டுகோளுக்கு அவர்கள் செவிசாய்க்கவில்லை. 'இருபது பவுனில் ஒன்று குறைந்தால் கூடக் கல்யாணம் நின்று விடும்' என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டார்கள்.

''ஒரு நாள் அப்பா பணத்துக்காக அலைந்து விட்டுச் சோர்வுடன் வந்து ஊஞ்சலில் உட்கார்ந்தார். அம்மா மோர் டம்ளர் ஏந்திய வாறு அவர் வாய் அசைவதையே பார்த்துக் கொண்டிருந்தாள். 'பொருள் இல்லாதார்க்குப் பெண்ணே பிறக்கக் கூடாது!' என்று சொல்லி விட்டு அவநம்பிக்கையோடு என்னைப் பார்த்தார்.' அந்தப் பார்வை எனக்கு அதிக வேதனையைக் கொடுத்தது.

'' 'அப்பா! என்னால் உங்களுக்கு எத்தனை சிரமம். இந்தக் கல்யாணமே வேண்டாம்' என்று அப்பாவிடம் கூறினேன்.

'' 'அப்படி யெல்லாம் நடக்கவிட மாட்டேன் அம்மா. இரு: இன்னொருவர் இருக்கிறார். அவரையும் பார்த்துவிட்டு வருகிறேன்' என்று சொல்லி விட்டுப் போனார். ஆனாலும் வழக்கம் போலவே ஏமாற்றத்தோடுதான் வந்தார். அன்றிரவு எனக்குத் தூக்கமே வரவில்லை. சிந்தித்துச் சிந்தித்து முடிவில் ஒரு தீர்மானத்துக்கு வந்தேன். காலையில் பக்கத்து டவுனில் உள்ள ஒரு தோழியின் வீட்டுக்குச் செல்வதாக அம்மாவிடம் கூறி விட்டுக் 'கோல்டு ஜுவல்லரி'க்குச் சென்றேன். இருபது பவுன் மதிக்கக்கூடிய மூன்று வடம் கில்ட் சங்கிலி ஒன்று அசல் தங்கம் போலவே கண்களை ஏமாற்றியது. கல்லூரி நாடகங்களில் நடிக்கும் போது சில நகைகள் வாங்கிப் பழக்கம் இருந்ததால் இப்போதும் அதற்குத்தான் என்று எண்ணிக் கொண்டு, அப்பாவைப் பற்றி ஏதும் கேட்காமல் கொடுத்து விட்டார் கடைக்காரர். அந்தச் சங்கிலியை இன்னொரு கடையில் கொடுத்து, வரப்போகும் கணவனின் பெயரைப் பொறிக்கச் செய்தேன். பின் இரண்டு நாட்கள் கழித்து அப்பா தனிமையாக இருக்கும் போது அதை அவரிடம் எடுத்துச் சென்று இரவும், பகலுமாக உருப் போட்டு வைத்திருந்த பொய்யைத் துணிந்து கூறினேன்.

'' 'அப்பா! நான் சொல்வதைக் கோபப் படாமல்கேட்டால் ஒரு விஷயம் சொல்வேன்.'

'' 'என்னம்மா விஷயம்? எதுவா யிருந்தாலும் கோபித்துக் கொள்ள மாட்டேன், சொல், சியாமளா!' என்றார் அப்பா.

''என் கையிலிருந்த பெட்டியை அவர் முன்னால் வைத்து, 'திறந்து பாருங்கள்' என்றேன். அதிலிருந்த சங்கிலியைக் கண்டதும் திகைத்து விட்டார் அப்பா.

'' 'இது ஏது சியாமளா?' என்று வினவினார் அவர் திகைப்பு நீங்காத குரலில்.

'' 'சொன்னால் என்னை மன்னித்து விடுவீர்களல்லவா?' என்றேன்.

"'எனக்கு ஒன்றுமே புரியவில்லை, சியாமளா! சற்று விளங்கும்படி சொல்லேன்' என்றார்.

"'அப்பா, நீங்கள் படுகிற கஷ்டத்தைக் காண என்னால் சகிக்க முடியவில்லை. நானே துணிந்து ஒரு காரியம் செய்தேன். 'நீங்கள் என்னை மனப்பூர்வமாக மணக்க ஆசைப் பட்டால் நகை விஷயத்தில் என் பெற்றோர்களின் விருப்பத்தை ஏற்றுக் கொள்ள வேண்டும்!' என்று மாப்பிள்ளைக்குக் கடிதம் எழுதினேன். அவர், 'என் பெற்றோர்களுக்கு நான் ஒரே பிள்ளையானதால் அவர்களை என்னால் எதிர்க்க முடியாது. ஆயினும் உனக்காக நானே சொந்தமாக—என் அப்பா, அம்மாவுக்குத் தெரியாமல் ஒரு சங்கிலி அனுப்பியிருக்கிறேன். இவ் விஷயத்தை நீ யாரிடமும் வெளியிடாதே!' என்று எழுதி இந்தச் சங்கிலியை அனுப்பியுள்ளார். அப்பா! இதில் ஏதும் தவறு இல்லையே?' என்று கேட்டு விட்டு நிறுத்தினேன்.

"அப்பாவின் கண்களில் நீர் நிறைந்து விட்டது. 'சியாமளா! என்னவோ பொல்லாத வேளை நாம் கண் கலங்கி நிற்க நேர்ந்து விட்டது. ஆனாலும் அது நீடிக்கப் போவதில்லை. சியாமளா! உனக்கு ஒரு குறைவும் வராது அம்மா! உனக்கு வரப் போகும் கணவன் நல்ல அறிவாளி!' என்று சொல்லி விட்டுச் சங்கிலியைத் திருப்பிப் பார்த்தார். அப்பாவுக்கு இருந்த கொஞ்ச நஞ்ச சந்தேகத்தையும் சங்கிலியில் உள்ள அவருடைய பெயர் போக்கி விட்டது" என்று கூறி முடித்தாள் சியாமளா.

"சியாமளா! நான் படித்திருந்தும் முட்டாளாகி விட்டேன்! மாமாவிடம் என்னை மன்னிக்கும்படி நீதான் சொல்ல வேண்டும்" என்றான் சாந்தாவின் கணவன்.

"சியாமளா! விளையாட்டுப் போல நீ இப்படிச் செய்து விட்டாயே, ஒரு நாளைக்கு உண்மை தெரிந்து விட்டால்?" என்று கவலையுடன் கேட்டாள் சாந்தா.

"இப்போதைக்கு இதைச் சமாளித்தாலே போதும். இனி உங்களுடைய கோபம் தணிந்து விட்டதல்லவா?" என்று அமைதியாகக் கேட்டாள் சியாமளா.

"அதை, மீண்டும் மீண்டும் நினைவுபடுத்தாதே, சியாமளா! உன் காலிலே விழுந்து மன்னிப்புக் கேட்டால் கூட மன்னிக்க முடியாத குற்றம், நாங்கள் கோபித்துக் கொண்டது. சரி; நேரமாகிறது, மணப் பெண்ணைக் காணோம் என்று தேடப்போகிறார்கள்" என்று சொல்லியவாறு தங்கையை அழைத்துக் கொண்டு சென்றாள் சாந்தா. அதற்குப் பிறகு, தங்கள் பெற்றோர்கள் வியக்கும் அளவில் சாந்தாவும், அவள் கணவனும் கல்யாணக் காரியங்களில் குதூகலத்தோடு கலந்து கொண்டார்கள்.

அடுத்த நாள் காலை சுபவேளையில் சியாமளா காந்தனின் மனைவியானாள்.

இரண்டு வாரங்களுக்குப் பிறகு ஒரு நாள் வெள்ளிக்கிழமை. தலைக்கு ஸ்நானம் செய்து விட்டு ஈர முடியை உலர்த்திக் கொண்டிருந்தாள் சியாமளா. அப்போது அங்கு வந்த காந்தன், "சியாமளா! குளிக்கும் அறையிலேயே சங்கிலியைக் கழற்றி வைத்து விட்டு வந்து விட்டாயே. வேலைக்காரி பார்த்தால் இதன் கதி அதோகதிதான்!" என்று சொல்லிக் கொண்டே சங்கிலியை அவள் கரங்களில் கொடுக்கப் போனான்.

அதை வாங்கிக் கொள்ளப்போன சியாமளாவின் கரங்கள் நடுங்கின. அடுத்த கணம் சியாமளா, விம்மி விம்மி அழ ஆரம்பித்தாள். "நீங்கள் என் மேல் வைத்திருக்கும் அன்புக்கு நான் ஏற்றவளல்ல! நான் உங்களுக்குப் பெரிய குற்றத்தைச் செய்து விட்டேன். அதை உங்களிடம் சொல்லாமல் மறைத்து விட்டேன். நான் செய்த பிழைக்கு என்ன தண்டனை வேண்டுமானாலும் கொடுங்கள், ஏற்றுக் கொள்கிறேன்!" என்று கூறி நீர் நிறைந்த கண்களால் கணவனை நோக்கினாள் சியாமளா.

காந்தன் அவள் முகத்தையே கூர்ந்து பார்த்தவாறு அமர்ந்திருந்தான்.

"இதோ, இருக்கிறதே இந்தச் சங்கிலி! பசும் பொன் அல்ல; போலித் தங்கம்! என் அப்பா படுகிற கஷ்டம் பொறுக்கமுடியாமல் நான் செய்த பிழை அது..." என்று அவள் கூறி முடிப்பதற்குள், "இல்லை, இல்லை. உன் கணவன் செய்த சூழ்ச்சிதான் இது... சியாமளா! சங்கிலியைப் போலி நகையா என்று நன்றாக உற்றுப் பார்!" என்றான்.

அதை உற்றுக் கவனித்த சியாமளா திகைப்பின் வசமானாள். அவளுடைய சங்கிலிக்கும் இதற்கும் சிறிது வித்தியாசம் இருந்தது. "இது....இது....எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே!" என்று தடுமாற்றத்துடன் சொன்னாள் சியாமளா.

"நீ செய்த குற்றத்தை இது நாள் வரையில் என்னிடம் மறைத்து விட்டதாகக் கூறுகிறாயே தவறு. சியாமளா! எனக்கு எல்லா விஷயங்களும் தெரியும். கல்யாணத்துக்கு முதல் நாள் இரவு நீ உன் அக்காவிடம் பேசிக் கொண்டிருந்ததைச் சந்தர்ப்ப வசத்தால் முழுதும் கேட்டு விட்டேன். அப்போதே ஒரு முடிவுக்கும் வந்து விட்டேன். என் மனைவி மாமாவிடம் சொன்ன பொய்யை நான் மெய்யாக்கி விட்டேன். சங்கிலி காரணமாக நீ எப்போதும் சஞ்சலப்பட்டுக் கொண்டிருப்பதைப் பொறுக்க முடியாமல் உன் சங்கிலி போலவே நேற்றிரவுதான் இதை வாங்கி வந்தேன். என் சூழ்ச்சியை அறியாத நீ ஏமாந்து விட்டாய்!" என்று கூறிவிட்டு உள்ள நிறைவோடு சிரித்தான் காந்தன்.

"என்னை மன்னித்து விட்டீர்களல்லவா?" என்று நிறைந்த குரலில் கேட்டாள்சியாமளா.

"தண்டனை இல்லாமலா? அதுதானே நடக்காது! அதற்குரிய தண்டனையை நீ அடைந்தே தீர வேண்டும்!" என்று பொய்க் கோபத்துடன் சொன்னான் காந்தன்.

சியாமளாவின் முகத்தில் கலவரத்தின் ரேகை படர்வதைக் குறும்புடன் ரசித்தவாறே, "இதைச் சுமக்கும்படி ஆயுள் தண்டனை விதித்திருக்கிறேன்!" என்று சொல்லிச் சங்கிலியை மனைவியின் கழுத்தில் சூட்டினான் காந்தன்.

சியாமளா மகிழ்ச்சி பொங்கத் தன் கணவனின் கரங்களை எடுத்துத் தன் கண்களில் ஒற்றிக் கொண்டாள்.

# 'அனஸின்'

## வலியை வெல்லுவதற்கான
## நான்கு மருந்துகளின் கலப்பாகும்

1. க்வினைன் சல்பேட் 2. காப்பின்
3. பினஸிடின் 4. ஆஸிடில்ஸாலிஸிலிக் ஆஸிட்

வலிகளுக்கு நிவாரணமளிப்பதில் புகழ் பெற்ற 'அனஸின்' விஞ்ஞான முறையில் சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். இவைகள் நரம்புகளின் கேந்திர ஸ்தானங்களில் கூட்டாக வேலை செய்து, தலைவலி, ஜலதோஷம் ஜுரம், பல்வலி, மற்றும் தசைவலிகளுக்குத் துரிதமாயும் அபாயமின்றியும் நிச்சயமாயும் நிவாரணம் அளிக்கிறது. வலிகளுக்குத் துரிதநிவாரணமளிப்பதில் அனஸினுக்கு இணையொன்றில்லை... அனஸினைப் போல் தீங்கு விளைவிக்காத வலிவேறொன்றில்லை. ஆகவே ஞாபகமிருக்கட்டும் 'அனஸின்' ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். அது ஹிருதயத்திற்குத் தீங்கு விளைவிக்கவோ அல்லது வயிற்றுக் கோளாறுகள் உண்டுபண்ணவோ செய்யாது. 'அனஸின்' லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கிறது. 'அனஸின்' விலை ஒவ்வொருவர் சக்திக்கும் ஏற்றது. ஒரு பாக்கெட்டின் விலை அணா 2 மட்டுமே

நான்கு
மருந்துகளின்
சேர்க்கையான
'அனஸின்'
வேண்டுமென்றே
கேளுங்கள்




V 102

# அபலை அஞ்சுகம்

கி. ரா. கோபாலன்



## 22. பழைய நினைவுகள்!

அந்த இடிந்த அரண்மனையிலுள்ள சுவர்ச் சித்திரங்களின் அழகில் மயங்கி விஜயரங்கனும், அஞ்சுகமும் மெய் மறந்து நின்றனர்.

அந்தச் சித்திரங்கள் எழுதப்பட்டுக் குறைந்தது இருநூறு ஆண்டுகளாவது ஆகியிருக்கும் என்று தோன்றியது. அவைகள் மிகவும் புராதனமான முறையில் எழுதப்பட்டிருந்தன. சில இடங்களில் அழுக்குப் படிந்தும், சில இடங்களில் திட்டுத் திட்டாக அழிந்தும் காரைகள் உதிர்ந்தும் காணப்பட்டன.

அவைகளைப் பார்த்ததிலிருந்து அவைகள் ராமாயணக் காட்சிகளை எடுத்துக் காட்டும் வர்ணச் சித்திரங்கள் என்று எளிதாக விளங்கியது. விஜயரங்கன் அஞ்சுகத்தின் கையைக் கோத்துக் கொண்டு ஒவ்வொரு சித்திரத்தையும் அவளுக்குக் காட்டி ராமாயணக் கதையையும் சொல்லிக் கொண்டு வந்தான். ராமாயணச் சித்திரங்களைப் பார்த்து முடித்தவுடன் அவைகளை ஒட்டினாற் போல் கடைசியாக ஒட்டப்பட்டிருந்த ஒரு சித்திரம் விஜயரங்கனை ஸ்தம்பிதமடையச் செய்தது. ராமபட்டாபிஷேகத்துக்குச் சமீபமாக யாரோ ஒரு அரசன் நின்று கரம் குவித்து நமஸ்காரம் செய்வது போன்ற வர்ணச் சித்திரம் தீட்டப்பட்டிருந்தது. ராஜ உடை அலங்காரங்களுடன் கம்பீரமாக நிற்கும் அந்த வர்ண ஓவியம் விஜயரங்கனைத் திகைப்புற வைக்கவில்லை. அந்தப் படத்தின் கீழே எழுதப்பட்டிருந்த எழுத்துக்கள்தான் அவனைத் திகைப்புற வைத்தன. 'மகா ராஜாதி ராஜ விஜய வீர மார்த்தாண்ட துரை அவர்கள்' என்று அந்தச் சித்திரத்தின் கீழ் எழுதியிருந்ததுதான் 'சுரீர்' என்று அவன் மூளையில் பாய்ந்து இளறி விட்டது. அவன் திடீரென்று ஆவேசம் வந்தவன் போல் உணர்ச்சி பரவசனாகித் துடித்தான். 'விஜயவீர மார்த்தாண்ட துரை' என்ற பெயரை இரண்டு மூன்று தடவைகள் வாய்விட்டு உரக்கப்படித்தான். திடீரென்று அவனுக்கு ஏற்பட்ட நிலையைக் கண்டு அஞ்சுகமும் சிறிது கலக்கம் அடைந்து நின்றாள்.

விஜயரங்கன் ஆர்வத்தோடு அஞ்சுகத்தின் தோளைப் பிடித்து உலுக்கி, "அஞ்சுகம்! இதோ இந்தப் படம் யாருடையது தெரியுமா?" என்றான்.

அஞ்சுகம், "அது யாருடைய படம்?" என்று கேட்டாள் வியப்போடு.

"அது என்னுடைய பாட்டனாரின் படம். அஞ்சுகம் இப்பொழுதுதான் எனக்கு எல்லாம் நினைவுக்கு வருகிறது. என் பெயர் என்ன தெரியுமா அஞ்சுகம்? விஜயரங்க துரை. அஞ்சுகம்! இப்பொழுதுதான் எனக்கு ஒவ்வொன்றாக ஞாபகத்துக்கு வருகிறது" என்றான். அப்பொழுதுதான் அதிசயிக்கத் தக்க கனவைக் கண்டு திகைப்படைந்து எழுந்தவன் போல் ஆவேசத்தோடும் உணர்ச்சியோடும் பேசினான்.

அவன் தன் பெயர் விஜயரங்கன் என்று சொன்னதும் அஞ்சுகத்தின் சித்தத்திலும் ஏதோ மின்னல் போல் தெறித்து

ஒரு ஒளி உண்டாகியது. ''உங்கள் பெயர் விஜயரங்கரா......?'' என்று சொல்லிப் பிரமிப்படைந்தவள் போல் நின்று தன் அகன்ற விழிகளை உருட்டி அவன் முகத்தைப் பார்த்தாள்.

''ஆமாம்! என் பெயர் விஜயரங்கன் தான். எனக்கு எல்லாம் இப்பொழுது ஞாபகத்துக்கு வந்து விட்டது. இந்த இடத்துக்கு எலிக் கோட்டை என்று பெயரல்ல. இதற்கு விஜயகோட்டை என்று பெயர். என்னுடைய மூதாதை யரின் ஆட்சியில் இருந்தது இந்த இடம். அவர்கள் அர்ச்சுனனைப் போன்ற வீரர் கள். அதனால்தான் 'விஜய' என்ற சிறப்புப் பெயர் எங்கள் குலத்துக்கு ஏற்பட்டது. நான் அந்த வீரர் குலத்தில் உதித்தவன். 'விஜய' என்ற இந்தக் குலப் பெயர் என்னு டைய குழந்தைப் பருவத்தைக் கூட எனக்கு ஞாபகப் படுத்திவிட்டது. இனிமேல் என்னை ஒருவரும் ஏமாற்ற முடியாது, அஞ்சுகம்....!'' என்றான்.

''எனக்குக் கூட இப்பொழுதுதான் ஏதேதோ நினைவுக்கு வருகிறது. உங் களைப் பார்த்ததிலிருந்து உங்களிடம் என் மனத்தில் எழும் சந்தேகத்தைக் கேட்க வேண்டுமென்று தோன்றும். ஆனால் அதைக் கேட்டால் எனக்கே ஆபத்தாக முடியுமோ என்று அஞ்சிப் பேசாமலிருந்து விடுவேன். 'மேகராஜ புரம்' என்கிற ஊரைப் பற்றிக் கேள் விப்பட்டிருக்கிறீர்களா.....?'' என்று கேட்டாள் அஞ்சுகம்.

விஜயரங்கன் சிரித்தான். ''அது என் னுடைய சொந்த ஊர். அந்த ஊரும் இந்த விஜயகோட்டை வட்டாரத் தைச் சேர்ந்ததுதான். அங்கே என் பெரிய தாயார் இருக்கிறார்கள். நான் பல வருடங்கள் வெளி தேசங்களி லெல்லாம் சுற்றி விட்டு மேகராஜபுரத் துக்குத் திரும்பும்போதுதான் மருதை யும் கதிரனும் என்னை ஏமாற்றி ஒரு இடத்துக்கு அழைத்து வந்து மண்டை யில் அடித்துத் தாக்கி இங்கே கொண்டு வந்தார்கள்.. வா, இப்பொழுதே போய் அவர்களுக்கு வழி செய்து விடு கிறேன்....'' ஆவேசம் கொண்டவன் போல் துடித்தான் விஜயரங்கன்.

அஞ்சுகம் ஒரு பெருமூச்சு விட்டாள். அவளுக்கு எல்லாக் கதையும் விளங்கி விட்டது. மேகராஜபுரத்திலுள்ள நிர் மலாவும் சொக்கனும் எத்தகைய பயங் கரமான சூழ்ச்சியில் இறங்கி இருக் கிறார்கள் என்பதையும், குறத்தி மீனுச் சியும் அவளுடைய புத்திரர்களும் அவர் களுக்கு எந்த வகையில் உதவி செய்கி றார்கள் என்பதையும் அவள் தெளிவாக உணர்ந்து கொண்டாள்.

''பதற்றப்படாதீர்கள்! இதெல்லாம் அந்தக் குற வர்கள்தாங்க ளாகச்செய்த காரிய மல்ல. இந்தக் காரி யங்களை மேக ராஜபுரத்தில் உங்கள் வீட்டில் உள்ள சிலரே செய்யும்படியாகத் தூண்டி இருக்கி றார்கள்..... இதில் யோசிக்க வேண் டியவை எவ்வளவோ இருக்கின்றன. சரி! இருட்டும் நேரம் நெருங்கி விட்டது. இந்தக் கட்டடத்தில் இந்த வேளையில் இருக்கக்கூடாது. வாருங்கள். வெளியே போய் எங்கேயாவது உட்கார்ந்து பேசு வோம்'' என்றாள்.

விஜயரங்கனுக்கு எல்லாம் ஆச்சர்ய மாக இருந்தது. தன்னைப் பற்றி அஞ்சு கத்துக்கு ஏதோ தெரிந்திருக்கிறது என் பதை அவன் எளிதாக உணர்ந்து கொண்டான். அந்தச் சமயத்தில் அங்கு நின்று பேசுவதைவிட வெளியே சென்று எங்கேயாவது உட்கார்ந்து பேசுவது தான் சரி என்று அவனுக்குப் பட்டது. அவன் அஞ்சுகத்தின் கரத்தைப் பற்றிக் கொண்டு மிகுந்த சிரமத்தோடு இரு ளிடையே பல அபாயகரமான இடங் களை யெல்லாம் கடந்து அந்தக் கட்ட டத்துக்கு வெளியே வந்து சேர்ந்தான். அவர்கள் இருவரும் அந்தக் கட்டடத் துக்குச் சமீபத்தில் இருந்த ஒரு மரத் தடியில் வந்து அமர்ந்து பேசலாயினர்.

விஜயரங்கன் மிகுந்த துடிப்போடு, "அஞ்சுகம்! மேகராஜபுரத்தில் எங்கள் வீட்டில் உள்ளவர்கள்தான் இந்தச் சூழ்ச்சியெல்லாம் செய்கிறார்கள் என்று சொன்னாயே, அது எப்படி? அங்கு இப்படிப்பட்ட காரியங்கள் செய்யக் கூடியவர்கள் யார் இருக்கிறார்கள்?" என்று கேட்டான்.

"ஒருவரும் இல்லை என்றுதான் உங்களுக்குத் தோன்றும்...அதிருக்கட்டும். அன்று ஆற்றங்கரையில் உங்களைக் கண்டதும் மயக்கம் போட்டு விழுந்த கிழவியைப் பற்றி உங்களுக்கு இப்பொழுது நினைவு இருக்கிறதா? அவள் உங்களை என்ன பெயர் சொல்லி அழைத்தாள்?" என்றாள் அவள்.

"அது எனக்கு நன்றாக ஞாபகத்தில் இருக்கிறது. அவள்தான் என் பெரிய தாயார். அவள் என்னைப் பார்த்து 'விஜயா' என்றுதான் அழைத்தாள். அதெல்லாம் இப்பொழுதுதான் என் நினைவுக்கு வருகிறது. அவள் ஏன் என்னைக் கண்டு மூர்ச்சையுற்று விழுந்தாள் என்பதும் இப்பொழுதுதான் கொஞ்சம் புலனாகிறது. அவள் திடீரென்று ஆற்றங்கரையில் அந்த வேளையில் என்னைக் கண்டதால்தான்...."



"அஞ்சுகம் இதென்ன? நீ சொல்வதைப் பார்த்தால் பெரிய மோசடியாய் இருக்கும்போலிருக்கிறதே. என்னைப்போல் நடிப்பவன் யார்? அவன் எப்படி எங்கள் வீட்டில் வந்து வசிக்கிறான்? எல்லாம் எனக்கு ஆச்சரியமாய் இருக்கிறதே?" என்றான்.

"அவன் யாரோ ஒரு அப்பாவி. அவனை உங்களுக்குத் தெரியாது. ஆனால் இதற்கு மூலகாரணமாக இருப்பவர்களே வேறு. உங்கள் வீட்டில் நிர்மலா என்று ஒருத்தி இருக்கிறாளே, அவளை உங்களுக்குத் தெரியுமா?"

"தெரியும். அவளை நான் பார்த்ததில்லை. கேள்விப்பட்டிருக்கிறேன். அவள்தான் எங்கள் வீட்டு நிர்வாகத்தை எல்லாம் கவனிக்கிறாளாம். அவள் மிகவும் நல்லவளென்று தானே கேள்விப்பட்டேன்? என் சினேகிதன் ராமதுரைகூட அவளைப் பற்றி மிகவும் சிலாக்கியமாகச் சொன்னானே?"

அஞ்சுகம் சிரித்தாள். "எல்லோரும் அப்படித்தான் சொல்லிக் கொள்வார்கள். பார்வைக்கு மிகவும் அழகாக இருப்பாள். பேசும்பொழுதும் மிகவும் இனிமையாகப் பேசுவாள். படித்தவள், சாமர்த்தியசாலி...ஆனால் அவள் நெஞ்சம்தான் மிகவும் கொடிய நெஞ்சம்.. நானும் ஆரம்பத்தில் அவளை மிகவும் நல்லவளென்றுதான் எண்ணி ஏமாந்தேன். இப்பொழுதுதான்எனக்கு எல்லாம் தெரிகிறது. இந்த மோசடி நாடகத்துக்கே அவள்தான் காரணம். அவள் தான் சூத்திரதாரி. அவளுடைய சூழ்ச்சிகள்தான் இதெல்லாம். ஒரு அப்பாவி மனிதனுக்கு ஏதேதோ ஆசைகளெல்லாம் காட்டி உங்கள் மாதிரி நடிக்கும்படி அவள்தான் செய்திருக்கிறாள்" என்று கூறினாள் அஞ்சுகம்.

"அது காரணமில்லை, அவர்கள் மூர்ச்சையடைந்ததற்கு...வீட்டில் ஒரு விஜயரங்கன் இருக்கும்போது இங்கு எப்படி இன்னொரு விஜயரங்கன் வந்தான் என்று தெரியாமல் திகைத்துத்தான் அவர்கள் மூர்ச்சையுற்றிருக்கிறார்கள்" என்றாள் அஞ்சுகம்.

"வீட்டில் ஒரு விஜயரங்கனா...?" என்றான் விஜயரங்கன் வியப்போடு.

"ஆமாம்! அந்தச் சூழ்ச்சி நாடகம் தான் உங்களுக்குத் தெரியாத நாடகம். உங்களைப்போன்ற உருவத்தைப் பெற்றதினால் உங்களைப்போல் உங்கள் பெரியம்மாவிடம் நடிப்பதற்கு வேண்டிய துணிச்சல் ஒருவருக்கு ஏற்பட்டு விட்டது...அதோடு உங்களுக்குச் சேர வேண்டிய ஏராளமான சொத்துக்களையும் சுலபமாக அடைந்து விடலாமல்லவா..அதற்குத் தடங்கலாக இருப்பவர் நீங்கள்தானே? உங்களை ஒருவழியாகத் தீர்த்து விட்டால்?....நல்ல வேளை! உங்களை உயிரோடு வைத்திருப்பதே அதிருஷ்டம்தான்" என்றாள் அஞ்சுகம்.

"என்ன? அப்படியா? இதெல்லாம் உனக்கு எப்படித் தெரியும்?" என்றான் விஜயரங்கன் பதைபதைப்பும் குழப்பமும் கொண்டவன்போல்.

"எனக்குக் கொஞ்ச நாட்கள் மேகராஜபுரத்தில், உங்கள் வீட்டில் உங்கள் பெரியம்மாவிடம் வேலை செய்யும் பாக்கியம் கிடைத்தது. வீட்டு நிர்வாகமே நிர்மலாவின் கையில்தானே இருக்கிறது? அவளுடைய அதிகாரத்தின் கீழ்தான் நான் இருந்தேன். அப்பொழுது அவள்







# 57 வருஷங்களாக பிரக்யாதி பெற்றது.

லோத்ராவில் எந்தவிதமான தீமை விளைவிக்கும் பொருள்களும் கிடையாது. ஆரோக்ய வாழ்வையும், ஆனந்தத்தையும் திரும்பப் பெற இதைவிட சிறந்த டானிக் ஒன்றுமில்லை. எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

கேசரி குடீரம் பிரைவேட் லிமிடெட்.
*ராயப்பேட்டை, மதராஸ்-14.*






லோத்ரா
பெண்களுக்கே

தமிழ்நாட்டுத் ஏஜன்டுகள்: மெஸர்ஸ் ஸ்ரீராம ஜெனரல் ஸ்டோர்ஸ், மேலக் கோபுர வீதி, மதுரை

உருவத்திலும் பேச்சிலும் நான் கொஞ்சம் மயங்கினேன். அவள் ஏதோ சூழ்ச்சி செய்து உங்கள் வீட்டில் இருந்த விலையுயர்ந்த நகைகளையெல்லாம் திருடி மறைத்துவிட்டு அனாதையாகிய என் மீது பழி ஏற்படும்படி செய்து விட்டாள். நான்தான் நகைகளைத் திருடி விட்டேன் என்று போலீஸ்காரர்கள் என்னைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். நான் தலைமறைவாக இருக்கிறேன். என் மீது இரக்கம் வைத்து உளவு மூலமாக உண்மை நிலையை அறிந்து எனக்கு உதவி செய்வதற்காக அங்கு சென்ற மனிதரையும் தன் வலையில் சிக்க வைத்து அவரையும் பெருங் குற்றவாளியாகும்படி செய்திருக்கிறாள் அவள்'' என்றாள் அஞ்சுகம், உள்ளதை உள்ளபடியே சொல்லும் குழந்தை போல்.



அஞ்சுகம் சொல்லிய விவரங்கள் விஜயரங்கன் மனத்தில் ஆத்திரத்தையும் வேகத்தையும் உண்டாக்கின. அவன் ஒரு ஆழ்ந்த பெருமூச்சு விட்டுக்கொண்டான். ''ஹூம்...! இவ்வளவு கோலாகலமா நடந்திருக்கிறது? இது என்ன அநியாயம்! இவ்வளவு தெரிந்த பின்னும் நான் இதை ஒரு கணம்கூடச் சகித்துக் கொண்டிருப்பது பிசகு. ஒரு பெண்ணுக்கு இவ்வளவு துணிச்சலா? அவளுக்குத் தகுந்தாற் போல் ஒரு வேஷக்காரனும் அகப்பட்டானே! நல்ல திட்டம் தான் போட்டிருக்கிறார்கள். அந்த வஞ்சகியையும் அவளோடு சேர்ந்த அந்த நாடோடிப் பயலையும் என்ன செய்கிறேன் பார்!'' என்று துடித்துக் கொண்டே வேகமாக எழுந்தான் விஜயரங்கன்.

அஞ்சுகம் பரபரப்போடு எழுந்த அவன் கையைப் பிடித்து இழுத்துத் தன் பக்கத்தில் அமர்த்திக் கொண்டு, ''அதற்குள் அவசரப் படாதீர்கள். இதில் நாம் யோசிக்க வேண்டியது எவ்வளவோ இருக்கிறது. இன்று வரையில் அந்த நகைகளைத் திருடியவள் நான்தான் என்று போலீஸில் தீர்மானம் செய்திருக்கிறார்கள். உண்மையாக அந்த நகைகளைத் திருடியவள் நிர்மலாதான் என்று ஆதாரத்தோடு நாம் நிரூபிக்காவிட்டால் நான்தான் குற்றவாளியாவேன். முதலில் அதற்கு வேண்டிய உண்மையான ஆதாரங்களை நாம் தேடியாக வேண்டும். குறத்தி மீனாச்சிக்கும் நிர்மலாவுக்கும் ஏதோ தொடர்பு இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. சில விலையுயர்ந்த தங்க நகைகளெல்லாம் மீனாச்சியிடம் இருக்கின்றன. அவைகளெல்லாம் உங்கள் வீட்டு நகைகளாக இருக்குமோ என்று நான் சந்தேகப்படுகிறேன்'' என்றாள்.

எல்லாவற்றையும் அமைதியோடு கேட்டுக் கொண்டிருந்த விஜயரங்கன், ''அப்படியா? சரிதான். அந்த நகைகளை நான் பார்த்தால் எனக்கு நன்றாக விளங்கி விடும். எங்கள் குடும்பத்து நகைகள் எல்லாம் மிகவும் புராதனமானவை. அதோடு மட்டுமல்ல, ஒவ்வொரு நகையிலும் எங்கள் குடும்பச் சிறப்புப் பெயரான 'விஜய' என்ற முத்திரை பொறிக்கப்பட்டிருக்கும். அஞ்சுகம்! மீனாச்சியிடம் உள்ள நகைகளை நான் எப்படியாவது பார்க்கவேண்டும்!'' என்றான்.

''அந்த நகைகளைப் பார்ப்பது அவ்வளவு கஷ்டமல்ல. அவைகளையெல்லாம் மீனாச்சி தன் துணிப்பையில்தான்வைத்திருக்கிறாள். இன்று இரவு அவள் தூங்கியபின் வேண்டுமானால் அவைகளை நாம் எடுத்துப் பார்க்கலாம்.''

''சரி. அவைகளை நான் பார்த்தால் போதும். அவைகள் எங்கள் வீட்டு நகைகள் தான்என்று எனக்குத் தெரிந்து விட்டால் உடனே தாமதிக்காமல் போலீஸாரிடம் சொல்லி அந்த நிர்மலாவையும் அவளோடு சேர்ந்த வேஷக்காரனையும் சந்தியில் கொண்டு வந்து நிறுத்திச் சரியாகத் தண்டிக்கச் செய்கிறேன்'' என்றான் விஜயரங்கன் ஆவேசத்தோடு.

''அந்த நிர்மலாவை வேண்டுமானால் போலீஸாரிடம் பிடித்துக் கொடுக்கலாம். ஆனால் அந்த மனிதரைப் பிடித்துக் கொடுக்கக் கூடாது. அவரை எங்கேயாவது தப்பித்துக் கொண்டு ஓடி விடச் செய்வதுதான் மிகவும் நல்லது'' என்று கெஞ்சினாள் அஞ்சுகம்.

விஜயரங்கன் அஞ்சுகத்தின் முகத்தை உற்று நோக்கி, ''அந்த மனிதன் மீது உனக்கென்ன அவ்வளவு அனுதாபம்?'' என்று சந்தேகத்தோடு கேட்டான்.

''என் மீது நீங்கள் ஏதோ சம்சயப் படுகிறீர்கள். அந்த மனிதரோடு நான் கொஞ்ச நாட்கள் பழகி இருக்கிறேன், அதனால் சொன்னேன். அந்த மனிதர் தகாதவர்களோடுபழகியவர்தான். திருடர்கள் கூட்டத்திலேயே நான் குழந்தைப் பருவத்திலிருந்து வளர்ந்தவளாத

**காலமானார்**

— தன்னலமற்ற பொது நல ஊழியரும் வத்தலக்குண்டு கூட்டுறவு நகர பாங்கியின் உதவி சேர்மனுமான திரு வி. ஆனந்தன் 1-11-56 அன்று வத்தலக் குண்டில், தமது 43-வது வயதில் காலமானார். இவர் பல வருஷங்கள் "கல்கி" ஏஜெண்டாக இருந்தவர். அவர் குடும்பத்துக்கு நமது அனுதாபம்.

லால் அவரைப் பற்றிக் கொஞ்சம் தெரிந்து கொண்டிருக்கிறேன். திருடுவதைத் தவிர வேறு பிழைக்க வழியில்லையே என்று, முழு மனமில்லாது ஆபத்தில்லாத சிறு திருட்டுக்களில் ஈடுபடுகிறவர். துணிகரமான திருட்டு எதிலும் கலந்து கொள்ள மாட்டார். திருடுவதில்கூடத் தர்மநியாயமெல்லாம் பார்க்கிறவர். கொள்ளையடிக்கிறவர்கள் கொலை செய்கிறவர்கள் இவர்களைக் கண்டாலே அவருக்குப் பிடிக்காது. தான் செய்யும் தகாத காரியங்களை உணர்ந்து பச்சாத்தாபப்படும் மனிதனுக்கு உலகத்தில் உதவி செய்ய யார் முன் வருகிறார்கள்? ஒரு தடவை குற்றம் செய்தவனை எந்நாளும் தீயவனென்றே ஒதுக்கித் தள்ளி விடுகிறது உலகம். அவர் பெரிய வாய்வீச்சுக்காரரே தவிர கெடுதலான காரியங்கள் செய்ய மிகவும் பயப்படுவார். ஒரு பாவமும் அறியாத என் மீது திருட்டுப் பழி வரவே, என் மீது இரக்கம் கொண்டு அந்தப் பழியை நீக்கவும் உளவு கண்டு பிடிக்கவுமே அவர் மேகராஜபுரம் சென்றார். ஆனால் நிர்மலா அவரை மயக்கித் தகாத காரியங்களில் ஈடுபடும்படி செய்து விட்டாள். நான் குறத்தி போல் வேடம் தரித்துத் தலை மறைவாக இருக்கிறேன் என்று அவருக்குத் தெரியும். ஆனால் அவர் என்னைப்போலீஸாரிடம் காட்டிக் கொடுக்கவில்லை. அதை அவர் நிர்மலாவிடமும் சொல்ல வில்லை. நான் இங்கு இருக்கிறேன் என்று அவளுக்குத் தெரிந்திருந்தால் இத்தனை நாட்கள் என்னை வைத்திருக்கமாட்டாள். எனக்கு உபகாரம் செய்வதற்காகச் சென்ற அவரைப் போலீஸார்வசம் நாம் காட்டிக்கொடுக்க் கூடாது" என்றாள் உருக்கமாக.

அஞ்சுகத்தின் உருக்கமான வேண்டுகோள் விஜயரங்கனின் மனத்தைக் கரைத்தது. இருந்தாலும் தன் பெயரைச் சூட்டிக் கொண்டு உடைமைகளை ஏமாற்றி அடைய நினைத்த ஒருவனைச் சட்டென்று மன்னித்து விட அவன் மனம் இடம் கொடுக்கவில்லை. "அவன் நிர்மலாவின் வலையில் விழ்ந்து விட்டான் என்கிறாய். ஆனால் ஒரு இடமான ஆண்பிள்ளை ஒரு சாதாரணப் பெண்ணின் வார்த்தையில் மயங்கி அசட்டுத்துணிச்சலாகத் தகாத காரியங்கள் செய்வதில் ஈடுபடலாமா....?" என்று கேட்டான் விஜயரங்கன்.

"அவர் அப்படிப்பட்ட திடமான மனமுடைய மனிதரல்ல. அதுவும் நிர்மலாவின் அழகையும் பேச்சையும் அறிந்த எந்த ஆண் பிள்ளையும் அவளிடம் மயங்காமல் இருக்க முடியாது. என்னைப் போன்ற ஒரு பெண்ணின் மனசையே அவளுடைய அழகு மயக்கிச் சொக்க வைத்து விட்டதென்றால் ஆண்பிள்ளைகள் எம்மாத்திரம்? ஒருவேளை நீங்கள் அவளைப் பார்த்தால் கூட எப்படியாவீர்களோ?" என்றாள் அஞ்சுகம்.

"இதெல்லாம் தெரிவதற்கு முன்னால் பார்த்திருந்தால் எப்படியாகி யிருப்பேனோ? அதுவும் அஞ்சுகம் என்பவளைப் பார்ப்பதற்கு முன்னால் அவளைப் பார்த்திருந்தால் எப்படியோ? ஆனால் எனக்கு உயிரைக் கொடுத்தவளிடமிருந்து என்னுடைய உள்ளத்தைப் பிடுங்க யாராலும் முடியாது" என்றான் விஜயரங்கன்.

அவர்கள் இருவரும்உலகையே மறந்து ஏதோ பேசிக் கொண்டிருக்கும் போது குறத்தி மீனாச்சி அங்கு வந்து சேர்ந்தாள். "இத்தனைநேரம் இங்கேயாவந்து உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கீங்க? எல்லாம் வயசு காலம். எப்படியாவது போங்க. இவ்வளவு நேரமாக இரண்டு பேரும் வரக் காணுமே என்று துடிச்சுக் கிட்டுக் கிடந்தேன். சாயந்திரம் ஏதோ போனால் போகுது. வீட்டிலேயே அடைச்சு வைத்திருக்கக் கூடாதுன்னு வெளியே அனுப்பறேன். இனி மேல் இருட்டின பிறகு நீங்கள் எங்கேயும் வெளியே இருக்கக் கூடாது. இந்த இருட்டிலே உங்களைத்தான் தேடிக் கிட்டு வருகிறேன். என் மகன் இருவரும் கூட வெளியே கிளம்பி விட்டாங்க. உங்களுக்கு நேரம் போவதுகூடத் தெரியல்லே போலிருக்கிறது!" என்றாள்.

"சும்மாத்தான் ஏதோ பேசிக்கிட்டிருந்தோம்" என்று சொல்லி விட்டு எழுந்தாள் அஞ்சுகம். அதை விஜயரங்கனும் ஆமோதித்தான். (தொடரும்)

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited.
Managing Editor: T. Sadasivam.

## வியர்வை நாற்றங்களுக்கும் சாதாரண சரும நோய்களுக்கும் விஞ்ஞானம் தரும் புத்தம்புதிய பதில்...

# ஆக்டமர்

**இந்தியாவிலேயே ஓர் அழகுசாதன சோப்பில் இப்போது உள்ளது!**

நீராடும் ஒவ்வொரு முறையும் சருமத்துக்குப் பராமரிப்பு! ஆக்டமர் அடங்கியுள்ள காரணத்தால்தான் பியர்ஸ் டாய்லெட் சோப் அத்தகைய பராமரிப்பை உங்களுக்கு அளிக்கிறது. மான்ஸான்டோ கம்பெனியின் 'ஆக்டமர்' என்பது அதிநூதனமாக சிருஷ்டியாகியுள்ள ஓர் சருமக் கிருமிநாசினி—வியர்வை நாற்றம், முகப்பரு போன்ற பற்பல சாதாரண சரும நோய்களுக்குக் காரணமான, கண்ணுக்குப் புலப்படாத கிருமிகளையும் ஒழிக்கவல்லது.
அமெரிக்க மெடிகல் அஸோஸியேஷனும் அதிகார பூர்வமாக அங்கீகரிக்கப்பட்டுள்ளது 'ஆக்டமர்'

நறுமணமுள்ள பியர்ஸ் டாய்லெட் சோப்பை நீங்கள் உபயோகித்துப் பார்ப்பதற்கு இதுவே உற்ற தருணம். தவறாமலும் இடைவிடாமலும் 3 வாரங்கள் மட்டும் உபயோகித்தாலே, கிருமிகளினின்று கிட்டத்தட்ட விடுதலை பெற்ற சருமம் உங்களுடையதாகிவிடும். வியர்வை நாற்றங்களினின்றும் சாதாரண சரும நோய்களினின்றும் அற்புதமான பாதுகாப்பு என்றும் அதுதான்!



தனிச் சிறப்பு வாய்ந்த அழகுசாதனசோப் இதுவே. இதுவே **பியர்ஸ்** சோப்!

BL. 4-50 TM லண்டனிலுள்ள இரசக்பிக் கம்பெனி லிமிடெட்டுக்காக இந்தியாவில் தயாரித்தது

